# கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன

1. தொல்லியல் மற்றும் வரலாறு
2. மொழி மற்றும் கல்வெட்டுகள்
3. தமிழகக் கட்டடக்கலை மற்றும் சிற்பங்கள்
4. பயணக் கட்டுரைகள்
5. புகைப்படங்கள்
6. மரபுசார் நிகழ்வின் தொகுப்புகள்
7. பாரம்பரிய உணவுகள்
8. செயற்பாட்டாளர்கள் மற்றும் அறிஞர்களின் நேர்க்காணல்
9. வாழ்வியல் கட்டுரைகள்
10. பாரம்பரியக் கலைகள்
11. புத்தக விமர்சனம்
12. மரபுசார் பயிற்சி நிகழ்வுகள்
13. வரலாற்று சின்னங்கள் சிதைவு, மீட்பு மற்றும் விழிப்புணர்வு பற்றிய செய்திகள்
14. தமிழக இனக்குழுக்கள் பற்றிய அறியத் தகவல்கள்.
15. ஓவியங்கள்.
16. பாரம்பரிய விவசாயம் மற்றும் கால்நடை பராமரிப்பு.
17. பாரம்பரியத் தொழில்கள்
18. விழாக்கள்
19. ஊர் வரலாறு
20. வரலாற்று முகங்கள்
21. சமயம் மற்றும் இலக்கியம்.

Email: news@heritager.org



ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை.

# ஹெரிட்டேஜர் தமிழ்

தேடித் தெரிந்து தெளிவுருவோம்

பயணம் : 1 பதிவு : 3

"ஹெறிட்டேஜர் தமிழ்" இதழினை, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சார்பாக, மின்னிதழாக வெளியிடுவோர், இராஜசேகர் பாண்டுரங்கன்.

நிர்வாக ஆசிரியர்: ரா. வித்யாலட்சுமி
பொறுப்பாசிரியர்: பா. இராஜசேகர்
துணை ஆசிரியர்: கா. விசயநரசிம்மன்

முந்தய இதழ்கள்: goo.gl/AeBzaa

கட்டுரைகளை அனுப்ப: news@heritager.org
அமைப்பில் இணைய: goo.gl/OylfgB

முகநூல் பக்கம்: Heritager.Tamil
முகநூல் குழு: HTReader

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே. மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.

ஹெறிட்டேஜர் தமிழ் இதழ்,
தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107
தொலைப்பேசி: 9786068908
feedback@heritager.org
www.heritager.org

## கட்டுரைகள்





வணக்கம்,

நமது தமிழக மரபுசார் ஆர்வலர்கள் குழு ஆரம்பித்து மூன்று வருடங்கள் ஆகின்ற வேளையில், நமது குழுவானது மாவட்டம் தோறும் உள்ள மரபுச் சின்னங்களைக் காக்க விருப்பமுள்ள ஆயிரம் மரபு தன்னார்வலர்களின் பட்டியலைத் திரட்டியுள்ளது. தளி அமைப்பின் முயற்சியால் உருவாக்கபட்ட இத்திட்டத்தில் இணைந்த மாவட்டம் வாரியாக உள்ள வரலாற்று ஆர்வலர்களை சந்திக்கும் விதமாக மரபுநடைகள், மரபு முகாம்களை நடத்தி வருகின்றோம்.

2015 ல் சென்னையில் நடந்த வரலாற்று ஆர்வலர்களின் சந்திப்புக்கு பிறகு, சென்னை, சேலம், திருச்சி, கோவை, திருநெல்வேலி, மதுரை, திருவண்ணாமலை மண்டலங்களில் உள்ள மரபுசார் ஆர்வலர்களைச் சந்தித்து மாவட்டம் தோறும் உள்ள உள்ளூர் மரபுக் குழுக்களை ஏற்படுத்துவது குறித்து பற்றிய விழிப்புணர்வுச் சந்திப்புகளை நமது அமைப்பு நிகழ்த்தியுள்ளோம்.

திருச்சி லால்குடியில் நமது அமைப்பு சார்பாக நடந்த மரபுநடையில் எனக்கு காலுடையவே அடுத்த ஆறு மாதங்களுக்கு நடக்க முடியாமல் போனது. இதன் காரணமாக உடல் பெருத்து பல பாதிப்புகள் ஏற்பட்டு மருத்துவர்களின் அறிவுரைக்கென களத்தில் செயல்படமுடியாமல் போனது. இதன் பிறகு குழு ஒருங்கிணைப்பாளராக மற்ற மாவட்டங்களில் ஆர்வலர்களைச் சந்தித்து புதியக் குழு உருவாக்குவதை நிறுத்திக்கொண்டோம். பிறகு குழு செயல்படத் தேவையான கட்டுரை உதவிகள் மற்றும் ஆலோசனைகள் மட்டும் தர இயன்றது.

அதற்குள்ளாக பல மாவட்டங்களில் ஆர்வலர்கள் தன்னிச்சையான குழுக்களை ஆரம்பித்து அல்லது மற்ற சில செயல்பாட்டாளர்கள் நமது குழுவில் இருந்து விலகி வேறு குழுக்களுடன் இணைந்து தங்கள் பணியை மேற்கொள்ள ஆரம்பித்தனர். எனவே சென்னை மற்றும் கோவை மண்டலக் குழுக்களையும் அவ்வாறே தன்னிச்சையாக இயங்க வேண்டும் நான் வேண்டுகோள் விடுத்தும் அவர்கள் தொடர்ந்து தமிழக மரபுசார் ஆர்வலர்கள் அமைப்பின் பெயரில் செயல்பட்டு வர விருப்பம் தெரிவித்தனர்.

எனவே, தொடர்ந்து அமைப்பில் பங்குக் கொண்ட ஆர்வலர்களைக் செயற்குழு உறுப்பினர்களாகக் கொண்டு “தமிழக மரபுசார் ஆர்வர்கள் குழு” 2017 ஆம் ஆண்டு “தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கமாக” பதிவு செய்யப்பட்டது.

எனது மனைவியும், நமது குழுவின் பொருளாளருமான திருமதி. வித்யா லட்சுமி அவர்களுக்குப் பிரசவத்தில் ஏற்பட்ட பிரச்சனையால் எங்களது முதல் குழந்தையை இவ்வருடத்தில் துவக்கத்தில் இழந்தோம். எங்கள் பக்கத்தில் ஏற்பட்ட இந்த இழப்பு இம்முறை ஈடு செய்யமுடியாத ஒன்றாக அமைந்துவிட்டது. ஆனாலும் தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கத்தின் மிக முக்கியக் குறிக்கோளான ஆர்வலர்களை இணைத்து மின்னிதழை வெளியிடும் எங்களின் நீண்ட நாள் திட்டமே துக்கத்திலிருந்து விரைவில் மீண்டு வரச் செய்தது.

ஒரு அமைப்பை ஒருங்கிணைக்க வேண்டுமெனில், இவையெல்லாம் பெரிய விசயமாகக் கருத இடமில்லை என்றாலும், கடந்த மூன்று ஆண்டுகளில் ஏற்பட்ட பல சவால்களும், வலிகளும் சாதாரண மனிதனாகவே என்னை துவள வைத்து, மீண்டும் எழுந்து இயன்ற முறையில் இவ்வமைப்பை அதன் இலக்கை நோக்கி நகர்த்தி வந்துள்ளோம்.

அதனால் எல்லா விஷயங்களிலும், தமிழக மரபுசார் ஆர்வலர்கள் அமைப்பு புது விஷயங்களை முன்னெடுத்தாலும், செயல்பாடுகள் சற்றுத் தாமதமாகவே நடைபெற்று வருகின்றது. இது சிலருக்கு கண்டிப்பாக சலிப்பை ஏற்படுத்தி இருக்கும். இருப்பினும், மின்னிதழ் மூலம் வரலாறு மற்றும் மரபுசார்ந்த விஷயங்களில் தேடலை அதிகரித்து, பங்கேற்பாளர்களை கட்டுரையாளர்களாக முன்னிறுத்தி வருகின்றோம்.

எவ்வளவு காலம் எனத் தெரியவில்லை... இம்முயற்சி தொடரும்.... நன்றி!!!

**பா. இராஜசேகர்**
**பொறுப்பாசிரியர**



# நீர்நிலைகள் பராமரிப்பின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கும் கல்வெட்டு

கி. ஸ்ரீதரன் (தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை)



காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள உத்திரமேரூர் என்ற ஊர் சிறந்த வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகத் திகழ்கிறது. பல்லவ அரசர்கள் காலத்தில்அமைக்கப்பட்ட இந்த ஊர் சோழ மன்னர்கள் காலத்தில் மேலும் சிறந்து விளங்கியது. இவ்வூரில் உள்ள வைகுண்ட பெருமாள் கோவிலில் காணப்படும் பராந்தக சோழனது கல்வெட்டில் குறிக்கப்படும் “குடவோலை” முறை அக்காலத்தில் இருந்த கிராம நிர்வாக அமைப்புமுறை பற்றி அறிந்துகொள்ள உதவுகிறது. அவ்வூரின் மேற்கில் உள்ள “வைரமேக தடாகம்” என்ற ஏரி எவ்வாறு தூர்வாரி, ஆழப்படுத்திப் பராமரிக்கப்பட்டது என்பதைக் கல்வெட்டுகளினால் அறிய முடிகிறது. நீர் நிலைகளைப் பண்டைய நாளில் எவ்வாறு சிறப்பாகப் போற்றிப் பராமரித்தனர் என்பதற்கு உத்திரமேரூர் சிறந்த எடுத்துகாட்டாக விளங்குகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த உத்திரமேரூலிருந்து காஞ்சிபுரம் செல்லும் வழியில் சுமார் 2 கிலோமீட்டர் தொலைவில் சோமநாதபுரம் என்ற பகுதி அமைந்துள்ளது. இப்பகுதியில் “பார்ப்பனர்குளம்“ என்று அழைக்கப்படும் குளம் மிகவும் மண்மேட்டிட்டுத் தூர்வாராமலும், ஆக்கிரமிப்புகளினால் பாழ்பட்டும் இருந்தது.

“சேவாலயா” என்ற அமைப்பு ஹுண்டாய் க்ளோவில் நிறுவனத்துடன் இணைந்து உத்திரமேரூர் பேரூராட்சி உதவியுடன் இக்குளத்தைத் தூர்வாரிச் சுற்றுச்சூழலைப் பாதுகாக்கும் பணிகளை மேற்கொண்டது. குளத்தைச் சுற்றிலும் சூரிய மின்சக்தியில் இயங்கும் விளக்குகள் பொருத்தப்பட்டுள்ளன.

இக்குளத்தினைத் தூரெடுத்து ஆழம் செய்யும் பொழுது, குளத்தின் மேற்குப் பகுதியிலும், கிழக்குப் பகுதியிலும் கற்கள் போடப்பட்டுப் படித்துறைகள் அமைக்கப்பட்டிருந்தது வெளிப்படுத்தப்பட்டது. மேற்குப்பகுதியில் படித்துறை சரிவாகக் குளத்திற்குள் இறங்குவது போல அமைக்கப் பட்டுள்ளது.இத்தகைய அமைப்பு கால்நடைகளான மாடு, ஆடுகள் சரிவான படித்துறையில் இறங்கி நீர் அருந்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட அமைப்பாகும். காஞ்சிபுரம் செல்லும் வழியில் இக்குளம் அமைந்திருப்பதால் வண்டிகளை இழுத்துச் செல்லும் மாடுகள் மற்றும் கால்நடைகள் எளிதாக இறங்கிக் குளத்து நீரை அருந்த இத்தகைய அமைப்பு ஏற்பட்டிருக்க வேண்டும்.

குளத்தின் மேற்குப் பக்கத்தில் உள்ள படித்துறையின் இருபக்கங்களிலும் மண் சரிந்துவிடாமல் இருக்கக் கற்களை அடுக்கி வைத்துள்ளனர். இக்கற்களில் ஒன்றில் கோயிலின் அடித்தளம் (அதிட்டானம்) பகுதியில் அமைந்திருக்கும் முப்பட்டக வடிவிலான குமுதவரியில் கல்வெட்டு காணப்படுகிறது. கோயிலுக்குரிய கட்டுமான கற்களும் இப்பகுதியில் காணப்படுகிறன.

கல்வெட்டு பொறிக்கப்பட்ட கல் ஏதாவது ஒரு கோயிலைச் சேர்ந்திருக்க வேண்டும்.

முப்பட்டக குமுதவரியில் காணப்படும் கல்வெட்டு பல்லவ மன்னன் கம்பவர்மனின் காலத்தைச் சேர்ந்ததாகும். இம்மன்னன் உத்திரமேரூர் கோயில்களுக்கும் வரமேக தாடகம் என்ற ஏரிக்கும் பெரிதும் தொண்டு செய்துள்ளான். குளக்கரையில்

காணப்படும். கல்வெட்டு கம்பவர்மனின் 26வது ஆட்சி ஆண்டு கல்வெட்டாகும். உத்திரமேரூரைச் சேர்ந்த எண்ணெய் வணிகக்குழுவைச் சேர்ந்த சங்கரப்பாடியார் காஞ்சிபுரத்துக் கச்சிப்பேட்டு அரையன் பரமயன் அய்யன் என்பவர் அய்யன் ஸ்ரீ கோயிலையும் மண்டபத்தையும் எடுப்பித்ததாகக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. சங்கரப்பாடியார் குழுவினர் சொல்ல உத்திரமேரூர் சதுர்வேதிமங்கலத்து உத்திரமேரூர் பெருந்தச்சன் இக்கல்வெட்டினைப் பொறித்தான் என்பதை அறிகின்றோம். இக்கல்வெட்டினைப் படித்து இக்கருத்துக்களைத் தொல்லியல் துறையைச் சேர்ந்த முனைவர் சு. ராசகோபால் முனைவர் நா. மார்க்சியக் காந்து ஆகியோர் கூறினார்கள்.

சீர் அமைக்கப்பட்ட குளத்திற்கு வடக்கே சிவலிங்கமேடு என்ற பகுதியை ஆய்வு செய்தபொழுது சற்று மேடான பகுதியில் அழகிய வேலைப்பாடுகள் மிக்க நந்தியின் கற்சிற்பமும், சிவலிங்கத்தின் (எட்டுப்பட்டைகொண்ட) அடிப்பகுதியான ஆவுடையாரும் காணப்பட்டன. குளத்தில் காணப்படும் கல்வெட்டு குறிப்பிடும் அய்யன் ஸ்ரீ கோயில் என்பது இதுவாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

இப்பகுதியும் குளக்கரையில் காணப்படும் கற்களையும் ஆய்வு செய்தால் மேலும் கல்வெட்டுகள், வரலாற்றுசெய்திகள் கிடைக்க வாய்ப்புள்ளது.

களஆய்வு: கி. ஸ்ரீதரன், தொல்லியல் துறை கண்காணிப்பாளர, தமிழகதொல்லியல் துறை (பணி நிறைவு)

ஆய்வு உதவி: சேவாலயா வி. முரளீதரன், இயக்குநர், மா. கேசவன், பாலாஜி - உத்திரமேரூர்





## உத்திரமேரூர் கல்வெட்டு வாசகம்:

**1. ஸ்வஸ்திஸ்ரீ கம்பவர்மருக்கு யாண்டு இருபத்தாறாவது உத்திரமேரூர் சதிர்வேதி மங்கலத்து சங்கபாடி [அய்]**
**2.. யன் சீகோயிலும் மண்டகமும் கச்சிப்பேட்டு பரமந் சங்கரப்பாடி அரையன் தேய பரமண்ய [ன் செ]**
**3. ய்வித்த அய்யன் ஸ்ரீகோயிலும் மன்கமும் ப[நனா]ட்டுப் பலபறிய மண்டகமாக பேர் சாத்திநோம்**
**4. உத்திரமேரூர் சதிர்வேதி மங்கலத்து சங்கரப்பாடி [ஸபையோம்] இவர்கள் சொல்ல சபை**
**5.தச்சந் உத்தர மேருச் சதிவேதி மங்கலத்து உத்தமேருப்பெருநதச்சநேன்.**

பல்லவமன்னன் கம்பவர்மன் கி.பி காலத்தில் கச்சிப்பேட்டு காஞ்சிபுரம் சேர்ந்த எண்ணெய் வணிகர்கள் அய்யன் ஸ்ரீ கோயிலை எழுப்பியிருகிறார்கள். அக்கோயிலிருந்த கட்டுமானத்தில் முப்பட்டை குமுத வரியில் உள்ள கல்வெட்டு இது. உத்திரமேரூர் சங்கரப்பாடி சபையிற் சொல்ல உத்திரமேரூரைச் சேர்ந்த உத்திரமேரூர்ப் பெருந்தச்சன் என்பவர் இக்கல்வெட்டினைப் கல்லில் பொறித்துள்ளார்.

இப்பகுதியை ஆய்வு செய்தால் மேலும் பல கல்வெட்டுகள் கோயிலின் கட்டடப் பகுதிகள் கிடைக்கக்கூடும். தொல்லியல் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் சு. ராஜகோபால் முனைவர் மார்க்சீயக் காந்தி ஆகியோர் உதவியுடன் இக்கல்வெட்டு படிக்கப்பட்டது.

இக்கல்வெட்டு குறித்த ஆய்வறிக்கை தமிழ் நாடு அரசு தொல்லியல் துறைக்கு என்னால் அனுப்பட்டுள்ளது.

# வெந்தயக்களியும், கஞ்சியும்

பெ. தாமரை



வெந்தயம் பொதுவாக நமது உடல் சூட்டைக் குறைக்கும் உணவுப்பொருளாகவும், சமையலுக்கு நறுமணப் பொருளாகவும் ஆதிகாலந்தொட்டே பயன்படுத்தப்பட்டு வருகிறது. இன்றும் நமது தமிழகத்தில் பலர் வெந்தயத்தை வெறும் வயிற்றில் சாப்பிடும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

பொதுவாகவே வெந்தயம் நமது அன்றாட உணவில் இடம்பெறும் ஒரு சிறந்த மருந்துப்பொருள்.

வெந்தயத்தை முதல்நாள் இரவே ஊறவைத்துத் தலையில் தேய்த்துக் குளிக்கும் வழக்கமும் நம்மிடையே உள்ளது. இதனால் உடல் சூடு குறைவதுடன், தலைமுடி வளர்வதற்குச் சிறந்த ஊக்கியாகவும் உள்ளது. வெந்தயத்தைத் தேங்காய் எண்ணெயில் காய்ச்சிக் குளிக்கும் வழக்கமும் உள்ளது.

மேலும் குளியல் பொடி அரைக்கும்போது வெந்தயமும் ஒரு நறுமண மற்றும் மருந்துப் பொருளாக சேர்த்துக் கொள்ளப்படுகிறது. வெந்தயம் இவ்வாறு நமக்குப் பலவகையில் பயன்படுகிறது.

நம்மூர்ப்புறங்களில், முன்பு சீராக வழக்கத்தில் இருந்து, இப்போது வாழ்க்கை மாற்றத்தினால் நம்மிடம் மறைந்துள்ள உணவு வகைகளில் வெந்தயக்களியும், வெந்தயக் கஞ்சியும் ஒன்று. ஆனால் இன்றும் கிராம மக்களிடம் வழக்கத்தில் இருந்துதான் வருகிறது. பொதுவாக இந்த உணவை எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் நாள்களில் செய்து உண்பது வழமை. எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டு வந்ததும் சுடச்சுட வெந்தயக்களி அல்லது கஞ்சி சாப்பிட்டவர்கள் அதன் சுவையையும், பயனையும் மறக்கமாட்டார்கள். இந்த இரு உணவுகளின் செய்முறையை இங்குப் பார்க்கலாம். பலருக்கு இதன் செய்முறை தெரிந்தாலும், சமையலில் புது முகங்களுக்கு இந்தக் குறிப்பு உதவும் என்று நம்புகிறேன்.

வெந்தயக்களி (இருவர்க்குப் போதுமான அளவு)
தேவையான பொருட்கள்

1. புழுங்கல் அரிசி - 3 வீசம் (3 கிண்ணம்)
2. வெந்தயம் - 1/2 வீசம் (1/2 கிண்ணம்)
3. கருப்பட்டி/ வெல்லம் - தேவையானளவு
4. உப்பு - 1/4 தேக்கரண்டி

செய்முறை:

1. வெந்தயம் மற்றும் அரிசியை நான்கு மணிநேரம் ஊற வைத்துக்கொள்ளவும். வெந்தயத்தை நன்றாக பொங்குமளவுக்கு அரைத்துப் பின் அதனுடன் அரிசியையும் சேர்த்து மைய (குறுணை இல்லாமல்) அரைத்துக்கொள்ளவும்.

2. நான்கு கிண்ணம் அளவிற்குத் தண்ணீரை ஒரு கனமான அடிகொண்ட அகலமான பாத்திரத்தில் கொதிக்க வைக்கவும். கொதிக்கும் நீரிலேயே

உப்பையும் சேர்த்துக்கொள்ளலாம்.

3. அரைத்து வைத்துள்ள களிக்கான மாவை நீரில் கலந்துகொண்டு, நன்றாகக் கொதித்துக்கொண்டுள்ள நீரில் சிறிது சிறிதாகச் சேர்த்து மிதமான சூட்டில் கிளறிவிட்டுக்கொண்டே இருக்கவேண்டும். (மொத்தமாக களி மாவை நீரில் கரைத்துக் கொண்டும் அடுப்பில் வைத்துக் கிளறலாம். ஆனால் வேகச் சிறிது நேரம் எடுக்கும்). முக்கியமாக கட்டிப்படாதவாறும், அடிப்பிடிக்காதவாறும் கிளறிவிட வேண்டும்.

4. நாம் எடுத்துக்கொண்ட அளவிற்கு 10 முதல் 15 நிமிடங்களுக்குள் களி வெந்து அதன் பதத்திற்கு வந்துவிடும். நீரின் அளவு சிறிது கூடியிருந்தால் ஓரிரு நிமிடங்கள் கூடப்பிடிக்கும்.

5. களி அதன் பதத்திற்கு வந்துவிட்டதா எனத் தெரிந்துகொள்ள விரலை நீரில் நனைத்துக் களியின் மேற்பரப்பில் தொட்டுப்பார்த்தால் விரலில் ஒட்டாமல் இருக்க வேண்டும்.

6. வெந்த களியை அடுப்பிலிருந்து இறக்கி இலையில் அல்லது தட்டில் சூடாக வைத்து நடுவில் குழி செய்து கருப்பட்டி அல்லது வெல்லப்பாகை ஊற்றிப் பறிமாறலாம்.
விருப்பப்பட்டவர்கள் பாகுடன் நல்லெண்ணெய் அல்லது நெய் சேர்த்தும் சாப்பிடலாம். மணமும் சுவையும் கூடும்.

7. மேலே சொன்னது போல் அல்லாமல் களி வெந்தவுடன் பாகைக் களியுடன் அடுப்பிலேயே வைத்துக் கிளறி, ஏலப்பொடி சேர்த்தும் பரிமாறலாம்.

8. கருப்பட்டி/ வெல்லப்பாகு தயார் செய்ய சிறிதளவு நீரில் சீவி வைத்துள்ள கருப்பட்டியைச் சேர்த்துக் கரைந்தவுடன் ஒரு கொதி வந்ததும் இறக்கி விடவும். (பாகின் அடர்த்தி உங்கள் விருப்பப்படி). விருப்பமுள்ளவர்கள் ஏலப்பொடியையும் பாகுடன் சேர்த்துக்கொள்ளலாம். கருப்பட்டி/வெல்லத்தைப் பாகாகக் காய்ச்சி வடிகட்டிச் சேர்ப்பதினால் அதில் மண்ணிருந்தால் அடியில் தங்கிவிடும், வேறு கசடு பொருட்கள் இருந்தால் வடிகட்டியில் நீக்கிவிடலாம்.

குறிப்பு:

களி கிண்டும் போதே நல்லெண்ணெய் சேர்த்துக் கொண்டால் மணமாக இருக்கும். ஆனால் கட்டாயமில்லை.

வெந்தயக்கஞ்சி (இருவர்க்குப் போதுமான அளவு)
தேவையான பொருட்கள்:

1. பச்சரிசி/ புழுங்கலரிசி - அரைக்காப்படி (ஒரு கிண்ணம்)
2. வெந்தயம் - 2 தேக்கரண்டி
3. பூண்டு - 10 பல் (விருப்பப்படி கூடக்குறையச் சேர்த்துக்கொள்ளலாம்)
4. உப்பு - தேவைக்கேற்ப
5. தேங்காய் - அரைமூடி

செய்முறை:

1. அரிசி, வெந்தயம், பூண்டு ஆகியவற்றை ஒன்றாகச் சேர்த்து நான்கு கிண்ணம் நீர் சேர்த்துக் குழைவாக வேகவிட வேண்டும் (விருப்பம் உள்ளவர்கள் சீரகம் சேர்த்துக் கொள்ளலாம்).
2. கஞ்சி வெந்ததும் அதனுடன் உப்பு, தேங்காய்த்துருவலை (அல்லது கெட்டியான தேங்காய்ப்பால்) சேர்த்துச் சுடச்சுடப் பரிமாறலாம்.
3. கஞ்சிக்குத் தேங்காய்/ புதினா/ கொத்தமல்லித் துவையல் மிக ருசியாக இருக்கும்.

குறிப்பு:
கஞ்சி வெந்ததும் கிண்ணத்தில் ஊற்றி அருந்துவதாக இருந்தால் அதற்கு ஏற்றவாறு சூடான நீரைச் சேர்த்துக்கொள்ளலாம். தேங்காய்ப்பால் சேர்ப்பதாக இருந்தால் அதற்கு ஏற்றவாறு பார்த்துக் கொள்ளவும்.



# தமிழக நாணயங்களும் சாதனைகளும்

## - திரு. மன்னர் மன்னன் (உரை)



தமிழ் இணைய கழகத்தின் மாதாந்திர சொற்பொழிவில், 'நாணயவியல் ஒரு அறிமுகம்' என்ற தலைப்பில் இரா. மன்னர் மன்னன் அவர்களின் உரை நிகழ்த்தப்பட்டது. குறுகிய நேரத்திற்குள் மிக அழகாக மிகப் பெரிய வரலாற்றைச் சொல்லிமுடித்துவிட்டார் நாணய ஆராச்சியாளர் திரு. மன்னர் மன்னன். எனக்கு நாணயவியல் பற்றிய ஆய்வுகள் புதிது, எனினும் அவரின் தெளிவான சொற்பொழிவின் மூலம் நிறைய தகவல்களை அறிந்துகொள்ள முடிந்தது. அவருடைய உரையில் நான் அறிந்தனவற்றை இங்கு தொகுத்திருக்கிறேன்.

முதலில் மிகத் தெளிவாய், காசுகள் பற்றிய தமிழகத்தின் பதிப்புகளைப் பற்றிய செய்தி. சங்க காலந்தொட்டு பதினேழாம் நூற்றாண்டுவரை தமிழகத்தில் எவ்வளவு காசுகள் இருந்தன, அவற்றை எந்தெந்த ஆட்சியாளர்கள் என்ன காரணங்களுக்காய் வெளியிட்டனர் என்பதை விளக்கினார். தமிழகத்திற்கு இரண்டாயிரம் ஆண்டு நெடிய வரலாறு , நாணயவியல் துறையில் உள்ளது.

நாணயவியல் பற்றிய தகவல்கள் எதற்கெல்லாம் பயன் தருகின்றது என்று பார்த்தால் ,

1. வடிவம் - ஆரம்பக் காலத்தில் சதுர வடிவ, செவ்வக வடிவ காசுகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டன. வட்ட வடிவ காசுகள் பிற்காலத்தில் புழக்கத்திற்கு வந்தவை.
2. உலோகம் - ஈயம் - பேரரசுகள் வெளியிட்டவை, தங்கம் - மன்னர்கள் வெளியிட்டவை, வெள்ளி - ஓரளவு செழிப்பான இடங்கள்.
3. உருவம் - காசுகளில் சில உருவங்கள் வடிக்கபடுகின்றன, இவை காசுகளை வெளியிட்ட மன்னர்களின் போர், திருமண உறவுகள் பற்றிய தகவல்களைத் தருகின்றன
4. எழுத்துகள் - காசுகளில் உள்ள எழுத்துகளில் மன்னர்களின் பெயரைப் பார்க்க முடிகிறது . அதைக் கொண்டு வரலாற்றுத் தகவல்களை அறிந்துகொள்ள முடிகிறது.
5. இடம் - மேலும் காசு எங்கு கிடைக்கிறது என்பதை வைத்து, அதன் காலத்தைக் கணிக்க முடியும். நாடுகளுக்குள் இருந்த உறவுகளை அறிந்துக்கொள்ளவும் இது உதவுகிறது.

இந்தியாவில் அதிக அளவில் நாணயங்கள் புழங்கிய இடம் தமிழகம். காசு என்ற வார்த்தை முதலில் பணத்தைக் குறிக்கவில்லை. காசு என்பது உருண்டையாக உள்ள மணியைக் குறிக்கும். வர்த்தகம் வழியாக கிரேக்கர்கள் தந்த நாணயங்களைக் கோத்துக் காசு மாலையாக, அணிகலனாக அணிந்துகொள்கின்றனர். அதன் பிறகே காசு என்பது நாணயத்தின் பெயராக மாறியுள்ளது.

இன்றும் பதினைந்து ஐரோப்பிய நாடுகளில் Cash /காசு என்ற வார்த்தை உபயோகத்தில் உள்ளது. தமிழக நாணயவியலின் வரலாறு 1868, பிறகு ஆங்கிலேயர்களின் ஆட்சிக் காலத்தில் முற்று பெறுகிறது. அதற்குப் பிறகு தமிழகத்தில் நாணயங்கள் ஏதும் அச்சடிக்கப்படவில்லை.

நாணயவியல் சம்பந்தப்பட்ட சில சுவையான நிகழ்வுகளைப் பகிர்ந்துக்கொண்டார். அண்ணாதுரை அவர்களின் பெயரில் நினைவு நாணயம் வெளியிட்ட போது அதில் 'அண்ணாதுரை' என்று அவருடைய கை எழுத்து அச்சானது.

1. சங்ககாலக் காசுகள் -

சங்ககாலச் சேரர்கள்

சங்ககாலச் சேரர் காசுகளில், ஒருபுறம் யானையும், மறுபுறம் சேரர்களின் கொடியில் உள்ள வில்லம்புக் குறியும் உள்ளது. சில காசுகளில் அம்பு பூட்டிய வில்லும், சில காசுகளில் வில் மட்டுமேயும் காணப்படுகின்றன. முக்கியமான காசு என்று ஒரு காசை விவரிக்கையில், "Compound





Bow" "சுருள் வில்" என்று ஒரு வகை வில்லை ஒரு காசில் காண்பித்தார். அது சிறிய அளவை உடையது, மடித்துக்கொள்ளக் கூடியது , மேலும் குதிரையில் பயணித்துக் கொண்டிருக்கும்போது அம்பைப் பூட்டி எய்யக் கூடிய அம்பு ஒன்று காசில் காணப்படுகிறது. பிற்காலத்தில், செங்கிஸ்கானின் பல வெற்றிகளுக்கு மூலக் காரணமான இவ்வகை வில் அமைப்பு முறையை, அவர்களுக்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே நமது சேரர்கள் பயன்படுத்தினர் என்பது கூடுதல் தகவல்.

சங்ககாலச் சோழர்கள்

சோழர்களின் காசுகளில் ஒரு புறம் புலியும், மற்றொரு புறம் யானை , ஸ்ரீவத்சம், வெண்கொற்றக் குடை, அங்குசம் போன்றவை உள்ளன. "காவல் மரம்" இவை அரசருக்கான மரம் என்று சொல்லப்படுகிறது. மிக சிரத்தையாக பாதுக்காக்கப்பட்ட மரம். இதன் உருவமும் ஒரு காசில் உள்ளது. சங்ககாலக் காசில் ஸ்ரீவத்சம் போன்ற உருவம் உள்ளது. இது வளமைச்சின்னங்களின் ஒன்றாகும். அடையாளங்களில் ஒன்றாகும்.

சங்ககாலப் பாண்டியர்கள்:





பாண்டியர்களின் காசுகளில் மீனின் சின்னம் சிறிய, பெரிய அளவில் காணப்படுகிறது. முதலில் செம்பிலும், பிறகு வெள்ளியிலும் காசுகள் வெளியிடப்பட்டுள்ளன. "எண் மங்கள சின்னம்" - எட்டு மங்கள சின்னங்கள் உள்ளன, "Darin" இது எருமையின் தலையைக் குறிக்கும் குறியின் பெயர். பேச்சாளரின் கூற்றுப்படி இந்தச் சின்னம் ஒன்றரை இலட்சம் ஆண்டுகள் பழமையான சின்னம். சில காசுகளில், ஆறு சதுரங்களைக்கொண்ட தொட்டி உள்ளது, அது விவசாயத்தின் சின்னம். யானைகள், மீனின் கோட்டுருவமும், மலைகளின் முகடும் காணக்கிடைகின்றன.

1. மலையமான் காசுகள்

மலையமான்கள் வாழ்ந்த பகுதிகளில் யானைகள் அதிகம் காணப்படவில்லை, அதற்குப் பதில் குதிரைகள் அதிக பயன்பாட்டில் இருந்துள்ளன. அதை அவர்களின் காசுகளைக்கொண்டு அறிய முடிகிறது. அவர்களின் காசுகளில் குதிரைகளும், "வேள்வித் தொட்டி", குதிரைக்கு உணவு அளிக்கும் தொட்டி ஒரு புறமும், மறுபுறம் மலையமான் நாட்டின் வரைபடமும் உள்ளன. ஒவ்வொரு காசிலும் அவர்களின் வரைபடங்கள் உள்ளன. சில காசுகளில் அங்குசமும், கோலும் காணப்படுகின்றன.

## ஹெறிட்டேஜர் காற்ளர்



திரு. பெரியசாமி ஆறுமுகம் திருச்சி மாவாட்டம் துறையூர் வட்டத்தில் உள்ள வரலாற்று சின்னங்கள் மற்றும் தொல்லியல் அடையாளங்கள் பற்றிய விழிப்புணர்வினை செய்து வருகின்றார். தமிழகத்தின் பண்டைய நாணயங்கள் மற்றும் தமிழர் மரபைப் போற்றும் கலைப்பொருட்களைச் சேகரித்து, பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு விழிப்புணர்வு நிகழ்ச்சிகளை ஒருங்கிணைத்து வருகின்றார்.

சுமார் 20 வருடங்களாக இவர் பல ஆய்வறிஞர்களுக்கும், ஆய்வு மாணவர்களுக்கும் களஆய்வு வழிகாட்டியாக திருச்சி மாவட்டத்தில் செயல்பட்டு வருகின்றார். தமிழக மரபுசார் ஆர்வலர்கள் குழுவில் பல்வேறு படிநிலைகளில் பங்களித்து வரும் திரு. பெரியசாமி ஒரு சிறந்த மரபு மீட்புச் செயல்பாட்டாளர் என்பதைக் கூற பெருமைக்கொள்கிறது.

பொருளாதார சிக்கல்கள் உள்ள நிலையிலும் வரலாற்றின் மீதுள்ள ஆர்வத்தால் ஙிகி வரலாறு படித்து வரும் இவரைப் போன்ற அனுபவமிக்க செயல்பாட்டாளரின் பங்களிப்புகளைத் தொல்லியல் துறையினர் அங்கீகரிக்கத்தால் வரலாற்று ஆர்வமானது அனைவரிடமும் தழைக்கும்.



2. பல்லவர் காசுகள்

பல்லவர்கள் "போடின் " என்னும் உலோகத்தினை பயன்படுத்தினர். இது மிக மெல்லியது. அரிதில் உடைந்துவிடும் தன்மை கொண்டது. பல்லவர்களின் காசுகளில் "பகாபிடுகு" என்று பொறிக்கப்பட்டடுள்ளது , அதாவது பிடுகு என்றால் மின்னல் - கிளைகளே இல்லாத மின்னல், இது இந்திரனது வஜ்ராயுதம் போன்றது என்ற பொருள் படும். நிற்கும் காளை ஒரு பக்கமும், வட்டத்தின் உள்ளே பூரண கும்பம் மற்றொரு பக்கமும் காணப்படுகின்றன. சக்கரத்தின் உள்சாவி போன்ற வடிவங்களும் உள்ளன.

3 .மூவேந்தர்கள் பிற்காலக் காசுகள் -
பிற்காலச் சேரர்கள்

இக்காலக்கட்டத்தில் நாகரி எழுத்துகள் காசுகளில் காணப்படுகின்றன. முதலை, சிலந்தி, சக்கரம், யானை , குத்துவிளக்கு, சாய்சதுர வடிவம் போன்றவை உள்ளன. மேலும், "ஈழ மனிதன்" என்று சொல்லப்படும் மனிதனின் உருவம் இக்காசுகளில் காணக்கிடைக்கிறது. இலங்கையை ஆண்ட மன்னர்களைச் சோழர்கள் வெற்றி கொண்டதன் நினைவாய் ஒரு மனிதன் நின்ற நிலையிலும், அமர்ந்த நிலையிலும் இக்காசுகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. சில காசுகளில் அந்த மனிதனின் கைகளில் சங்கு உள்ளதைப் போன்று பொறிக்கப்பட்டுள்ளது. குத்துவிளக்கு, அதன் அருகில் சூரியசந்திரர்கள், ஆயுதங்கள், "ஸ்ரீ யக்கி " என்ற பெண் தெய்வத்தின் சிலை போன்றவையும் காணப்படுகின்றன.

3. பிற்காலச் சோழர்கள்

அதிக அளவில் தங்க நாணயங்கள் வெளியிட்டவர்கள் பிற்காலச் சோழர்கள், அதிலும் முக்கியமாக இராஜராஜனும், இராஜேந்திரனும் ஆவார்கள்.




சோழர்கள் செம்பு, தங்கம், வெள்ளிக் காசுகள் வெளியிட்டனர். ஆனால் சோழர்களின் தங்கக் காசுகள் அதிக அளவில் கிடைக்கப்பெறவில்லை. உலகின் சிறந்த நாணயத் தொழில்நுட்பத்தைக் கொண்ட சோழர்கள், தங்கம் விலை அதிகமானதால் உலகில் முதன்முதலில் தங்கமுலாம் பூசும்




தொழில்நுட்பத்தில் தேர்ந்தவர்களாக இருந்தனர். இன்றும் அத்தங்க நாணயங்களில் உள்ள முலாம் பொலிவு குறையாமல் இருப்பது சோழர்களின் பல தொழில்நுட்ப ரகசியங்களுள் ஒன்றாகும்.

ஒரு எடுத்துக்காட்டுக்கு: பதினைந்தாம் நூற்றாண்டில், "ஹென்றி " முதல் முறையாக வெள்ளிக் காசுகளில், தங்கமுலாம் பூசி மக்கள் புழக்கத்திற்கு விட்டாராம், ஆனால் சில மாதங்களில் அக்காசில் அவரின் மூக்கில் இருந்த தங்கமுலாம் மட்டும் சிதைந்து, அந்த முயற்சி தோல்வியுற்றதாம். ஆனால், சோழர்களின் காசுகள் அப்படி இல்லை. மூலிகைகள் மூலம் இவை செய்யப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

இக்காசுகளில், "பாதம் காசு " என்ற சின்னம் உள்ளது, வேணாடு சேரர்களின் திருவடி சாம்ராஜ்யம், அது சோழர்களால் வெற்றி கொள்ளப்பட்ட போது அவர்கள் இந்தக் காசுகளை வெளியிட்டுள்ளனர். நாட்டைக் கைப்பற்றிய பிறகு அங்கு புழக்கத்தில் உள்ள நாணயங்களைச் செல்லாக் காசாக்கிவிட்டுப் புதிய பணத்தை வெளியிடுவது இன்றுவரை நம் நாட்டில் நடந்து வருவது சிறப்பாகும். சில காசுகளில் பாதம், மலர், மீன், ஈழ மனிதன், சங்கு, நாகரி எழுத்துக்கள், சாட்டை, வெற்றிக் காசுகள் போன்றவை உள்ளன. "யுத்த மல்லன் காசு" ராசேந்திரன் காசு இது, இதில் அமர்ந்த நிலையில் புலியும், இரண்டு பாண்டியர்களை வென்றதன் குறிப்பாய் இரண்டு மீன்கள், வில், வெண்கொற்றக் குடை, "யுத்த மல்லன்" என்ற பெயர் ஆகியனவும் காணப்படுகின்றன.

4 பிற்காலப் பாண்டியர்கள்
"கச்சி வழங்கும் பெருமாள் காசு" இது முதலாம் சடையவர்மன் காசு, இது நாட்டின் ஆட்சி மாற்றத்தை மக்களிடம் கொண்டு செல்லப் பதித்த காசு. அதாவது, அக்காலத்தில், ஆட்சி மாற்றத்தை மக்களிடம் கொண்டு செல்லக் காசுகள் பயன்பட்டன. அதிலும், இக்காசு காஞ்சியைக் கைப் பற்றி அதன் அக்கன் சாலையில் புதிய காசுகளாய் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன. இக்காசில் நின்றவாக்கில் ஒரு மீனும், படுத்தவாக்கில் ஒரு மீனும் உள்ளன. பின்பக்கம் "கச்சி வழங்கும் பெருமாள் காசு" என்று தமிழில் பொறிக்கப்பட்டுள்ளது.




மேலும் சில காசுகளில், வெண்கொற்றக் குடை, சாமரங்கள், மீன்கள், செங்கோல், ஈழ மனிதனின் உருவம், அரசர்களின் பெயர்கள் போன்றவை உள்ளன.

5. தென்னிந்திய விஜயநகர காசுகள் -

தஞ்சாவூர் நாயக்கர்கள்

இவர்களின் காசுகளில் காளை , சூரியன், சந்திரன், நாகரி எழுத்துக்கள், அமர்ந்த நிலையில் சிவன், பார்வதி, நின்ற நிலையில் திருமகள், லிங்கம் போன்றவை பொறிக்கப்பட்டுள்ளன.
உலகிலேயே அமைச்சருக்காக காசுகள் வெளியிட்டுள்ள ஒரே அரசர் தஞ்சை நாயக்கர்கள்தான்! அவர்களின் அமைச்சரான "கோவிந்த தீட்சதர் " என்பவருக்குக் காசு வெளியிட்டுள்ளனர்.

மதுரை நாயக்கர்கள்
மதுரை நாயக்கர்களின் காசுகளில் ஈழ மனிதன், இரண்டு மீன்கள், நடுவில் செண்டு, பிறை, போன்றவையும் , அரசர்களின் பெயர்களும், மதுரை என்ற பெயரும் காணப்படுகின்றன.

செஞ்சி நாயக்கர்கள்
இக்காசுகளில், வேணு கோபாலர் நின்ற நிலையிலும், தெலுங்கு எழுத்துகளும், காளை உருவமும், விஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவி உருவங்களும் காணப்படுகிறது.

6. மாவலி வாணாதிராயர் காசுகள்
இக்காசுகளில் கருடன் உருவம், தமிழ் எழுத்துகள், குடை போன்ற உருவங்கள் உள்ளன.

7. சாளுவ திருமலைராஜன் காசுகள்
இக்காசுகளில் காளை, அதன் முன்பு ஒரு குத்துவாள், பிறை மற்றும் கடாரி, பரசு, அரசனின் பெயர்களும் காணப்படுகின்றன.

8. சேதுபதிகள் காசுகள்
பன்நெடுங்காலமாக போர் மறவர்களாக மட்டுமே இருந்தவர்களை, அரச பதவியளித்துச் சேதுபதிகளாக அமர்த்தியது நாயக்கர்கள் என்ற தகவல் புதியதாகக் கிடைத்தது. காளையின் மேல் லிங்கம், அதற்கு மாலை சூட்டப்பட்டுள்ளது, மயிலின் உருவம், மனித உருவம் போன்றவை பொறிக்கப்பட்டுள்ளன.

9. ஆற்காடு நவாப்பு காசுகள்

இவர்களின் காசுகளில் "முனவர் " என்று தமிழிலும், மறுபக்கம் இரண்டு இதழ்களைக் கொண்ட மலர் ஒன்றும் உள்ளது. சிங்கம், ஆறு இதழ்களைக் கொண்ட மலர் ஒன்றும், கயிற்றில் இரண்டு முடிச்சு போன்ற அமைப்பு, புனிதப்பிறை, ஐந்து புள்ளிகள் போன்றவை உள்ளன. உலகில் முதன்முதலில் மதநல்லிணக்கத்திற்காக "முருகன் துணை" என்று வேற்று மத நாணயங்களை வெளியிட்ட பெருமை இசுலாமிய நவாப்புகளையே சேரும்.

10. மராட்டியர் காசுகள்
நாகரி எழுத்துகள் கொண்ட காசுகள், தமிழகக் கூட்டெழுத்து, சிவ லிங்கம், போன்றவை இக்காசுகளில் உள்ளன.

11. மதுரை சுல்தான்கள் காசுகள்
அரசர்களின் பெயர்களை பாரசீக மொழியில் இரண்டு பக்கங்களிலும் அச்சிட்டுள்ளனர்.

12. பிறரது காசுகள்

தமிழகத்தில் ஹோய்சாலர்களின் காசுகள், தாரமங்கலம் கட்டி முதலி காசுகள், தருமபுரி ரமணன் காசுகள், பீஜப்பூர் சுல்தானின் காசுகள், திப்பு சுல்தானின் திண்டுக்கல் காசுகள், மொகலாயர்களின் காசுகள், கிரேக்கர்களின் காசுகள், ஐரோப்பிய தமிழ்க் காசுகள், கும்பினி நாணயங்கள், ஆங்கிலேய தமிழ்க் காசுகள் , பிரஞ்சுகாரர்களின் தமிழக காசுகள், டச்சுக்காரர்களின் தமிழக காசுகள் போன்றவை பிற காசுகள் ஆகும்.

பண்டைய காலத்தில் காசுகள் வணிக மற்றும் அரசாங்க பரிமாற்றங்களுக்காக மட்டுமே பயன்பட்டது எனவும், பல நூற்றாண்டுகளுக்குப் பிறகே சாதாரண மக்களின் பயன்பாட்டிற்கு வந்தது என்பது கூடுதல் தகவல்.

உலகின் ஆறு நாடுகளுக்கு மட்டுமே நாணயவியல் வரலாறு உள்ள நிலையில் இந்திய நாணயவியல் துறையில் அதிக ஆராய்ச்சிகள் தேவைப்படுகின்றன எனவும், இத்துறையில் மாணவர்களுக்கு நல்ல எதிர்காலம் உள்ளது என்பதும் அவரின் கூற்று. அவருடைய சேகரிப்பில் இருந்து சில காசுகளைக் காட்சிக்கும் வைத்திருந்தது மிக அருமை.

மிக நெடிய தமிழக வரலாற்றை நாணயங்கள் மூலம் திரு. மன்னர் மன்னன் அவர்கள் சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறினார். அதை முடிந்த அளவிற்குச் சுருக்கி நான் இங்கு எழுதியுள்ளேன். பிழைகள் இருப்பின் அது எனது கவனக்குறைவாக மட்டுமே இருக்கலாம். (எழுத்து ரா. வித்யலட்சுமி)

# கட்டடக்காட்டில் ஒரு கானகம் ! - சென்னையைச் சுற்றி

- திவ்விய குமாரி கண்ணம்மா



மரங்களே காணாமல் போன சென்னையில், அதிலும் அடையார் போன்ற பரபரப்பான இடத்தில் ஒரு காடு உள்ளது என்று சொன்னால் நம்புவீர்களா ?
அடையாறு ஆற்றின் கரையோரம் சலனமற்றுக் கூச்சலில்லாமல், மனிதக் கரையானின் நெரிசல் இல்லாமல், நாகரிக வளர்ச்சியில் சிக்கிச் சின்னாபின்னம் ஆகாமல் தப்பித்துப் பாதுகாக்கப்பட்டுப் போதிய பராமரிப்போடு இயங்கி வருகிறது தியோசொபிகல் சொசைட்டி - தாவரவியல் பூங்கா.

இது 1875ல் அன்னி பெசன்ட் அம்மையாரால் துவங்கப்பட்டது. (அன்னிபெசன்ட் பெயராலேயே பெசன்ட் நகர் எனப் பெயர் வந்தது குறிப்பிடத்தக்கது!) மொத்தம் 260 ஏக்கர் பரப்பளவு . குறிப்பிட்ட தூரம்வரை மட்டுமே செல்ல முடியும். உரிமையாளர் வாகனங்களுக்கு மட்டுமே உள் செல்ல அனுமதி. பார்வையாளர்கள் நடந்துதான் செல்ல வேண்டும். வண்டி நிறுத்தம், குடிநீர், கழிப்பறை, ஆங்காங்கே காவலர் என பல வசதிகள் உள்ளன.

அனக்கொண்டாவைப் போல நீண்ட சாலை, தார் போடப்பட்டுள்ளது. 15 மீட்டர் நடை தூரத்திலேயே சாலையின் வண்டி சப்தங்கள் அடங்கிவிட்டன. ஏதோ ஒரு கால இயந்திரத்தில் சில நூறு ஆண்டுகள் முன்னால் போனது போல் ஒரு பிம்பம். கண்ணுக்கெட்டும் தூரம்வரை மரங்கள்தான்.

இடதுபுறம் ஒரு ஒத்தையடி பாதை , இது மண்பாதை. இரு புறமும் பெயர் தெரியாத மரங்களும் அதைத் தழுவிச் சுற்றியுள்ள கொடிகளும், பூச்செடிகளும் நூற்றுக்கணக்கானவை.

பல இடங்களில் காகிதப் பூக்கள் படர்ந்துள்ளன. பாதை கரடு முரடானது. காய்ந்து வெடிப்புவிட்ட சேறு அதில் காய்ந்த சருகுகள், அட்டை, நத்தை, ரயில் பூச்சி, சிலந்தி, இரட்டை உடல் பூச்சிகள் எனத் தரைவாழ் உயிர்கள் மேய்ந்து கொண்டே இருக்கும். கடந்து போகையில் ஒரு பழைய பிள்ளையார் கோவில். பின்புறம் எல்லை தெய்வம் போன்ற வடிவம். அந்த இடமும் கோவிலும் சற்று அச்சத்தை ஊட்டின.

அமைதியான அந்த இடத்தில் நம் பாதங்களில் மிதிபடும் சருகுகளின் சப்தம் மட்டுமல்லாமல் பல பறவைகளின் கீச் கீச், மரங்கொத்தியின் கொத்தல், கிளிகள் குயில்களின் கூவலோடு இன்னும் ஒரு சப்தம் . அது 'சலக் சலக் ' என எதிரொலிக்க ஆவலாய் துருதுருவென உள்ளே சென்றோம். அடடா ! அது அடையாறு ஆற்றின் ஓசை . வாழ்வில்

முதல் முறை ஆற்றின் ஓசையைக் கேட்கிறேன். சட்டெனக் காவிரியும் கர்நாடகவும் நினைவுக்கு வர ஒரு புகைபடம் மட்டும் எடுத்துக்கொண்டு தார் சாலைக்குத் திரும்பினோம்.

பலவகை மரங்கள் கழுத்தில் அதன் பெயர் தாங்கிய பலகைஇ எங்கிலும் தண்ணீர் குழாய்கள் ஆங்காங்கே ஏதோ பழைய கட்டிடங்கள், இடத்தின் பராமரிப்புக்குத் தண்ணீர் கால்வாய்கள் அமைக்கப்பட்டுள்ளன. இங்கு பூச்சிகள் மட்டுமின்றி கீறி இபாம்பு இகாட்டுப்பூனை, மங்கூஸ், பழம் தின்னி வெளவால்கள் என அத்தனை உயிர்களும் உள்ளன.

அதுமட்டுமின்றி இங்கு கோவில்இ மசூதி, தேவாலயம் , புத்தர் கோவில், சௌராஷ்டிரிய ஆலயம் என மதநல்லிணக்கத்தோடு சில புரியாத புதிர்களும் உண்டு.

சரி இந்தப் பாதை எங்குதான் போகிறது எனத் தேடிய எம் கண்களுக்கு அடுத்த விருந்தாய் வந்தது அடையாறு ஆலமரம். 60000 சதுர மீ கொண்ட இது இந்தியாவின் பழமையான ஆல மரங்களில் ஒன்று . தமிழ்நாட்டின் அரசியல் குடும்பங்களைப் போல எண்ணிலடங்காக் கிளைகள். இதன் வயது 450!

இதற்கு மேல் செல்ல காவலர்கள் அனுமதிக்கவில்லை. பல காதல் ஜோடிகள் இவ்விடம் வந்து அட்டூழியம் செய்வதனால் பல இடங்களுக்கு நிர்வாகம் அனுமதி மறுத்துவிட்டதாகவும் காவலர்கள் கூறுகிறனர். கைப்பேசியில் புகைப்படங்களை எடுத்துக்கொண்டு திரும்பினால் 'அம்மன் கோவிலில் பொங்க வைக்கும் பெண்ணைப் போலச் செங்காந்தள் மலர் ( தமிழீழத் தேசியமலர் ) குத்தவச்சு பூத்திருக்கா' . ஆக மொத்தம் இந்த இடம் நகர அசுரனால் அழிந்து போன சென்னையின் பழைய எச்சம்.

நீங்கள் அமைதி விரும்பியா ? இயற்கைக் காதலரா? கட்டடக் காட்டிலிருந்து தப்பித்துச் சிறிது நேரம் இயற்கையோடு வாழத் துடிக்கும் என் போன்ற சக சென்னைவாசியா நீங்கள்? அப்படி என்றால் இது உங்களுக்கான இடம் .

உலகில் பல இடங்களில் தியோசொபிகல் சொசைட்டி செயல்ப்பட்டு வருகிறது. சென்னையில் உள்ள சொசைட்டிதான் அனைத்துக்கும் தலைமையகம் ஆகும். இவர்களின் செயல்பாடு சற்று விசித்திரமாகவே உள்ளது என்றாலும் நாகரிக வளர்ச்சிக்கு முன்பு சென்னை முழுக்க இப்படிதான் இருந்திருக்குமோ என்ற ' ! ' நம்மை உறைய வைக்குது.

இயற்கையைப் பாதுகாக்க வேண்டியது நமது தலையாய கடமை. காடுகளை அழித்து நகரங்களை உருவாக்கி நாகரிகம் என்றோம். இன்று நிலத்தடி நீருக்கே அவதிபடும் நிலை வந்துவிட்டது. மனிதனாகப் பிறந்த நாம் வாழ்வில் ஒரு மரமாவது நட வேண்டும். நமது சந்ததிக்குச் சிறிது நீரை வார்த்து வைப்போம்.

இரண்டு மணி நேர நடையில் சென்னையின் முக்கிய பறவையான காகம் ஒன்றைக் கூட காணமுடியவில்லை. தியோசொபிக்கல் சொசைட்டியில் எமது பயணம் கண்ணுக்கும் மனத்துக்கும் விருந்தாகவும் சற்று திகிலாகவும் இருந்தது.





# புதுக்கோட்டையில் ஓர் வரலாற்றுச் சுற்றுப் பயணம்...

- திரு. A.T மோகன் - திரு. செல்வமணி



கடந்த வாரம் இரண்டு நாட்கள் புதுக்கோட்டையில் ஓர் வரலாற்றுச் சுற்றுப் பயணம்...

அருமை நண்பர் திரு செல்வமணி அவர்களின் நீண்ட நாள் அழைப்பினை ஏற்று சென்று இருந்தேன்...

புதுக்கோட்டை மாவட்டம் இது ஒரு வரலாற்று ஆர்வலர்களின் சொர்கம்...

குடைவரைகள், கல்வட்டங்கள், ஓவியங்கள், சிலைகள், சிற்பங்கள், சமண சின்னங்கள் , அரண்மனைகள், கோட்டைகள், வரலாற்று சிறப்பு மிக்க பழம் பெரும் கட்டிடங்கள், கோவில்கள் மற்றும் பெரிய அருங்காட்சியகம் என அனைத்தும் ஒரே வட்டத்தில், இது ஒரு அதிசயம் ஆகும்...

வெள்ளிக்கிழமை இரவு புதுக்கோட்டை பேருந்து நிலையத்தில் எனக்காக நண்பர் செல்வமணி காத்துக்கொண்டு இருந்தார், வண்டியை விட்டு இறக்கிய உடன் வழக்கமான விசாரிப்பு முடித்து மிக எளிமையான ஆனால் மிகச் சிறப்பாக கவனிக்க கூடிய ஒரு உணவகத்தில் இரவு உணவு புதுக்கோட்டை ஸ்பெசல் முட்டைமாஸ் உடன் ஸ்பெசல் ஆனியன் ஊத்தாப்பம், மற்றும் தோசை சாப்பிட்டு முடித்து , அப்போதே எங்கள் சுற்றுலா தொடங்கியது...

முதலில் இரவு ஒன்பது மணிக்கு தடி கொண்ட அய்யனார் கோயில், இது புதுக்கோட்டையின் கிழக்கு காவல் தெய்வம் ஆகும் - இங்கு அம்பாரியுடன் கூடிய பெரிய ஒரே கல்லால் ஆன அழகிய கல்யானை ஒன்று மிக கம்பீரமாக உள்ளது...

இங்கே பார்த்து விட்டு நேராக செல்வமணி அவர்கள் வீட்டில் சென்று இரவு ஓய்வு.. புது இடம் சரியான உறக்கம் வரவில்லை...

சனிக்கிழமை அதிகாலையில் நான்கு மணிக்கே எழுந்து குளித்து கிளம்பி நேராக திருமயம் கோட்டை காலை ஆறு மணிக்கு, அங்கே காப்பாளர் ஒன்பது மணிக்கு தான் அனுமதி என கூற ...

சரி என்று அருகில் திருமயம் கோட்டையின் கிழக்கே உள்ள மிகவும் புகழ்பெற்ற எண்கோண குளம் - பார்த்து விட்டு...

பிறகு தமிழகத்தின் மிகப்பெரிய சயன நிலையில் உள்ள பெருமாள் குடைவரையாம் சத்யமூர்த்தி பெருமாள் கோயில் சென்றோம், இங்கு புகழ்பெற்ற சிற்பங்கள் மற்றும் குடவரை, பார்த்து விட்டு பிறகு அருகில் உள்ள சத்யகிரீஸ்வரர் குடைவரை கோயில் சென்றோம், இங்கே தான் உலகிலேயே மிக பெரிய லிங்கோத்பவர் இக் குடைவரை கோவிலில் காட்சியளிக்கிறார்.

இரண்டு கோயிலும் பார்த்து விட்டு, கோட்டையின் பின் வாசல் வழியாக அங்குள்ள பீரங்கிகள், இளவட்டக் கற்கள் மற்றும் கோட்டை முனியப்பன் கோவில் பார்த்து விட்டு,

நேராக புகழ்பெற்ற காட்டு பாவா தர்கா- சென்று



விட்டோம், இந்த தர்கா மிகவும் விசேசமான தர்கா, இந்தியா முழுதும் இருந்து முஸ்லிம்கள் இங்கே வந்து செல்கின்றனர்...

பிறகு அங்கே இருந்து வழிகேட்டுக்கொண்டு இராணியூர் புகழ்பெற்ற சிற்பங்கள் கொண்ட கோயில் சென்றோம் இது மிக அருமையான சிற்பங்கள் மற்றும் ஓவியங்கள் உள்ள கோயில்.

பிறகு அங்கே இருந்து கிளம்பி செல்லும் வழியே ஒரு சிறிய உணவகத்தில் காலை சிற்றுண்டி எளிமையாக சில இட்லி மட்டும் சாப்பிட்டு விட்டு பிறகு ஏழு குளங்கள் சூழ்ந்த இளையாத்தாங்குடி புறப்பட்டோம், செல்லும் வழியே சாலை ஓரத்தில் ஒரு கல்மரம் பார்த்தோம்.

பிறகு நேமம் கோயில், ஆத்தங்குடி அரண்மனை, ஆத்தங்குடி சிவன் கோயில் பார்த்து விட்டு நேராக சிவகங்கை மாவட்டம் காணாடு காத்தான் அரண்மனை போய் பார்த்துவிட்டு, அப்படியே நெடுங்குடி கைலாச நாதர் கோயில் கைலாசபுரம் சென்றோம்.

பிறகு நெடுங்குடியில் இருந்து, பீரங்கியுடன் கூடிய கீழா நிலைக்கோட்டை சென்றோம் - இது ஒரு மிகப் பெரிய ஆனால் சிதிலமடைந்த கோட்டை., பிறகு அறிய நாயகி அம்மன் கோயில், ஆஞ்சநேயர் கோயில் பார்த்து விட்டு திரும்பவும் மதியம் திருமயம் வந்து சேர்ந்து சிறப்பான மதிய உணவு.

பிறகு பிரமாண்டமான திருமயம் - கோட்டை, பீரங்கி, மற்றும் திருமயம் கோட்டை மேல குடைவரை.. பார்த்து விட்டு அங்கே இருந்து புறப்பட்டு புதுக்கோட்டை அருங்காட்சியகம் மாலை நான்கு மணிக்கு வந்து சேர்ந்தோம். இது தமிழகத்தின் இரண்டாவது மிகப் பெரிய அருங்காட்சியகம் ஆகும்.

பிறகு எண்ணற்ற மயில்கள் சுற்றித் திரியும் ராஜா தொண்டைமான் அவர்களது பாரம்பரிய, பிரமாண்டமான அரண்மனைக்குச் சென்றோம் - தற்போழுது இது மாவட்ட ஆட்சியர் அலுவலகம் ஆகும்.

பிறகு பி யூ.சின்னப்பா நகரில் உள்ள சின்னப்பா அவர்களின் சமாதி பார்த்துவிட்டு வீட்டுக்கு போய் ஒரு குளியல் போட்டோம். குளித்துவிட்டு வெளியே வந்தால் செல்வமணி உடை மாற்றி மீண்டும் வெளியே செல்ல ரெடியாக இருந்தார்...

சரியென்று களைப்பினை பொருட்படுத்தாமல் உடனடியாக கிளம்பி புதுக்கோட்டை ஸ்பெசல் மெது பக்கோடாவுடன் டீ சாப்பிட்டுவிட்டு, வரலாற்று சிறப்பு மிக்க பெரிய புதுக்குளம் மற்றும் அதன் பூங்கா சென்றோம், பிறகு புவனேஸ்வரி அம்மன் கோயில் சென்றோம் அங்கு தரிசனத்துடன் அருமையான நெய் சொட்டும் சர்க்கரைப் பொங்கல் கிடைத்தது மறக்க முடியாதது.







பிறகு அரிய நாச்சி அம்மன் கோயில் சென்றோம் - எல்லா கிராம கடவுள்களும் ஒரே இடத்தில் இங்கே இருக்கிறது. இங்கு பூசாரியின் உபசரிப்பு மிகவும் பாராட்டத்தக்கது.

இதனை பார்த்துவிட்டு நேராக பல்லவன் குளம், சாந்தா நாத சுவாமி கோயில், பிறகு ராஜா பழைய அரண்மனை இங்குள்ள ஒரு ஜீவ சமாதி எமக்கு மிகவும் திகிலூட்டியது, இவற்றை பார்த்து விட்டு இரவு சிற்றுண்டி, முடித்திவிட்டு புதுக்கோட்டையில் மிகவும் பிரபலமான செட்டிநாடு உணவகம் பழனியப்பா மெஸ்சில் கோழி கறியுடன் இட்லி, முட்டை தோசை மற்றும் ஸ்பெசல் பரோட்டா சாப்பிட்டு முடித்து செல்வமணி வீட்டுக்கு இரவு பத்து மணிக்கு திரும்பினோம்

முதல் நாள் இரவு ஓய்வு...

ஓய்வு எனும் பெயர் தான் ஒழிய தூக்கமே வரவில்லை..

இரண்டாம் நாள்..

அதிகாலையில் 4 மணிக்கு எழுந்து குளித்து ரெடியாகி.. வழியில் டீ சாப்பிட்டுவிட்டு ராஜா தொண்டைமான் பழைய அலுவலகம் சென்றோம் இது தற்போது கோர்ட் ஆகும்.

பிறகு அங்கே இருந்து திருவப்பூர் முத்து மாரி அம்மன் கோயில் பார்த்து விட்டு, திருகோகர்ணம் சென்றோம் இது புகழ்பெற்ற ஒரு குடைவரை சிவன் கோயில் ஆகும்.

பிறகு மயிலாபட்டி - ஜெயின் சின்னம், புலிவலம் - சிதைந்த கோயில் மற்றும் அங்குள்ள எண்ணற்ற கல்வெட்டுகள், விசலூர் - கல்வட்டங்கள் பார்துவிட்டு குடுமியான்மலை சென்றோம். அங்கு அடிவாரத்தில் காலை உணவு சாப்பிட்டு விட்டு சிகாகிரீஸ்வரர் கோயில் குடைவரை பார்த்து விட்டு பிறகு மலையில் உள்ள சமணர் படுக்கைகள், மலை கோயில் - குடுமியான்மலை பார்த்து விட்டு நேராக, அன்னவாசல் சென்றோம் அங்கு சமணர் சிலை பார்த்து விட்டு பிறகு சித்தன்னவாசல் குடைவரை, ஓவியங்கள், சித்தன்னவாசல் கல்வட்டங்கள், ஏழடிபட்டம் சமணர் படுக்கைகள், பார்த்து விட்டு...

பிறகு நேராக நார்த்தாமலை முத்துமாரி அம்மன் கோயில், விஜயாலய சோழீஸ்வரர் கோயில் - நார்தாமலை, திருமலை கடம்பர் கோயில், நார்தாமலை, பழியிலி சோழீசுவரம் கோவில் நார்தாமலை, பதினெண் பூமி விண்ணகரம் நார்தாமலை, ஆளுருட்டி மலை அம்மா சத்திரம், ஆளுருட்டி மலை சமணர் சிற்பம் பார்த்து விட்டு...



கீரனூர் சரவண பவனில் மதிய உணவு முடித்து, நேராக மோசக்குடி ஜெயின் பெரியகோவில் மருதூர், மருதவயல் ஜெயின் சிற்பம் பார்த்து விட்டு, பிறகு டீ அருந்தியபின் குன்றாண்டார் கோயில், பர்வதகிரி குடைவரை, வீரகாளி அம்மன் கோயில் - பெரம்பூர், செம்பாட்டூர் தீர்த்தங்கரர் மற்றும் பிராமி கல்வெட்டு பார்த்த பின், புத்தாம்பூர் - சமணர் சிலை, பார்க்கையில்...பலத்த காற்றுடன் மழை பிடித்தது.

உடனே அருகில் இருந்த ஒரு தேனீர் விடுதியில் தேனீர் அருந்தி விட்டு, மழை சிறிது தணிந்த பின் புதுக்கோட்டை நோக்கி பயணம்..

இந்த இரண்டு நாள் பயணத்தில் எடுத்தது 1800 புகைபடங்கள்... சுமார் 300 கிலோமீட்டர் இரண்டு சக்கர வாகன பயணம் (புதுக்கோட்டையில் இருந்து மீண்டும் புதுக்கோட்டை வரை மட்டும்)

கொஞ்சம் சோறு.. அவ்வப்போது டீ, காபி மீதி முழுதும் வரலாறு...

புதுக்கோட்டை பேருந்து நிலையத்தை மாலை 5.30 மணி அளவில் வந்து சேர்ந்தோம், பிறகு மீண்டும் ஒரு டீ சாப்பிடும் நேரத்தில் இரண்டு நாட்களாக எடுத்த புகைப்பங்களை நானும் செல்வமணியும் பகிர்ந்து கொண்டு, நான் மட்டும் சேலம் நோக்கி பேருந்தில் புறப்பட்டேன்...

என்றும் மறக்க முடியாத இனிய வரலாற்று நினைவுகளைச் சுமந்தபடி.

மோகன்- செல்வமணி



# பஞ்சட்டி (பாகம் 2)

## (குறுந்தொடர்)

## - திரு. விசயகுமார் நரசிம்மன்




நானன்சி சென்னைக்கு வந்து மூன்று நாள்கள் ஆகியிருந்தன. சேகரின் அலைபேசி அழைப்பு வழக்கமில்லாத நேரத்தில் வந்தபோது வீட்டில் பேசிவிட்டான் என்றே தோன்றியது அவளுக்கு. பயம் கலந்த எதிர்பார்ப்புடன் "சொல்லு டா... பேசியாச்சா?"

"ஓ, நீ அப்படி நெனச்சுட்டியா, இல்ல இது வேற ஒரு முக்கியமான விஷயம்..." சேகரின் குரலில் மெல்லிய கவலை இருந்தது,

"என்னாச்சு? டக்குனு சொல்லு!"

"சாமி செலயத் திருடிட்டாங்க!"

"வாட்? என்னடா சொல்ற? பஞ்சேட்டர் செலயா?"

"ஆமா, அதோட சேர்த்து மொத்தம் ஏழு செலயக் காணுமாம், எல்லாமே பஞ்சலோகம்!"

"எப்டி டா இப்டி ஆயிருக்கும்? கோயில் பூட்டிதான் இருக்கும்? அதுவும் அவ்ளோ பெரிய செல, அவ்ளோ ஈசியாவா தூக்கிருப்பாங்க?"

"அதான் யாருக்கும் எதுவும் புரியல! ஊர் பூரா ஆளாளுக்கு ஒன்னு சொல்றாங்க..."

"நான் அங்க வரவா?" அங்குப் போய் என்ன செய்யப் போகிறோம் என்று தோன்றியது, ஆனாலும் ஒரு ஆர்வத்தில் கேட்டாள்.

"ஆக்சுவலி, நா அதுக்குத்தான் போன் பண்ணேன்... நீ இங்க வரனும்..."

"எதுக்கு? நான் வந்து என்ன பண்ணப் போறேன்?"

"அப்புறம் எதுக்குக் கேட்ட?"

“ஏதோ ஆர்வத்துல கேட்டேன், கேட்டப்புறம்தான் எனக்கே எதுக்குனு தோனிச்சு! சரி, நீ எதுக்கு என்னைக் கூப்பிடுற?”

“அது வந்து... தப்பா நெனச்சுக்காத, சமீபத்துல ஊருக்கு வந்துட்டுப் போன வெளியாள் நீதான, அதான்...”

“வாட்! நான்தான் செலயக் கடத்திட்டேனா? என்ன சேகர் இது?”

“டென்ஷன் ஆகாத நான்ஸ்... நீ போட்டோலாம் வேற எடுத்தல, அந்தத் தர்மகர்த்தாதான் பஞ்சாயத்துல உன் பேர இழுத்துவிட்டாரு... விஷயம் போலிசுக்கும் போயிருக்கு, அவங்கதான் உன்னை ஒரு முறை கூட்டிட்டு வந்துடறது பெட்டர்னு சொன்னாங்க... சும்மா ஒரு பார்மல் என்கொயரிதான், நான் கூடவே இருக்கேன், பயப்படாத!”

“எனக்கென்ன பயம், எப்ப கிளம்பட்டும் சொல்லு?”

“அவசரமில்ல, நீ வந்தா போதும், டிரெயின்லயே வா, நா தத்கால் போடுறேன்... வரப்ப நீ எடுத்த போட்டோஸையும் மறக்காம கொண்டு வா!”

“எல்லாத்தையுமா? சிலதுலாம்...”

“கேமரா போட்டோ மட்டும் போதும்! நா மறுபடி கால் பண்றேன், கூலா இரு என்ன?”

---

சேகர் இரயில் நிலையத்தில் இவளுக்காய்க் காத்திருந்தான்.

”வாங்க மேடம், ஜர்னிலாம் நல்லா இருந்துச்சா?” பெரிய பெட்டியை வாங்கிக்கொண்டான்.

“செம்ம போர்... சேகர்னு ஒருத்தன்கூட பேசிட்டே வந்தேன்! எவ்ளோ ரத்தம் பாரு!” சேகர் எதிர்பார்த்ததற்கு மாறாய் நான்சி உற்சாகமாய் இருந்தாள்.

நிலையத்தைவிட்டு வெளியில் வந்து காரில் ஏறிக்கொண்டனர்.

”ஒன்னு சொல்லவா?...” சேகர் மெல்ல இழுத்தான், என்ன என்று பார்வையாலேயே கேட்டாள்,

“செலங்க கெடச்சிருச்சு!”

“என்னடா? நேத்து காணோம்ன, இன்னிக்குக் கிடைச்சுருச்சுங்குற? என்ன விளையாட்டா இது?” நான்சி நம்பாமலே கேட்டாள்.

“நடக்குறத சொன்னேன்! நான் ஏன் விளையாடனும் இதுல?”

“நான் நம்பமாட்டேன்... எனக்கென்னவோ நீ என்ன இங்க வரவழிக்கப் போட்ட திட்டம் மாதிரி தெரியுது!”

“உன்ன வரவழைக்கத் திட்டம்லாம் போடனுமா? வான்னா வரமாட்டியா நீ?”

“வருவேன் வருவேன்... சரி விஷயத்தச் சொல்லு, என்ன ஆச்சு?”

“முழுசாத் தெரியல... ஆனா, இங்க செலைங்களத் திருடின கும்பல் இதுக்கு முன்னாடியும் நெறைய எடத்துல திருடிருக்காங்க போல, அதனால் போலிஸ் ஏற்கனவே அவங்களைத் தேடிட்டுதான் இருந்திருக்காங்க...”

“ம்ம்ம்...”

“எங்க ஊரு கொஞ்சம் ரிமோட் இல்லையா, அதனால அவங்களால செலைங்கள உடனடியா ரொம்பதூரம் கொண்டு போக முடியலைப் போல, மாட்டிக்கிட்டாங்க! எங்க ஊர் செலைங்களோட சேர்த்து மொத்தம் 34 செலைங்க கிடைச்சிருக்காம் அந்தக் கும்பல் கிட்டேர்ந்து!”

“இண்ட்ரஸ்டிங்... அப்றம்?”

“இப்ப சிக்கல் என்னன்னா, ஒரு சில பெரிய தனித்துவமான செலைங்களத் தவிர எந்தச் செல எந்தக் கோயிலுக்குச் சொந்தமானதுனு தெரியல, எங்க ஊர்லேர்ந்து திருடின ஏழு செலைல பஞ்சேட்டர் செல மட்டும்தான் எங்கள்துனு உறுதியா தெரிஞ்ச செல... மத்ததுலாம் பலது ஒரே மாதிரி இருக்கு, ஒரே சாமியோடது... அடையாளம் தெரியாம முழிச்சிட்டு இருக்காங்க!”

“அடப்பாவிங்களா, உங்க செல எதுனு உங்களுக்கே தெரியலயா? ரொம்ப நல்லது!”

“உள்ள அரையிருட்லேயே வெச்சிருந்தாச்சு, கோயிலுக்கு வர யாரும் நின்னுகூட பார்க்கமாட்டாங்க, போற போக்கில கன்னத்துல போட்டுக்கிட்டுப் போய்டுவாங்க... நானே அப்படித்தான்! ஐயருங்களுக்குத்தான் தெரிஞ்சிருக்கனும், ஆனா, அவங்களுக்கும் தெரியல, எல்லாம் கிட்டத்தட்ட ஒரே அளவா, ஒரே பழசா இருக்கு!”

“அப்ப ஆளுக்கு ஒன்ன எடுத்துக்க வேண்டியதுதான? எதுக்குக் குழம்பனும்?”

“இதென்ன மிட்டாயா, ஆளுக்கு ஒன்னு எடுத்துக்க? செல மா, சாமி செல! அது போக, நாளைக்கப்புறம் அது எங்கள்து, இது உங்கள்துனு பிரச்சனை வரக்கூடாதுல! எந்த ஊர்லயும் ரெக்கார்ட்ஸ் ஒழுங்கா இல்ல, அதான் இப்ப சிக்கலே! ஆனா, இந்தக் குழப்பத்துல நமக்கு ஒரு நல்ல விஷயம் நடந்திருக்கு... சொன்னா நீ கார் சீட்ல உக்காந்துக்கிட்டே குதிப்ப!” சேகரின் முகத்தில் குழந்தைகளிடம் மேஜிக் காட்டும் ஆர்வம் இருந்தது!



"என்ன? சொல்லு முதல்ல... குதிக்குறேனா இல்லையா பார்க்கலாம்..."

"வீடு வந்தாச்சு, நீ உள்ள வந்து ரெப்ரஷ் பண்ணிட்டு ரெடியாகி வா, கூட்டிட்டுப் போயே காட்டுறேன்..."

"முதல்ல சொல்லுடா..." என்றாள் நின்ற காரிலிருந்து இறங்காமல்.

"நோ! கிளம்பி வா, நேர்ல காட்டுறேன்... சொல்லலாம் மாட்டேன்!" சேகர் இறங்கிப் பெட்டிகளை எடுத்துக்கொண்டு உள்ளே சென்றான்.

"எதுக்கு இப்டி வந்ததும் வராததுமா கோயிலுக்குக் கூட்டிட்டுப் போற, ஏதாச்சு வேண்டுதலா?"

"உன்ன கம்முனுதான வரச் சொன்னேன், ஹித்தேஷ்விட மோசமா கேள்வி கேட்டுட்டே வர!"

"அப்டிதான் டா கேப்பேன்... பதில் சொல்லு..."

"அதான் நேர்ல காட்டுறேன்னு சொன்னேன்ல, வா, பாரு கோபுரம் தெரியுது... இன்னும் அஞ்சு நிமிஷம் அமைதியா வா!"

"மாட்டேன்..."

"சரி, அப்ப, நான் காட்டப் போறதுக்குப் பதிலா நீ எனக்கு என்ன தருவ, அதை யோசி..."

"முதல்ல காட்டு... அப்பறம் பார்க்கலாம்... அஞ்சோ பத்தோ தரேன்..."

"வாவ்... பத்தா..." சேகர் குறும்போடு நகைத்தான்.

"ரூபா தம்பி... ஐ.என்.ஆர்! ரொம்ப கற்பனை பண்ணாத!"

கோயில் வந்தது.

உள்ளே சென்று, உள்பிரகாரத்தைச் சுற்றி அம்மன் சன்னதிக்கு நேராக இருந்த அர்த்த மண்டபத்திற்கு அழைத்து சென்றான்,

"டட்ட டையங்ங்..." கைகளை நாடகத்தனமாய் விரித்து செய்கை செய்தான்.

நான்சி மகிழ்ச்சியில் உறைந்தே போனாள். அவள் உடல் சிலிர்த்து மயிர்க்கூச்செறிவதைச் சேகரால் பார்க்க முடிந்தது. அவள் கையைப் பிடித்துக்கொண்டான்.

"வாவ்... செம்ம டா..."

கடத்தப்பட்டு மீட்கப்பட்ட சிலைகள் அனைத்தும் அங்கு வரிசையாய் வைக்கப்பட்டிருந்தன. மண்டபத் தூண்களை கயிறுகளால் பிணைத்திருந்தார்கள், யாரும் கிட்டே செல்ல இயலாதபடி, உடன் இரண்டு காவலர்களும் இருந்தனர்.

பஞ்சேட்டர் சிலை நடுநாயகமாக வீற்றிருந்தது. சிவனா திருமாலா என்று குழப்பும் வடிவம். சிவன் திருமாலாக வந்து ஒரு பக்தர்க்கு அருள் புரிந்ததாக அக்கோயிலின் தலவரலாறு. பஞ்சாக்ஷர வடிவினனான சிவன் அஷ்டாக்ஷர வடிவினனாய், திருமாலாய் வந்த வடிவே பஞ்ச-அஷ்டர், 'பஞ்சாஷ்டர்' என்றானது. அது மருவி பஞ்சேட்டர் என வழங்குகிறது.

உடலைச் சுருட்டி, ஐந்து தலைகளைக் குடையாக விரித்து நிற்கும் ஆதிசேஷனின் மேல் சுகாசனத்தில் கீழிரண்டு கைகளில் தாமரையும் கதையும் ஏந்தி, மேலிரண்டு கைகளில் மானும் மழுவும் ஏந்தி, இடையிரண்டு கைகளில் அபய வரத முத்திரை காட்டியபடி, இதழில் தவழும் நீங்காத இளநகையோடு பஞ்சாஷ்டர் காட்சியளித்தார். உற்று நோக்கினால் நெற்றியில் திருநீற்றுப் பட்டையும், புஜங்களில் நாமமும் இருப்பதைக் காணலாம்.

சிலையில் இடுப்பில் ஒரு பழைய பட்டு வேஷ்டி கட்டப்பட்டிருந்தது. கழுத்தில் ஒரு காய்ந்த மாலை! நான்சி உற்சாகமும் பரபரப்பும் கலந்து இருந்தாள். சற்று தொலைவிலிருந்துதான் பார்க்க முடிந்தது என்றாலும் நன்றாக பார்க்க முடிந்தது. பெரிய சிலை அல்லவா. சிலையின் ஒவ்வொரு அம்சமாக சேகருக்குச் சுட்டிக்காட்டிக் கொண்டிருந்தாள்.

"ஹலோ சேகர்..." இருவரும் திரும்பினர், பின்னால் ஒரு துணைஆய்வாளர் நின்றிருந்தார்.

"ஹலோ சார்... வாங்க!"

"இவங்கதான உங்க நான்சியா?" சேகரின் பதிலுக்குக் காத்திராமல் அவர் நான்சியிடம் பேசினார், "சாரி மேடம், உங்களத் தேவயில்லாம அலைய வெச்சுட்டோம்... ஆனா, நீங்க வர வேணான்னு சேகர்கிட்ட சொல்லிட்டேனே, தகவல் சரியா கிடைக்கலியா?"

"இல்ல, அப்பா இவளப் பார்க்கனும்னார், அதான் வந்திருக்கா!" சேகர் முந்திக்கொண்டு பதில் சொன்னான்.

"ஆமா சார், எனக்குத் தேவையில்லாத அலைச்சல்லாம் ஒன்னுமில்ல, இன்ஃபாக்ட் இப்ப வந்ததாலதான் இந்தச் சிலையலாம் பார்க்க முடிஞ்சுது!"

"ஓ, உங்களுக்கும் பழைய சிலைலாம் பிடிக்குமா? மறுபடி கடத்திடாதீங்க நான்சி, என்னை சஸ்பண்ட் பண்ணிருவாங்க!" நான்சியின் முகம் சிறுப்பதைக் கவனித்தார் "பேட் ஜோக், சாரி!"

"பரவால்ல..." நான்சி மீண்டும் சிலைகள் பக்கம் திரும்பினாள்.

"நீங்க எபிகிராபிஸ்ட்ல? சேகர் சொல்லிருக்காரு, இப்பதான் ஞ்யாபகம் வருது எனக்கு! என்ன சேகர்? அதனாலதான் இந்தக் கோயிலப் பார்க்க வந்தாங்கனு சொன்னீங்க?" எஸ்.ஐ. நான்சியை விடுவதாய்த் தெரியவில்லை. சேகருக்கு இலேசாய்



எரிச்சல் வந்தது.

"ஆமா சார், நீங்க மறுபடி என்கொயரிய ஆரம்பிக்காதீங்க!"

"என்கொயரிலாம் இல்ல, ஒரு ஹெல்ப் வேணும், முடியுமா உங்களால?"

'என்ன?' என்பதுபோல இருவரும் அவரைப் பார்த்தனர்.

"இந்தச் செலைல எதெது எந்த ஊர்துனு குழப்பம் இருக்கு, சேகருக்குத் தெரிஞ்சிருக்குமே..."

"ஆமா, நான்சிகிட்டயும் சொன்னேன்!"

"குட்! கிடைச்ச முப்பத்திநாலு செலைல ஆறு சிலை தனித்துவமானது. இந்த ஊரு பஞ்சேட்டர் சிலை, கோபால மங்களம் கிருஷ்ணர் சிலை இப்படி. மீதி இருபத்தெட்டுல பல செலைங்க ஒரே மாதிரி இருக்கு... எது எந்த ஊருதுனு தெரியல, ஆளுக்கு ஒன்னு எடுத்துக்கோங்கனாலும் ஒத்துக்க மாட்றாங்க- என்ன?"

நான்சி சட்டென இடையில் சிரித்துவிட்டாள், சேகர் பதில் சொன்னான், "ஒன்னுமில்ல சார், இதே ஐடியாவ இவளும் சொன்னா, அதான்!"

"ஓ, பாருங்க நான்சி, உங்களுக்குத் தெரியுது, இந்த ஊர்க்காரங்களுக்குத் தெரியல! நீங்க பஞ்சாயத்துத் தலைவரா இருந்திருந்தா நாங்க இந்நேரம் வீட்டுக்குப் போயிருப்போம்!"

"சரி, விஷயத்துக்கு வாங்க!" சேகர் குரலில் எரிச்சலைக் காட்டினான்.

"சாரி! உங்களுக்கு ஏதாச்சு முக்கியமான வேலை இருக்கா? நான் உக்க டைம வேஸ்ட் பண்றேனா?"

"அப்டி இல்ல..."

"இல்லல, உங்களுக்கு வேல இருந்தா நீங்க கிளம்புங்க சேகர், நான் மேடம்கிட்ட பேசிட்டு நானே அவங்களக் கொண்டு வந்து விடுறேன்!"

"இல்ல, அப்படி ஒன்னும் எனக்கு முக்கியமான வேல இல்ல, நீங்க சொல்லுங்க..."

"குட்! விஷயம் என்னன்னா, சில செலைங்கள்ல எழுத்துப் பொறிச்சிருக்கு. பழைய எழுத்து. தமிழ் மாதிரியும் இருக்கு, சான்ஸ்கிரிட் மாதிரியும் இருக்கு! டிபார்ட்மெண்ட்ல எபிகிராபிஸ்ட் கேட்டிருக்கோம், அவங்க அனுப்ப லேட் ஆகுது... நீங்க வந்து பார்க்குறீங்களா? முடியுமா?"

நான்சிக்கு மகிழ்ச்சி அளவுகடந்தது. ஐஸ்க்ரீம் சாப்பிட கூலி வேண்டுமா என்று கேட்கிறாரே இவர்!

"சார், அதெல்லாம் சரிப்படுமா? இவ சொன்னா ஒத்துப்பாங்களா? அப்புறம் பிரச்சனைனு வந்தா எங்க தலதான் உருளும், நீங்க டிபார்ட்மெண்ட் எபிகிராபிஸ்ட வெச்சே பாருங்க சார்... அதான் சரி!" நான்சி ஏதும் பதில் சொல்லும் முன் சேகரே பேசினான்.

"சார், சேகர் சொல்றது சரின்னுதான் எனக்கும் தோனுது, நான் முதல்ல வந்தப்ப என்ன மூலஸ்தானத்துக்குள்ளயே விடல, நான் சொல்றத ஒத்துக்குவாங்களா? பட், எனக்குச் செலைங்கள கிட்டத்துல பார்க்க, அதுல இருக்குற எழுத்தைப் படிக்க ஆசைதான்... ஐஸ்க்ரீம் சாப்பிட கூலியா?"

"ஐஸ்க்ரீம்... ஓ, கரும்புக்குப் பதிலா! ப்ரில்லியண்ட் மேடம்! உங்களுக்கு ஐஸ்க்ரீம் ரொம்ப பிடிக்குமோ?"

"எஸ். ஐ. சார், ரொம்ப டைவர்ட் ஆறீங்க நீங்க!" சேகருக்குக் கிளம்பிவிட வேண்டும் போல் இருந்தது.

"நான்சி மேடத்தைப் பார்த்து ஜொள்ளு விடறேன்னு சொல்றீங்களா?"

"ச்சேச்சே... நீங்க தப்பா..."

"தப்பாலாம் எடுத்துக்கல, கவலைப்படாதீங்க! நான் கொஞ்சம் ஜாலி டைப், அவ்ளோதான்! அப்படியேனாலும் இவங்க அழகாத்தான இருக்காங்க, ஜொள்ளுவிட்டா என்ன தப்புங்கறேன்?"

"சார், இது ரொம்ப வெளிப்படை!" நான்சி புன்னகையுடன் சொன்னாள்.

"ஓக்கே ஓக்கே... விஷயத்துக்கு வருவோம், ஊர்க்காரங்கள நான் சமாளிச்சுக்குறேன்... இது ஒரு ப்ரைமரி ரீடிங்கா இருக்கட்டும், டிபார்ட்மெண்ட் ஆள் வந்ததும் கன்பர்ம் பண்ணிக்கலாம், ஒரு முறை திருடு போன செலைங்கள இப்படியே திறந்த இடத்துல வெச்சுட்டு எங்களால இராப்பகலா பாதுகாத்து இருக்க முடியாது, ப்ராப்பரா டாக்குமெண்ட் பண்ணிட்டு அந்தந்த ஊருக்குச் சீக்கிரம் அனுப்புறதுதான் பெட்டர்... நான்சி ஹெல்ப் பண்ணா எங்க வேல சீக்கிரம் முடியும்!"

"எனக்கு ஓக்கே சார், அதான் சொன்னேனே-"

"ஐஸ்க்ரீம் தின்ன கூலி! காட் இட்! பட், கவலப்படாதீங்க உங்களுக்கு ஹானரோரியம் வாங்கித் தரேன், ஐஸ்க்ரீம் வேணாலும் வாங்கித் தரேன்..." எஸ்.ஐ. கைநீட்டினார்,

"அதுக்கு இவர் இருக்கார்!" என்று நான்சி சேகரைக் கண்களால் காட்டியபடி எஸ்.ஐக்குக் கைகொடுத்தாள்,

"கவுத்துட்டீங்க மேடம்!"......

(தொடரும்)

# மன்னர் மருதுபாண்டியர்களின் பக்தியும் தொண்டும்..

- திரு. த. விஜயகுமார் (காவல்துறை, புதுச்சேரி)



தமிழ்நாட்டில் ஆங்கிலேயருக்கு எதிரான விடுதலைப் போராட்டத்தை முதல் முதலில் தொடங்கியவர்கள் மன்னர் மருது சகோதரர்கள் மட்டும் ஆங்கிலேயரை தமிழ் மண்ணிலிருந்து விரட்ட 1780 முதல் 1801 முடிய ஆயுதம் தாங்கிப் போராடினார்கள்.

இன்றைய விருதுநகர் மாவட்டம் நரிக்குடிக்கு அருகில் உள்ள முக்குளம் என்ற ஊரில் வாழ்ந்த மொக்க பழநியப்பன் என்பவருக்கும் அவரது மனைவி ஆனந்தாயி என்ற பொன்னாத்தாள் என்பவருக்கும் மகனாக 1748 ஆண்டில் பெரியமருது பிறந்தார் . 1753 -ல் சிறிய மருதுபாண்டியர் பிறந்தார்.

அந்த காலத்தில் பெரிய மருது பாண்டியருக்கு ராசபிளவை நோய் மூலம் உடல்நிலை குறைவு ஏற்பட்டு அரண்மனையிலே வருத்தத்துடன் இருந்தார். மன்னர் மருதுபாண்டியர்கள் ஏற்படுத்திய புலவரவையில் இருந்து ஒரு புலவர் இந்த செய்தியை கேட்டு மருதுபாண்டியர்கள் சந்தித்து மன்னரிடம் உங்கள் நோய்க்கு ஒரே தீர்வு குன்றக்குடியின் உள்ள முருகப்பெருமானை வழிபாடு செய்து விட்டு வருங்கள் என்று கூறினார். அன்று இரவே பெரிய மருது தூங்கிக்கொண்டு இருக்கும் பொழுது பாலக்குமாரன் ஒருவர் மயில் தோகையுடன் வந்து பிளவை நோயின் மீது திருநீறு வைத்து விட்டதாக கனவு கண்டு திடீரென்று எழுந்து பார் க்கும் பொழுது அச்செயல் கனவாகவோ நினைவாகவோ இருக்கும் என மகிழ்ந்தார் . மறுநாள் பிளவை நோய் ஏற்பட்ட வடு காணாமல் போய்விட்டது. முருகப்பெருமானின் அருளால் தன் பிளவை நோயை நீக்கிய நன்றி கடனாக பெரிய மருதுபாண்டியர் தன் படைகளுடன் புலவர்களை அழைத்து கொண்டு அங்கு திருபணி மேற்கொள்ள முடிவு செய்தனர் முதல் வேலையாக தாங்கள் தங்குவதற்கு ஒரு அரண்மனை கட்டினர்.

மருதுபாண்டியர்கள் தன்னோடு இருந்த காடன் செட்டியாருடனும் குன்றக்குடியில் தங்கி கோவில் திருபணிகளை தொடங்கினார் . குன்றக்குடி மலை அடிவாரத்தில் அடர் ந்து இருந்த காடுகளை வெட்டி சீர் செய்தனர் . சண்முகநாதன் எழுந்தருளியிருக்கும் பீடத்தின் கீழ் இடம் பெற்றிருந்த தகட்டை செப்பம் செய்வித்து முருகப்பெருமானை எழுந்தருள் வித்தனர்.

மலைக்கோவில் மூலவர் கருவறை மயில் மண்டபம், உற்சவமூர்த்தியுள்ள அலங்கார மண்டபம், உயர்ந்த சுற்று மதில்களும் இராஜகோபுரமும் ஆகியவற்றை மருதுபாண்டியர்கள் குன்றக்குடியில் செய்த திருப்பணிகள் ஆகும். மலையின் தெற்கே மிக பெரிய தென்னந்தோப்பை உண்டாக்கினர்.

குன்றக்குடி கோவில் பராமரிப்பு செலவுக்காக செம்பொன்மாறிக் கிராமத்தை தானமாக அளித்தனர். கீழரத வீதியில் இப்போது பேருந்து நிலையமாக விளங்கும் இடம் மருதுபாண்டியர் அரண்மனை இருந்த இடமாகும். மருதுபாண்டியர் களின் புலவர் அவையில் இருந்த சாந்துப்புலவர் அவர் கள் குன்றக்குடி முருகனின் பெருமைகளும் மருதுபாண்டியர் செய்த கோவில் திருபணிகளும் பற்றி " மயு+ரகிரிக் கோவை " என்ற நூலைப் பாட்டுவித்தனர்.

குன்றக்குடி சண்முகநாதன் கோவில் சம்மந்தமான மூன்று ஓலைச்சாசனங்கள் பெரிய மருதுபாண்டியர்; 1790 -ஆம் ஆண்டு வெளிடப்பட்ட ஓலைச்சாசனம் ஒரு பகுதியாகும்.

"மலையில் காடுசெடிகளை வெட்டி, கோயில் குளம் உண்டாக்க உதவிகரமாக இருந்து திருடர் பயம் தீர காவலுக்குக் கைப்பிடியாக கொண்டு வந்த தளவாய் வெள்ளையன் அம்பலகாரனுக்கு அம்பல் மரியாதையும் அம்பலத்தோடு உம்பலம்பெரிய கண்மாய்ப் பாசனத்தில் இரண்டுகாணி நஞ்சை நிலமும் செடி வெட்டுக்காக மேற்படி பாசனத்தில் 3 3-8 காணி நன்செய் நிலமும் வசுதந்தர பாத்தியமாக விடப்படுவதால் ஆண்டு அனுபவித்துக் கொண்டு கோயில் ஊழியம் உழைப்பைத் தவறாது பார்த்துக்

கொள்ள வேண்டும்''காடாக புதர் மண்டிக் கிடந்த குன்றுப் பகுதியில் செடி கொடிகளை அழித்து அழித்து கோவில் குளம் உண்டாக்கி உதவியாய் இருந்தவருக்கு பெரிய மருது பாண்டியர் நிலம் வழங்கினார் .

"மருது நாதிபன் றாமரைப் பொய்கையின் மற்றவனே
கருதிய வாயிரத தூண்மண்ட பத்திற் கடம்பணிவேள்;
வருதிசெய் தோகை மலையி லரச வனத்தினிதம்
பருதியை நோக்கு மலர் போற் கிளிசென்று பார்ப்பதென்னே''

இந்த மயூரகிரிக் கோவை பாடலில் குன்றக்குடி ஆயிரங்கால் மண்டபம் மருதுபாண்டியர் அவர் களால் எழுப்பப்பட்டது என்று பாடல் மூலம் சொல்லப்படுகிறது.

"அருணிதிப்; பாலினு மேற்பா ரினுமறி
யாமையினுன் மருது துரைபணி சேர்ந்தன் மயூர
வரைந்திருவேயிருவரை யேந்தி யொருவரை
யுட்கொண்டி ருந்தவளோர் வரைதலை மேற்கொண்
டன ளென்று வெஞ்சொல் வழங்கினரே"

என்று மயூரகிரிக் கோவை பாடலில் மருதுபாண்டியர் அவர்களால் குன்றக்குடி முருகன் கோவில் திருபணி மேற்கொள்ளபட்டது என தெரியவருகிறது.

"வள்ளிமயில் சேர் மயின்மலைக்
கேமருதையன் செய்த
வெள்ளிமயிலை விரும்புங்குகனளுள்
வேந்தன் மறந் பொற்
தெள்ளி மயிலிலென்
பொன்மயிலைப்புணர்ந்த தேகினும்
புள்ளி மயிலின மேமற வீரன்பு போற்றுதலே''

என்று மயூரகிரிக் கோவை பாடலில் மருதுபாண்டியர் அவர்களால் குன்றக்குடி முருகன் பெருமானுக்கு செய்து அளித்த வெள்ளிமயில் வாகன சிறப்பை பற்றி போற்றப்படுகிறது.

"மேல் எதிர் தும் ஆயிரம்கட் கோபுரமும்
மிதக்கலங்கி விலங்கு வாழ்க
மால் அனயை மருதுபாண்டியன் செய்திடுக்
கோபுரமும் மதுர மேன்மைப்
பாலை கொள் கடலை விடு தாபுரியும் படிபடிகள்
பண்பி எனுங்கிக்
சாலும் கெடுக் தடமருதா புரியும் ஒரு
கொடியினலன்பு தழிஇச்செல்வோமே"

என்று மயூரகிரிக்கலம்பக வரிகளில் மருதுபாண்டியர்கள் முயற்சியால் மலைமேல் இராஜகோபுரம் கட்டிய பெருமை விளங்கும் பாடல் ஆகும்.

மன்னர் மருதுபாண்டியர்கள் முருகப் பெருமான் மீது உள்ள பத்தியால் குன்றக்குடி முருகர் கோவில் மட்டும் இல்லாமல் மற்ற முருகன் கோவில்களிலும் திருப்பணிகள் செய்ய தனி கவனம் செலுத்தி வந்தார்.

சிவகங்கை மாவட்டத்தில் சிவஞான சுப்பிரமணிய சுவாமி கோவில் மருது பாண்டியர் களால் கட்டப்பட்ட கோவில் ஆகும். இந்த முருகன் கோவில் பராமரிப்பிற்கென கண்ணாம்பூர் எனும் கிராமத்தை மானியமாக மருதுபாண்டியர் அளித்தனர் .

மானாமதுரையில் இருந்து மிளகனுலீர் வழியாக நரிக்குடி செல்லும் வழியில் மானுலீர் என்ற கிராமத்தின் உள்ள சுப்பிரமணிய சுவாமி கோவில் சன்னதி முன் மண்டபத்தை மருதுபாண்டியர் கள் கட்டினார்கள், மேலும், மாநூர் முருகன் கோவில் திருபணிகள் செய்து புதிய தேர் ஒன்று அளித்தனர்.

பழனியில் உள்ள தண்டபாணி சுவாமிகள் பழனிமலை பண்டார சந்நதி ஆதீனத்திற்கு பெரிய மருதுபாண்டியன் 1793-ல் இருகிராமங்களில் சில நிலங்களை அளித்து அம்மடத்தில் உள்ள பிள்ளையார் கோவில் பூஜை வழிபாடுகள் செய்ய உத்தரவிட்டார் .

மருதுபாண்டியர்கள் உலக புகழ் பெற்ற காளையார் கோவில் ராஜகோபுரம், மதுரை மீனாட்சி அம்மன் கோவிவில் சேர்வைகாரர் மண்டபம், திருபத்துதூர் பைரவர் கோயில், மதுரை திருமோகூர் காளமேகப் பெருமாள் கோயில் போன்ற பல நூற்றிர்க்கும் மேற்பட்ட கோவில்களில் திருபணிகளை, மண்டபம் கட்டுதல், தேர்கள் செய்தல், அன்ன சத்திரம் கட்டுதல் போன்ற பல ஆன்மீக பணிகளை தன் ஆட்சி காலத்தில் சிறப்பாக செய்தனர் . இந்தியாவில் சுதந்திரம் அடையும் நோக்கில் ஆங்கிலேயரை எதிர்த்து முதல் போராட்ட வீரர்கள் மருதுபாண்டியர்கள் பயன்படுத்திய வேலும் வளரிகளும் ஆங்கில படைகளின் துப்பாக்கிகளும் ஆங்கிலேயர்களின் தலைகளை சிதறடிக்கச் செய்தது.


ஆதாரம்: 1. குன்றக்குடித் தலவரலாறு தேவஸ்தான வெளியீடு பக்கம் - 17, 26, 27, 28, 29

2. குன்றக்குடி அரண்மனை ஓலைச்சாசனம் ஆய்வு நூல் பக்கம் - 256, 262

சாந்துப்புலவர் , மயூரகிரிக் கோவை பாடல் 82, 200, 407

அமராவதி புதூர் அ. இராமநாதன் செட்டியார் மயூரகிரிக்கலம்பகம் - பாடல் - 80




# சமணக் கல்வெட்டுக்களும், சங்ககால செஞ்சியும்

- நிலவளம் கு.கதிரவன்.



மொழியைக் குறித்த சொல்லே காலத்தையும் குறிக்கும். அத்தகைய சிறப்பு வாய்ந்த சொல் " தமிழ் ". ஆம். சங்கத் தமிழ் என்றாலே சங்க காலத்தையும் குறிக்கும் சொல்லாடலாக உள்ளது நமது தனித் தமிழ்ச் சிறப்பாகும். சங்க காலம் தொடர்பான கால வரையறையில் சிற்சில வேறுபாடுகள் இருந்தாலும் கி.மு.5ம் நூற்றாண்டு முதல் கி.பி.3ம் நூற்றாண்டு வரையிலான காலத்தை சங்க காலம் என பெரும்பாலான அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அக் கால வரையறையின் வாயிலான பற்பல ஆய்வுகள் மேற்கொண்டு மொழி, கலை, பண்பாடு, நாகரிகம் தொடர்பான ஆய்வுரைகளை வழங்கியுள்ளனர்.

தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் வளர்த்த நமது தமிழ்ச் சமூகம், தமிழ் எழுத்துக்கள் இன்றைய பயன்பாட்டில் பயன்படுத்தும் வடிவத்திற்கு முன்னர் சங்க காலத்தில் பிராமி வடிவத்தில் இருந்தது. சங்க காலத்தில் தமிழ் மொழிக்கு வழக்கில் இருந்தது தமிழி அல்லது தமிழ் பிராமி எழுத்துரு வகையே ஆகும். பிராமி எழுத்துருவை ஆய்வாளர் ஐராவதம் மகாதேவன் அவர்கள் தமிழ் பிராமி என்றும், ஆய்வாளர் நாகசாமி அவர்கள் தமிழி என்றும், நடனகாசிநாதன், பேராசிரியர் ராசவேல் அவர்கள் தொன்மைத் தமிழ் எழுத்துக்கள் என்றும் அழைக்கின்றனர்.

வடஇந்திய பிராமி எழுத்துக்களுக்கும், சங்க காலத்தில் தமிழகத்தில் புழக்கத்தில் இருந்த எழுத்துக்களுக்கும் உருவ அளவில் ஒற்றுமை உண்டு. ஆனால் இதில் பல வேறுபாடுகள் இருந்தன. தமிழில் உள்ள ழ,ள,ற,ன போன்ற எழுத்து வடிவங்கள் வட பிராமியில் இல்லை. இந்தியாவின் பிற பகுதிகளில் கிடைக்கும் பிராமி எழுத்துக்கள் புத்த தர்மத்தைப் போதிக்கும் பிராகிருத மொழியில் இருக்கும் பொழுது, தமிழ் நாட்டில் தமிழ் மொழி மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே இந்திய பிராமியிலிருந்து வேறுபடுத்தி உணர்த்தும் பொருட்டு தமிழ் பிராமி அல்லது தமிழி என்றழைத்தனர். இவற்றை சங்க காலத் தமிழ் எழுத்துக்கள் என்றே கூறலாம்.

சமணக் கல்வெட்டுகள் வாயிலாக தமிழின் தொன்மையையும், தமிழர்களின் பண்பாட்டு வாழ்வியல் முறைகளையும் நாம் அறியலாம். இக் கல்வெட்டுகள் அனைத்தும் தமிழ் பிராமி எழுத்துரு வடிவங்களிலே இருப்பது இதன் தொன்மையை பறைசாற்றுகிறது. அதனால் இவை சங்க கால கல்வெட்டுகள் என்றும், தமிழ் பிராமிக் கல்வெட்டுகள் என்றம், தொல்தமிழ்க் கல்வெட்டுகள் என்றும் பலவாறாக அழைக்கப்படுகிறது. இதுவரை 32 இடங்களில் ஆய்வு செய்து கிடைத்த 95 கல்வெட்டுகளில் 5 விழுப்புரம் மாவட்டத்திலும், குறிப்பாக செஞ்சி மற்றும் செஞ்சி வட்டத்தை உள்ளடக்கிய பகுதிகளில் 4 கல்வெட்டுகள் இருப்பது செஞ்சி பகுதியின் சிறப்பாகும். திருக்கோவலூர் ஜம்பையில் 1 கல்வெட்டு உள்ளது. இதன் வாயிலாக செஞ்சி சங்க காலத்தில் சிறப்பு பெற்ற பகுதியாக இருந்தது இவ்வாய்வின் மூலம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

சங்க காலத்தில் செஞ்சி :

சங்க கால செஞ்சியின் சிறப்புகளை அறிவதற்கு மிகவும் உறுதுணையாக இருப்பது தமிழ்பிராமிக் கல்வெட்டுகளான சமணக் கல்வெட்டுகளே ஆகும். பிராமி எழுத்து என்ற பெயரே, சமண சமயத்தின் முதல் தீர்த்தங்காரரான ரிஷப தேவருக்கு இரு மகள்கள் என்றும் அவற்றுள் ஒருவர் பெயர் சுந்தரி, மற்றொரு மகளின் பெயர் "பிராம்மி" என்றும், சுந்தரி மொழியையும், பிராமி எழுத்தையும் குறிப்பதாகவும், இதன் வாயிலாகவே பிராமி எழுத்துரு பெயர் வழக்கு வந்தது என்றும் ஆய்வாளர் கணேசன் அவர்கள் கூறுகின்றார்.

தமிழ் மொழிக்கு செம்மொழி அங்கீகாரம் கிடைப்பதற்கு இன்றும் அதன் பழமையை உணர்த்தும் தமிழ்பிராமி எனப்படும் தமிழி எழுத்துக்களே பெரும் காரணம். இவை 2400 ஆண்டுகள் பழமையானது. தமிழ் எழுத்தின் தொடக்கத்தைக் காட்டும் இந்த அரிய கல்வெட்டு எழுத்துக்கள் சமண துறவியர்கள் நடத்திய அறப் பள்ளிகளிலேயே அதிகமாக காணக் கிடைக்கிறது.

செஞ்சி பகுதியானது இயற்கையிலேயே கல்குவியலாகவும், பாறைகளாகவும், கனிம வளம் கொண்டவையாகவும் விளங்கும் இயற்கையான மலைகள் நிறைந்ததாகும். இதன் காரணமாகவே இம் மலைப் பகுதிகள் தமிழகத்தின் தொன்மை கல்வி நிறுவனங்களாக, சமூக ஒழுக்கத்தை மேம்படுத்தும் அறப் பள்ளிகளாக விளங்கியிருக்கின்றன.

செஞ்சிக்கு தென்மேற்கே உள்ளது வரிக்கல் கிராமம். இங்குள்ள சிவகிரி மலையில் 2000 ஆண்டு பழமையான சமண படுக்கைகளை பேராசிரியர்கள் ரமேஷ், ரங்கநாதன் குழுவினர் கண்டறிந்து ஆய்வு செய்து வழங்கியுள்ளனர். இந்த சிவகிரி மலையின் தெற்கே 89 அடி நீளம் கொண்ட குகை உள்ளது. குகையின் மேற்கே 10 சமணப் படுக்கைகளும், மலையின் கீழ்ப் பகுதியில் தெற்கில் சிறிய பாறையில் சமணப் பாதங்கள் செதுக்கப்பட்டுள்ளது. சமணத்துடன் தொடர்புடைய ஜைனகிரி என்ற பெயர் கொண்ட இம்மலையே 200 ஆண்டுகளுக்கு முன்னர்தான் சிவகிரி என மாற்றி உள்ளனர்.

மேலும் மலையின் உச்சியில் சங்க காலத்தைச் சேர்ந்த செங்கல் கட்டுமானக் கோயில் இருந்துள்ளது. அடித்தளத்தில் காணப்படும் செங்கல்லின் நீளம் 34 செ.மீ, அகலம் 6.5 செ.மீ இருப்பதால் இது சங்க காலத்தைச்சேர்ந்தது என உறுதியாகின்றது. அரிக்கமேடு பகுதியில் சங்க காலத்தில் காணப்படும் செங்கல் அளவில் இது ஒத்துப் போவதாக ஆய்வாளர் கூறுவதிலிருந்து செஞ்சியின் சங்க காலச் செழுமையை அறிய முடிகிறது.

இது தவிர செஞ்சியின் சுற்றுப் பகுதி ஊர்களான சிறுகடம்பூர், தொண்டூர், நெகனூர் பட்டி, பறையன்பட்டு பகுதிகளில் கண்டெடுக்கப்பட்ட சங்க கால கல்வெட்டுகளில் சமண முனிவர்களுக்கு அறப் பள்ளிகள் அமைத்துக் கொடுத்ததை தொண்டூர், நெகனூர்பட்டி கல்வெட்டுகள் வாயிலாகவும், சமண முனிவர்கள் வடக்கிருந்த நிகழ்வு, திருநாதர் குன்று, பறையன்பட்டு கல்வெட்டுகள் வாயிலாகவும் நம்மால் அறிய முடிகிறது. இங்கு காணப்படும் குகைக் கல்வெட்டுகள் வாயிலாக அமைந்த அறப் பள்ளிகள் மூலம் கணிதம், வானியல், விஞ்ஞானம், உயிர் ஞானம், மொழியறிவு, மருத்துவம் பயிற்றுவிக்கப்பட்டுள்ளது. மேலும் உணவு தானம், புகலிட தானம் அளித்த செய்திகளையும் அறிய முடிகிறது.

சிறுகடம்பூர் திருநாதர் குன்று :

செஞ்சிக் கோட்டையின் வடக்கே சிங்கவரம் செல்லும் சாலையின் மேற்கே அமைந்துள்ளது திருநாதர் குன்று. இப்பகுதி சிம்மபுரி என்றும் அழைக்கப்பட்டதாகும். சமண அறத்தைப் பரப்பிய 24 தீர்த்தங்கர்களின் திருமேனிகள் செதுக்கப்பட்டுள்ளன. அமர்ந்த நிலையில் இச் சிற்பங்களின் தலையின் மேற்பகுதியில் முக்குடை காணப்படுகிறது. மதுரை கழுகுமலையில் உள்ள சமணச் சிற்பங்கள்போல் இது காணப்படுவதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இது 4-5ம் நூற்றாண்டு காலத்தைச் சேர்ந்ததாகும். பாறையின் வலது பாகத்தில் ஒரு தீர்த்தங்கரர் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். மலையின் நடுப் பகுதியில் ஒரு பெரிய பாறையில் பத்மாசனத்தில் ஒரு தீர்த்தங்கரரின் சிலையும், மேல் பகுதியில் கல்வெட்டுச் சான்றும் இருந்துள்ளது தெரிகிறது.

மலைமீது மூன்று கல்வெட்டுகள் உள்ளன. முதிர்ந்த நிலை பிராமி எழுத்துக்களிருந்து வட்டெழுத்தாக தமிழ் வளர்ந்த, மாறுதல் அடைகின்ற கால கட்டத்தைச் சேர்ந்த கல்வெட்டு இங்குதான் முதன் முதலில் தென்படுகிறது என்கிறார் தொல்பொருள் ஆய்வாளர் திரு.வெங்கடேசன். இந்த திருநாதர் குன்றின் கல்வெட்டில்தான் " ஐ " எனும் தமிழ் எழுத்து பிறந்துள்ளது என்றும் வெங்கடேசன் கூறுகிறார். ஆகவே ஐ பிறந்து தை பிறந்த மலையாகிறது. தமிழுக்கு எழுத்து தந்த மலையாகிறது.

இங்குள்ள கல்வெட்டுகளில் சந்திரநந்தி ஆசிரியர் என்னும் சமணத் துறவி 57 நாட்கள் நோன்பிருந்து ( சல்லேகனை ) வீடுபேறு பெற்றார் என்றும், இளைய பட்டாரகர் என்னும் சமணத் துறவி 30 நாட்கள் நோன்பிருந்து வீடுபேறு பெற்றார் என்றும், கோயில் விளக்கேற்ற 400 ஆடுகள் தானம் தரப்பட்டதாகவும் கல்வெட்டு கூறுகிறது.

பறையன்பட்டு கல்வெட்டு :

செஞ்சி, அவலூர்பேட்டை அருகே உள்ளது பறையன்பட்டு. இங்கு கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டில் வடக்கிருந்து வீடுபேறு பெற்ற நிகழ்வு பொறிக்கப்பட்டுள்ளது.

நமோத்து, பாணாட்டு வச்
ச ணந்தி ஆசாரிய
ர் மாணாக்கராராத னி
நோற்று (மு)டித்த (நி)
சீதிகை

" நமோத்து " என்பது நமோஸ்து என்ற சமஸ்கிருதச் சொல்லைக் குறிக்கிறது. தமிழில் வணங்குகிறேன் என்று பொருள்.

பாணாட்டைச் சேர்ந்த வச்சநந்தி என்ற சமண ஆசாரியரின் மாணாக்கர் சாகும்வரை உண்ணா நோன்பிருந்து உயிர் துறந்ததற்காக எடுக்கப் பெற்ற தவம் செய்யும் இருக்கை என்று பொருள். சமணத் துறவிகள் வடக்கிருந்து உண்ணா நோன்பிருந்து உயிர் துறப்பதற்காக இச்சந்நிதிகளை ஏற்படுத்தபபடுவது இயல்பாகும்.

இக் கல்வெட்டின் வாயிலாக சமண முனிவர்களின் சமய மாண்பினை அறியலாம். பிற கல்வெட்டுகளில் சமணத் துறவிகளுக்குப் பிறர் செய்த கொடைகளை, பாளிய் - இருக்கை, அமைத்துக் கொடுத்ததை மட்டுமே பேசுகிறது. ஆனால் இக் கல்வெட்டில் சமண சமயத்தின் கொள்கை பேசப்படுகிறது.

தொண்டூர் கல்வெட்டு :

செஞ்சியின் கிழக்கே தொண்டூர் கிராமம் உள்ளது. இங்கு காணப்படும் சமணக் கல்வெட்டு 3ம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இங்குள்ள பஞ்சனார்பயடி என்ற மலைக் குன்றில் தெற்கு வடக்காக 3 சமணப் படுக்கைகள் உள்ளன. இங்கு கி.மு.2-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக் கல்வெட்டில் அகழ் ஊரைச் சேர்ந்த அறமோசி என்பவர் அமைத்துக் கொடுத்த சமணப் பள்ளி என உள்ளது. இந்தக் கல்வெட்டுதான் நடுநாடு என்று அழைக்கப்படும் ஒருங்கிணைந்த தென்னாற்காடு மாவட்டத்தின் மிகப் பழமையான கல்வெட்டு என்பது ஆய்வாளர்கள் கருத்து.

மலையின் மேல் 2000 ஆண்டுகளுக்கும் முந்தைய வெள்ளை நிறத்தில் வரையப்பட்ட பாறை ஓவியங்கள் உள்ளது. பஞ்சனார்பயடி குகைத் தளத்தின் வெளியே தரைப் பாறையில் இரு வரிகளில் இக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

" இளங்காயிபன் ஏவ
அகழ் ஊறறம் மோசி செயித அதிடானம் "

என்பது இதன் வாசகம். அதிடானம் என்பது புனித இருக்கையை குறிக்கும் சொல்லாகும். அகழூர் என்பது அகழ் ஊர் என இக் கல்வெட்டில் உள்ளது. இன்று தொண்டூர் அருகில் அகலூர் என்ற ஊர் உள்ளது இதை மெய்ப்பிப்பதாக உள்ளது. மேலும் அகழூரினர் ஒன்றாக இணைந்து இளங்காயிபன் என்பவர் பணிக்க அறம் செய்துள்ளனர். மோசி என்பது ஒரு நபரின் பெயராகக் கொள்ளலாம்.

" திருந்து மொழி மோசி பாடிய ஆயும் " ( புறம் : 158 )

புறநானூற்றுப் பாடலான இப் பாடலின் பொருள், திருந்திய சொல்லையுடைய மோசி என்னும் புலவனாற் பாடப்பட்ட ஆயும் என்பது பொருளாகும். இதில் உள்ள மோசி சங்க காலப் புலவர் பெயரை சுட்டுவதால், கல்வெட்டில் உள்ள மோசி என்பது சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு நபரின் பெயர் என்பது உறுதிப்படுகிறது.

நெகனூர்பட்டி கல்வெட்டு :

இக் கல்வெட்டு 3 - 4 ம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இக் கல்வெட்டும் சமணர் இருக்கை செய்வித்துக் கொடுத்ததை கூறுகிறது.

" பெரும் பொகய்
செக்கந்தி தாயியரு
செக்கந்தண்ணி செ
யிவித்த பள்ளி "

பெரும் பொகய் என்ற ஊரைச் சேர்ந்த சேக்கந்தி என்பவனின் தாயார் சேக்கந்தண்ணி செய்வித்த பள்ளி ( சமணர் இருக்கை ) என்று கல்வெட்டு







கூறுகிறது என்பது பேராசிரியர் சு.ராஜவேலு அவர்களின் கருத்தாகும்.

நெகனூர்பட்டி மேற்கே உள்ள அடுக்கண்கல் என்ற குன்றின் கீழ் அருகில் இயற்கையாக அமைந்துள்ள குகையின் கூரைப் பகுதியில் விளிம்பில் இக் கல்வெட்டு உள்ளது. சேக்கந்தண்ணி என்பதை " சேக்கந் அண்ணி " என பிரித்துப் படிக்க வேண்டும். இவரை சமணப் பெண் துறவியாகக் கொள்ளலாம். சேக்கிழார் என்பதில் சே குடிப் பெயராக இருப்பது போல சே குடிப் பெயராகக் கொள்ளலாம். சே என்பது காளை என்ற பொருளில் ,

" கயிறு இரு கதச் சேப் போல" ( அகம் : 36 ) என்று அகப்பாடலில் அகநாநூறு கூறுகிறது. கந்தி என்ற சொல்,

" கறந்த பால் அணைய கந்தி " ( சீவகம் : 26 : 49 )

கறந்திட்ட பால் போலுந் தூய தவப் பெண் என்று சீவக சிந்தாமணி கூறுகிறது. அதேபோல் சூடாமணி கந்தி, கௌந்தி என்ற சொற்களுக்கும் பெண் துறவி என்று பொருள் சொல்கிறது. இதன் மூலம் சே என்பது காளையையும், கந்தி என்பது துறவியையும் குறிப்பது உறுதிப்படுகிறது.

தொகுப்புரை :

•திருநாதர் குன்று, நெகனூர்பட்டி, தொண்டூர், பறையன்பட்டு போன்ற இடங்களில் கண்டெடுக்கப்பட்ட தொல் தமிழ்க் கல்வெட்டுகள் வழியாக சங்க காலத்தில் செஞ்சி பகுதியானது சிறப்பு பெற்ற நிலையில் இருந்துள்ளதை அறிய முடிகிறது. மேலும் செஞ்சியைச் சுற்றியுள்ள சுமார் 20 கிராமங்களில் மேலும் ஆய்வுகளை மேற்கொண்டால் செஞ்சியின் தொன்மையை அறியலாம் என்பது இதுவரை கிடைத்த கல்வெட்டுகள் மூலம் நம்மால் அறிய முடிகிறது.

•செஞ்சி பகுதியில் வாழும் மக்கள் 13ம் நூற்றாண்டுக்குப் பின் சிறப்பு பெற்ற செஞ்சிக் கோட்டை, ராஜா தேசிங்கு புகழ் இவற்றை ஒட்டியே பெருமிதம் கொள்வதால், சுமார் 2500 ஆண்டுக்கு முன்னரே சங்க காலச் சிறப்பு பெற்ற செஞ்சியின் தொன்மத்தை அறிய முற்படவில்லையோ என ஐயம் கொள்வதாக உள்ளது. சங்க கால ஆய்வுக்கான முன்னெடுப்புகளை தொடர்ந்து எடுக்க வேண்டும் என்ற கோரிக்கையும் இவ்வாய்வின் வழியாக எழுகிறது.

•கி.மு.3ம் நூற்றாண்டில் பரவிய சமணமும், அதன் வழியாக கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் வாயிலாகவும் அக் கால சமண முனிவர்கள் தமது சமயக் கருத்துகளை பரப்புவதற்காக வரவில்லை என்பதும், மாறாக அவர்கள் அறப் பணிகளான மக்களின் ஒழுக்கம், கல்வி, ஞானம், உணவு, மற்றும் புகலிட தானங்களை செய்வித்ததை மட்டுமே தங்களின் தலையாய நோக்கமாக கொண்டிருந்ததை அறிய முடிகிறது.

•கல்வெட்டுகளில் உள்ள பெயர்களும், அதற்கு சான்றாதாரமாக சங்கத் தமிழ்ப் பாடல்களில் சுட்டப்பட்டுள்ள பெயர்களையும் இணைத்து ஒப்புமைப்படுத்தும்போது இக் கல்வெட்டுகள் சங்க காலத்திற்கு உரியது என்பது உறுதிப்படுத்தப்படுகிறது.

•செஞ்சி பகுதியில் கிடைத்த தொல் தமிழ் கல்வெட்டுகளின் வழியாக சமண சமயத்தின் பரவலான போக்கினையும், சுமார் 1700 ஆண்டுகளுக்கு முன்னர் நிறுவப்பட்ட, செஞ்சிக்கு அருகில் உள்ள மேல்சித்தாமூரில் ஜினகஞ்சி மடம் என்ற சமணர்களுக்கான தலைமை பீடம் செஞ்சி பகுதியின் தொன்மத்தை பறைசாற்றுவதை நம்மால் அறிய முடிகிறது.



முடிவுரை :

ஒரு இனத்தின் நாகரிகம், பண்பாடு, ஒழுக்கம், வாழ்வியல் முறைகள் ஆகியவற்றை அறிய வரலாற்றோடு கல்வெட்டுகள், தொல்லியல் ஆய்வுகள் வழியாகவே நிறுவப்பட்டு நம்மால் அறிய முடிகிறது. செஞ்சி பகுதியில் கிடைத்த இக் கல்வெட்டுகளின் மூலம் சமண முனிவர்களின் மலைப் பள்ளிகள் மானிடருக்கு, இம்சை செய்யாமை, களவு செய்யாமை, பொய் சொல்லாமை, பிறன் மனை விழையாமை, மிகு பொருள் விரும்பாமை போன்ற வாழ்வியல் நெறிகளை விளக்கிக் கூறுவதை அறிய முடிகிறது.

இதன் வழியாக சங்க கால மக்களின் வாழ்வியல் அறங்களையும் இதன் வழியாக அறிய முடிகிறது. தொடர்ந்து தற்கால மக்களும் மேற்கண்ட அறங்களை கடைபிடித்து ஒழுகினால் சமூகம் உய்வுறும் என்பது தெளிவு. அதற்கு மேலதிக ஆய்வுகளும், தொல்லியல் கல்வெட்டு ஆய்வுகளும் அவசியம் என்பதை உணர்ந்து அனைவரும் செயல்பட வேண்டும்.

துணைநின்ற நூல்கள் :

1. ரிஷபா - ஆதி பகவன் - ஸ்வாமி ஆர்.பி.பிரக்வாட் தமிழில் சன்மதி - ஸ்ரீ ரத்னா ஹீரிபாய் இலக்கிய பிரசுரங்கள், 46, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை - 1.

2. புறநானூறு மூலமும், உரையும் - புலியூர்க்கேசிகன் - சாரதா பதிப்பக சென்னை - 14

3. அகநானூறு - மூலமும், உரையும் - புலியூர்க்கேசிகன் - சாரதா பதிப்பகம், சென்னை - 14

4. சீவக சிந்தாமணி மூலமும், உரையும் - ஔவை சு.துரைசாமிப் பிள்ளை - திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஸ்ரீ சென்னை - 18.

5. களப்பிரர் கால கல்வெட்டுகள் - பேராசிரியர் மா.பவானி., கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

குறிப்புதவிகள் :

1. திரு.ஸ்ரீதர்., தமிழ் பிராமி கல்வெட்டுகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.

2. Thiru.Mahadevan., Early Tamil Epigraphy., - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

# அன்பே இறைவழிபாடு
## கண்ணப்ப நாயனார் கதை
### - ரா. வித்யாலட்சுமி



நான் மிக அதிகமாய் நேசிக்கும், வியக்கும் நாயன்மார்களில் ஒருவர் கண்ணப்ப நாயனார். அவருக்குப் பரிட்சியம் இல்லாத ஒரு அன்பை, ஒரு இறையை மனம் முழுக்க நிறைத்துக்கொண்டு முழு மனத்துடன் அவரைச் சரணடைந்து அந்தப் பதவியைப் பெற்றிருக்கிறார்.

சரி அவர் எப்படி நாயன்மார்களில் ஒருவரானார்? பொத்தப்பி என்ற நாட்டில் வேடர்களின் தலைவன் நாகனும், அவன் மனைவி தத்தையும் வாழ்ந்து வந்தனர். இவர்கள் முற்பிறவியில் செய்த தவத்தினால் "திண்ணன்" என்னும் மகவைப் பெற்றனர். திண்ணன் தளிர் நடையிட்டு, மழலை பேசி, அழகாய் வளர்ந்து வரலானார்.

விற்பயிற்சி விழாவிற்கான வயதை அவர் எட்டவும், நாகன் எல்லாக் காட்டு தலைவர்களுக்கும் சொல்லி அனுப்பினான். எல்லாரும் பலவித பரிசுப்பொருள்களோடு வந்து விழாவைச் சிறப்பித்தனர். ஏழு நாள்கள் பலவித கொண்டாட்டங்களோடு விழா இனிதே நிறைவுற்றது. ஏழாம் நாள், ஆசிரியர் வில் எடுத்துத் தரத் திண்ணனார் திறம்பட வில்வித்தையைக் கற்றுத் தேர்ந்தார். பதினாறு ஆண்டு பருவமும் எய்தினார். வனவிலங்குகள் பயிர்களை நாசம் செய்வதாய் வேடர்கள் நாகனிடம் முறையிடுகின்றனர். மூப்பின் காரணமாகத் தன்னால் ஏதும் செய்ய இயலாத நிலையால் வருந்தும் நாகன், திண்ணனாரைத் தலைவனாக ஆக்கிவிட்டால் அவர் காட்டைப் பராமரித்துக்கொள்வர் என்று கூறுகிறார்.

அதன் பொருட்டு தேவராட்டியை அழைத்து குறி கேட்டுத் திண்ணனாரிடம் வரையாட்சியை அளிக்கிறார். தகப்பனாரின் பேச்சைத் தட்டாது வரையாட்சியை ஏற்கிறார் திண்ணனார் . தேவராட்டியும் தாம் வரும் வழியில் நல்ல சகுனங்களையும், குறிகளையும் கண்டதாக கூறித் திண்ணனாரை வாழ்த்துகிறார். அன்றைய இரவைச் சுனைநீரில் முழ்கிக் கழிக்கிறார்.

அடுத்த நாள் காலை, வேட்டை கோலங்கொண்டு, வில் எடுத்துப் பிற வேடர்களோடு சேர்ந்து வேட்டைக்குப் பெற்றோரின் ஆசிகளோடு காட்டை நோக்கி புறப்பட்டார். பல மிருகங்களை வேட்டையாடிய பின்னர், மிக வலிமை பொருந்திய ஒரு பன்றி வலைகளை அறுத்துக்கொண்டு ஓடியது. ஓடிய பன்றியைத் திண்ணனாரும் , அவர் நண்பர்களும் துரத்திக்கொண்டு ஓடினர். ஓரிடத்தில் பன்றி நிற்க, அம்பு எய்து கொல்லாமல் திண்ணனார் உடைவாள் கொண்டு பன்றியை வெட்டினர்.



உடன் வந்த நண்பர்கள் வியக்க, அந்த பன்றியைக் கொன்றார்.

அதிக தூரம் ஓடி வந்த காரணத்தினால் களைப்பும், பசியும் , தாகமும் மிகுந்து காணப்பட்டனர் மூவரும். அருகில் காளாத்தி மலை சாரலில் பொன்முகலி ஆறு ஓடுவதால் அங்கு சென்று தாகம் தீர்த்துக்கொண்டு , அந்தப் பன்றியைச் சுட்டு உண்டு பசியையும் போக்கிக்கொள்ளலாம் என்று மூவரும் கிளம்பினர். களைப்புடன் நடந்தாலும் காளத்தி தேவர்பால் கொண்ட முன்வினை அன்பினால் திண்ணனார் மிகுந்த உற்சாகத்துடன் காணப்பட்டார். முகலி ஆற்றங்கரையில் நண்பரிடம், தீ மூட்டி பன்றியை வதக்கச் சொல்லி, அவரும் நாணனும் ஆற்றில் நீராடிக், காளத்தி நாதரை வழிபட்டு வருவோம் என்று கூறிச் சென்றார்.

அழகிய மலர்களின் நறுமணம் கமழும் முகலி ஆற்றில் இறங்கி மூழ்கிய திண்ணனாருக்கு உடனே இறைவன்பால் அன்பு மிகுந்து காண வேண்டி ஆசை பிறந்தது. தன் நண்பரோடு குளிர் மலைசாரல் ஏறிச் சிவனது பேரன்பை நோக்கிச் சென்றனர். தொலைவில் வரும் போதே பேரருள் ஈசனை , அவன் அன்பை அவர் புரிந்துக்கொண்டார். நடந்து வந்தவர், ஓடி வந்து இறைவனைத் தழுவிக்கொண்டார், உச்சிமுகர்ந்து அன்பால் கண்ணீர் விட்டுக் கதறி நின்றார்.

தான் நிற்பது இறை முன் என்பதும் மறந்து, 'ஐயோ என் ஐயனே கொடுமை செய்யும் காட்டு விலங்குகள் வாழும் இக்காட்டில் தனியே உள்ளீரே' என்று கதறினார். ஐயன் மீது பச்சை இலைகளையும், பூவையும் யார் போட்டது என்று கோவத்தோடு வினவினர். அதற்கு நாணனும் முன்பொரு சமயமும் இப்படியே ஒரு பூசை செய்பவர் செய்தார், என்று கூறினார்.

இவை எல்லாம் இருந்தும், ஐயனுக்கு இறைச்சியை யாரும் ஏன் தரவில்லை? இனி அதை நானே தரவேண்டும், இவரைப் பிரியாது இவருக்கு இறைச்சியைப் படைக்க யான் இங்கு இருக்க வேண்டும் என்று முடிவு செய்தார் திண்ணனார். இறைச்சியைக் கொணர அங்கிருந்து நகர்ந்தார், ஆனால் இறைவன் தனியாய் இருப்பாரே என்று மீண்டும் வந்தார், ஆரத் தழுவினார், மீண்டும் சென்றார், வந்தார் தழுவினர். விட்டுப் பிரிய மனமின்றிக் கதறினார். ஆனாலும் சுவையான மெல்லிய இறைச்சியை உனக்குக் கொண்டு வந்து தருவேன் என்று கூறிக் கிளம்பினார்.

அவர் மலையின் கீழ் வரவும் காடன் அவர்களை நோக்கி வரவும் சரியாக இருந்தது. பன்றியைச் சுட நெருப்பிட்டிருந்தான். ஏன் இவ்வளவு நேரம் என்று நாணனைக் கேட்டான். இது ஏதுமே கேளாது , திண்ணனார் அந்தப் பெரிய பன்றியை நெருப்பில் வாட்டி , நல்ல ருசியான துண்டுகளை இலையில் வைத்து, இனிப்பான துண்டுகளை வாயில் இட்டுச் சுவைத்துத் தேர்ந்தெடுத்தார். அருமையான இளங்கறியை மட்டுமே எடுத்துக்கொண்டார்.

திண்ணனார் குடுமி நாதரைச் சேரப்போகிறார் என்ற செய்தியைச் சொல்ல நாணனும், காடனும் நாகனை நோக்கி விரைந்தனர். திண்ணனாருக்கு ஏதும் தெரியவில்லை. ஈசனுக்கு அபிசேகம் செய்ய சிறிது தண்ணீர் வாயிலும் , அவருக்குச் சூட்டக் கொஞ்சம் மலர்களைத் தன் குடுமியிலும் சொருகிக்கொண்டர். வில்லையும் அம்பையும் ஒரு கையில் கொண்டு இலையில் இன்னொரு கையில் இறைச்சியைக் கொண்டு ஓட்டமும் நடையுமாய் குடுமி நாதரை அடைந்தார்.

மேலே தனித்து விடப்பட்ட இறைவன் எப்படி இருகிறாரோ? எவ்வளவு பசியில் இருகிறாரோ? என்று எண்ணி, விரைந்து வந்தார். ஏற்கனவே இறைவன் மீது இருந்த மலர்களைத் தன் செருப்புக் கால்களால் அகற்றி, வாயில் கொண்டு வந்த நீரை இறைவன் மேல் அபிசேகம் செய்து, தனது குடுமியில் இருந்த மலர்களை இறைவன் மீது போட்டு, வில்லை ஒரு கையில் ஏந்தி தான் பார்த்துப் பார்த்துச் சமைத்த அருமையான இனிய ஊனை இறைவனுக்குப் படைத்தார். ஒருவேளை இந்த உணவு ஈசனுக்குப் பற்றாமல் போனால் என்னாவது என்று எண்ணி மீண்டும் கொஞ்சம் கொண்டு வர எண்ணிய சமயத்தில், ஆதவன் மறைந்ததால் அங்கேயே இருந்துவிட்டார்.

அடர்ந்த காடு, இருள் சூழ்ந்த பொழுது கொடுமை செய்யும் விலங்குகள் என்று இருக்கும் இந்த இடத்தில் இறைவன் தனித்து எங்ஙனம் இருப்பர் என்று அஞ்சி இரவும் பகலும் ஐயனைக் காவல் காத்துக் கிடந்தார் திண்ணனார். பல தவங்கள் புரிந்து பல காலம் காத்திருந்தும் பெற முடியாத இறைவனின் பேரருளுளைத் தன் அன்பால் பெற்றார்.

அன்றைய பொழுது இனிதே புலர்ந்தது. காலை விடிந்ததும் இறைவனுக்குப் பசிக்குமே என்று, சுவை மிகுந்த இறைச்சியைக் கொண்டுவரத் தனிவேடனாய்க் கிளம்பினர். அவர் கிளம்பிய பொழுதில், தினமும் ஈசனுக்குப் பூசைகள் செய்யும் சிவாச்சாரியார் அங்கு வந்து சேர்ந்தார். ஈசன் முன் இறைச்சித் துண்டுகளும், எலும்புத் துண்டுகளும், செருப்புக் கால் அச்சும் இருந்தது கண்டு துடிதுடித்துப் போனார். 'ஐயோ, யார் இந்த கொடுமையைச் செய்தது' என்று மனம் நொந்து, அதை எல்லாம் பெருக்கிச் சுத்தம் செய்து முடித்துத் திருமுகலி ஆற்றில் குளித்துவிட்டு வந்தார்.



மீண்டும் தன் பூசைகளைத் தொடங்கி, வரிசைப்படி அனைத்துத் துதிகளையும் செய்து முடித்தார். பின் விடைபெற்றுத் தன் தபோவனத்தை அடைந்தார். காலையில் வேட்டைக்குச் சென்ற திண்ணனார் கொழுத்த பன்றி, கலைமான், மான், மரை , கடமை போன்ற விலங்குகளைக் கொன்றார். அனைத்தையும் எடுத்துக்கொண்டு ஓர் இடம் சேர்ந்தார். தீயை மூட்டி நல்ல சுவை மிகுந்த இறைச்சியை வதக்க ஆரம்பித்தார், தைக்கப்பட்ட இலைகளில் சுவை மிகுந்த இனிமையான தேனைச் சேகரித்தார். வெந்த கறியை ருசிப் பார்த்து வைத்துக்கொண்டார். அதில் தேனைச் சேர்த்தார். முன் போல இறைவனுக்கு வேண்டிய நீரையும், மலர்களையும் எடுத்துக்கொண்டு மலை மேல் ஏறினார்.

முன் போல சிவாச்சாரியர் செய்த பூஜையை அகற்றி, தான் கொண்டு வந்த இறைச்சியையும், நீரையும், மலர்களையும் கொண்டு பூசையை முடித்தார். இனிமையான இறைச்சியும், தேனும் கலந்திருக்கிறேன் முன்னையதை விட இது அருமையானது என்று கூறினார். இரவு முழுதும் இறைவனுக்குக் காவல் புரிந்தார். பகலில் வேட்டைக்குச் சென்றார். பகலில் சிவாசாரியார் வந்து பூசைகள் செய்வதும் மாலையில் அதைத் திண்ணனார் அகற்றுவதும் தொடர்ந்து நடந்தது.

இதற்கிடையில் காடனும், நாணனும் நாகனை அழைத்துக்கொண்டு திருகாளத்தி மலையை அடைந்தனர். திண்ணனாரைச் சமாதனப்படுத்தி அழைத்துக்கொண்டு செல்ல முயற்சித்தனர். ஆனால் இறைவன்பால் அன்பு கொண்டு, அவர் பேரருளைப் பெற எத்தனிக்கும் திண்ணனார் அதற்கும் இசையவில்லை. வந்தவர்கள் அப்படியே திரும்பிச் சென்றுவிட்டனர்.

திண்ணனாரும், சிவாச்சாரியாரும் அவர் அவருக்குத் தெரிந்த வகையில் பூசையைத் தொடர்ந்தனர். ஆனால் சிவாச்சார்யார் இந்தக் கொடுமையைச் சிவனுக்குச் செய்வது யார் என்று அறிய முற்பட்டார். மனம் அதிக வேதனை கொண்டார். அதனால் இறைவன் அவர் கனவில் வந்து, "நமக்கு பூஜை செய்யும் வேடனைச் சாதாரணமாக நினையாதே, அவன் மிகுந்த அன்பு கொண்டவன். அவன் அன்பு என்னை அடையும் அன்பு மட்டுமே, அன்பு வெள்ளம் பெருகியது போன்றது அவன் பூஜை, என் மகன் முருகனது காலடியை விடவும் சிறந்தது அவன் செருப்படிகள், கங்கை தீர்த்தத்தினும் உயர்ந்தது அவன் வாயில் இருந்து உமிழும் நீர், பிரம்மனும் திருமாலும் பூசித்த மலர்களினும் அவன் குடுமி மலர்கள் சிறப்புடையன, அவன் எச்சில் பட்டுச் சுவைத்த இறைச்சி தேவர்கள் தரும் அவிர்பாகத்தினும் சுவை மிகுந்தது என்று கூறினார். நாளை நீ அங்கு மறைந்து நின்று அவன் செயலைக் கண்டால் அவன் அன்பைப் புரிந்துக்கொள்வாய்" என்று கூறி மறைந்தார்.

இரவு முழுதும் உறக்கம் இன்றித் தவித்தார் சிவாச்சாரியார். காலையில் எழுந்து குளித்து முடித்து, முகலியாற்றை அடைந்து குடுமிநாதரைப் பூசை செய்து ஒரு மரத்தின் பின் மறைந்துகொண்டார். சிவாச்சாரியார் வருவதற்கு முன்பே வேட்டைக்குச் சென்ற திண்ணனார், வேட்டையை முடித்து இறைச்சியைச் சுட்டு, ருசி பார்த்து எடுத்துக்கொண்டு, மலர்களைக் கொய்து குடுமியில் சொருகிக்கொண்டு , தாமதமாகிவிட்ட படியால் ஓட்டமும், நடையுமாய் வந்தார். ஆனால் வழியில் தான் கண்ட சகுனங்கள் ஏதுமே சரியில்லை. ஆறாம் நாள் காலை முதலே சகுனங்கள் அவரைப் பயங்கொள்ள செய்தது, ஈசனுக்கு ஏதோ துன்பம் நேர்ந்ததாய் நினைத்தார். வரும் வழியில், கெட்ட பறவைகள் குருதி தோன்றுவதற்கான அறிகுறியைக் காண்பித்தன.

திண்ணனது அன்பை உணர்த்த இறைவன், தனது ஒரு கண்ணில் குருதியை வழிய விட்டார். அதைத் தொலைவில் இருந்து கண்ட திண்ணனார் 'ஐயோ என்ன கொடுமை' என்று ஓடி வந்தார் , வந்த வேகத்தில் கொண்டு வந்த இறைச்சியையும், நீரையும் தவறவிட்டார், பூக்கள் தலையில் இருந்து சிதறி கீழே விழுந்தது. அழுது புரண்டார். செய்வதறியாது நின்றார். மலரினும் மெல்லிய மனதினராயின திண்ணனார். கடிய பாறையில் வீழ்ந்து அழுதார். ஈசனைக் கட்டிக்கொண்டு அழுதார். இக்குற்றத்தைச் செய்தது யாராக இருக்கும் என்று, மலை முழுதும் வேடர்களையும், கொடிய விலங்குகளையும் தேடி அலைந்தார். யாரையும் காணாது சோர்ந்து போனார். கண்ணில் குருதியை நிறுத்த மலைக்காடுகளைச் சுற்றி மருந்து கொணர்ந்து கண்ணில் விட்டார். குருதி நின்றபாடில்லை! அய்யோ என் செய்வேன் என்று புலம்பினர்....

"ஊனுக்கு உண்டான நோயை ஊனே தீர்க்கும்" என்று இறைவனின் கண்ணில் ஏற்பட்ட காயத்திற்குத், தன் கண்களைத் தோண்டி அங்கு வைப்பதே சரியான மருந்து என்று நினைத்தார். தன் அன்பால் கண்களைத் தோண்டி , குருதி வழிந்து கொண்டிருக்கும் கண்களில் அப்பினர். என்னே ஆச்சரியம், குருதி நின்றது. அகமகிழ்ந்து போனார் திண்ணனார். ஆகா, என்ன காரியம் செய்தேன், இறைவனின் வலியைப் போக்கினேனே என்று குதித்தார், கூத்தாடினார்.

ஆனால் இன்னும் இவரின் அன்பை உலகிற்கு உணர்த்த இறைவன் திருவுள்ளம் கொண்டார், இன்னொரு கண்ணிலும் குருதி பெருக்கெடுத்தது. அஞ்சவே இல்லை திண்ணனார் அதுதான் மருந்து உள்ளதே. ஆனால் கலங்கினர், கண்களைத் தோண்டிய பின் இறைவனின் கண் எங்கே இருக்கிறது என்று தெரியாதே என்ன செய்வது என்று



தன் காலை, வலக்கண்ணில் ஊன்றி அம்பால் தன் இன்னொரு கண்ணையும் தோண்ட எத்தனித்தார். ஆனால் அப்போது அன்பே இறைவனாகிய, சிவனது திருக்கரங்கள் திண்ணனாரது கைகளைத் தடுத்துக் "கண்ணப்ப நிற்க" என்று கூறி அருளினார். "என் வலப்பக்கத்தில் நிலையாக நிற்பாய் " என்று கூறி அருளினார், தேவர்கள் சூழ் தலைவன் சிவபெருமான். இவை அனைத்தையும் மறைந்து நின்று பார்த்த சிவாச்சாரியாரும் , வானத்து தேவர்களும் பூமாரி பொழிந்தனர்.

உண்மையான அன்பில் இறைவனை அடைந்த கதை "கண்ணப்ப நாயனாருடையது" . ஆறு நாள்களில் இறைவன்பால் கொண்ட அன்பால் இறையை அடைந்துவிட்டார். சிவாய நம!

குறவஞ்சியைத் தழுவி...

காடெல்லாம் ஆண்டுவந்தான் எங்கவூரு நாகன்,
அவன் பொஞ்சாதி தத்தையும் பெத்து எடுத்தா ,
திண்ணனு ஒரு புள்ள!
கட்டுத் திட்டா வளந்தாரையா அவரும் இங்கே மண்ணில்,
வில்லு வித்த கத்து முடிச்சு ஆனாரையா தலைவர்!

கூட்டத்தோட வேட்டைக்குதான் போனாரையா அவரு,
குண்டு கொழுத்த பன்னியத்தான் கொன்னாரையா தனியா!
சுட்டுத் தின்ன நெருப்பு மூட்ட போனானங்கே காடன் !
களைப்பு தீர தண்ணி குடிக்க முகலிஆத்து பக்கம் போனார்!
விட்ட குறை தொட்ட குறையா ,
பாத்தாரையா ஈசனையும்
அன்பாலே அங்கு!

பச்சை இலயும் பூவும் போட்டு வெச்சதிங்கு யாரு?
முறச்சு பார்த்துக் காலால தட்டிவிட்டார் அவரு!
கீழ போயி இளங்கறியும் சுட்டுச் சுட்டு எடுத்து,
வாய் நெறைய தண்ணியையுமா தலை நெறைய பூவுமாவும்
வந்தாரையா இவரு !

படைச்சு முடிச்சு பாதுகாப்பா இருந்தாரையா கூட,
விடிஞ்சதுமே மறுபடியும் வேட்டைக்குத்தான் போனார்!
அங்கே வந்த பூசாரியும் பாத்தாரையா கறியைப்
பதறிபோயிப் பெருக்கித் தள்ளிச் செஞ்சாரையா பூசை!

அஞ்சு நாலு இப்படியே போனதையா நிலைமை,
பூசாரி கனவுல வந்து ஆறாநாலு நடக்கறதை
மறைஞ்சிருந்து பாரு
சொன்னாறையா சிவனும்!
வழக்கம் போல வேட்டைக்குத்தான் போனாரையா திண்ணன்,
மறஞ்சிருந்த பூசாரியும் காத்திருந்தார் அங்கு!

நல்லாத் தானே இருந்தாரு சிவனும்
அதுவரைக்கும்,
திண்ணன் வர நேரத்துல கண்ணுல வெச்சாரையா ரத்தம் !
பதறிப் போனான், கதறி நின்னான் வேடத் தலைவன்,
ஓடிப் போய்ச் செஞ்சதாருனு தேடி நின்னு பாத்தான் !

யாருமில்ல எங்குமில்ல அந்தக் காட்டில்
அவனைத்தவிர,
ஓடிப் போயி மருந்து எடுத்துக் கண்ணுலேயே வெச்சான்!
நின்ன பாடில்லை அந்த ரத்தம் !
கண்ணுக்குக் கண்ணே மருந்தோனு ,
தோண்டி எடுத்தான் அவன் கண்ண!

ரத்தம் வழிஞ்ச கண்ணுல இவன் கண்ண வெச்சான்,
அய்யோ என்ன இது, நின்னு போச்சு ரத்தம்!
குதிச்சுப் போனான் ரசிச்சு சிரிச்சான் என்னனு சொல்லமுடியாது,
குதூகலத்துல கூத்தாடினான்!

விட்டுடு வாரா சிவனு, திரும்ப திரும்ப சோதிச்சாரு,
இன்னொரு கண்ணுல ரத்தம் வருது!
பயமே இல்ல திண்ணனுக்கு அதான் இன்னொரு கண்ணு இருக்கே!
ஆனாலும் கூட கண்ணத் தோண்டி எப்படி வெக்க?

அடையாளம் வெக்கக் கால எடுத்து வெச்சு,
அம்பெடுத்துக் கண்ணத் தோண்டும் போது !
"கண்ணப்ப நிற்க" குரலோடு சேர்ந்து
வந்தாரையா அங்கு ஈசன்!
எப்போதும் என்னோடு இரு என்று,
சேர்த்துக் கொண்டாரு அவரு !
ஆறு நாலு பக்தியிலே
ஆனாரையா நாயன்மாரா
கண்ணப்பனும் அன்று!

இறைவனைச் சேர்ந்தாரடி எங்க சாமீ அம்மே,
ஆறு நாளில் அன்பு செய்தார் உலகிலேயே அம்மே,
கல்லிலே கடவுள் கண்டார் திண்ணனார் அம்மே,
கண்ணுக்குக் கண்ணு தந்து உயர்ந்து போனார் அம்மே!



# ஆடலும் சின்னத் தேடலும்

- சிதனா மங்களகௌரி



சில ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு எழுத்தாக்கத்துக்காகப் பல்வேறு நாட்டின் நடனங்கள் பற்றிய குறிப்புகளைத் திரட்டிக் கொண்டிருந்த போதுதான், நமது தென்னிந்திய நகரங்களிலும் பட்டித்தொட்டிகளிலும் ஆடப்படும் சில நடனங்கள் இங்கேயும் (மலேசியா) உயிர்வாழ்ந்து கொண்டிருப்பது தெரிந்தது. ஆடுகளமும் ஆடலுக்கானத் தேவையும் வெவ்வேறாகவே இருந்தாலும், அதனூடே மெல்லிய ஒற்றுமைகளைத் தெள்ளத் தெளிவாகவே காண நேர்ந்தது.

இருப்பினும் தொன்றுதொட்டுக் கலை, கலாச்சாரம், உணவு, உடை, பண்பாடு எனத் தன் பங்களிப்பை உலகம் முழுக்க தாராளமாக வழங்கிக் கொண்டிருக்கும் நமது முப்பாட்டனின் மண்ணிலிருந்து, இங்கே தடம் பதித்துக் கொண்டிருக்கும் இந்த நடனங்களுக்கும் இந்த மண்ணிலேயே ஆடப்படும் நடனங்களுக்கும் இடையே தென்படும் கலாச்சார அதிர்வுகளே இந்தத் தேடலை மேற்கொள்ளத் தூண்டியது!

பொய்கால் குதிரை:

குதிரை போன்ற தோற்றமுடைய கூடு ஒன்று. அதன் முதுகுப்பகுதியில் ஒரு ஆள் தன்னைப் பொருத்திக் கொள்ளும் அளவுக்கு இடைவெளி. அந்த இடைவெளிக்குள் உட்புகுந்து கொண்டு அல்லது அந்தக் கூட்டினைத் தனது இடுப்போடு சேர்த்துக் கட்டிக் கொண்டு, குதிரை சவாரி செய்வது போலப் பாசாங்கு செய்து ஆடப்படும் நடனமே பொய்க்கால் குதிரை நடனம்! குதிரையின் நான்கு கால்களுக்குப் பதில் இரண்டு கால்களுடனேதான் ஆட்டம் வெளிப்படுத்தப்படும்.

காலம்:

தஞ்சாவூரில் தோன்றியதாக நம்பப்படும் இவ்வாட்டத்தின் பூர்விகம் மராட்டியம் என்றும் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்கள் காலத்தில் தென்நாட்டிற்கு வந்திருக்கலாம் என்றும் ஒரு கணிப்பு உண்டு. நடனத்தின் கருவானது ராஜபுத்திர மன்னன் ராஜாதேசிங்கு அவர்களின் புகழ், கீர்த்தி இவற்றை எடுத்துச் சொல்லும்படியாக இருக்குமாம். சில இடங்களில் புராண கதைகளே நாட்டிய கருவாகவும் அமைவதுண்டாம்.

அதே சமயத்தில் சேர சோழ பாண்டிய காலத்திலிருந்து வழக்கத்தில் இருந்து வந்த கலை இதுவெனவும், அரசவையிலும் இந்நடனம் தனக்கான இடத்தைப் பெற்றிருந்தது என்பதாகவும் கூட ஒரு செய்தியைக் காண நேர்ந்தது. எது உண்மை?



சிலப்பதிகார மாதவி ஆடிய மரக்காலாட்டம்

சிலப்பதிகார காதையில் வரும் மாதவி எனும் கதாபாத்திரம் ஆடல் கலையில் சிறந்தவள். அவள் ஆடிய பதினொரு வகை ஆட்டங்களில், துர்க்கை ஆடிய மரக்காலாடலும் ஒன்றாகும் எனும் தகவலைக் கண்ணுற்றபோது, இஃது என்ன புது பெயர் என்று தேடலில் இறங்க வேண்டியதானது. அப்படி நூல் பிடித்துக் கொண்டு போகும்போது, இந்துக்களின் பெண் தெய்வமான துர்க்கை ஆடிய நடனம் இந்த மரக்காலாடல் என்கிற செய்தி நமக்குக் கிடைக்கிறது. துர்க்கையைக் கொல்ல அவளின் எதிரிகளானவர்கள் கொடிய விஷமிகு பாம்பாகவும், தேளாகவும் உருமாறி வந்த போது, அவர்களை அழிக்க தன் கால்களில் மரத்தால் ஆனப் பொய்க்கால்களைக் கட்டிக் கொண்டு ஆடியதாகவும், அந்தக் கணமான கட்டையினால் தாக்கப்பட்டு அந்த நச்சு ஜந்துக்கள் உயிர் இழந்ததாகவும் புராண கதைகள் வழங்கப்படுகின்றது. அது மட்டுமல்ல, பொய்க்கால் நடனம் என்ற பெயரும் துர்க்கை ஆடிய இந்த மரக்காலாடல் என்ற நடனத்தின் பின்புலனே என்பதும் தெரியவருகிறது. அந்த வகையில் இந்நடனம் சேர சோழ பாண்டிய காலத்திலிருந்தே தொன்று தொட்டு வருகிறது எனும் கூற்றினை நாம் உண்மையெனக் கொள்ளலாம்! ஒருவேளை, மராட்டியர்கள் வெளிப்படுத்த ஆரம்பித்தப்பின் இந்நடனம் பரவலாகப் புகழ் பெற்றிருக்கவும் கூடும்! (இந்தக் கால வேறுபாட்டினை யாரேனும் உறுதிப்படுத்தினால் நாம் ஏற்றுக் கொள்வோம்.)

இதையும் தவிர்த்து, காதலால் கட்டுண்ட தன் மகளை அந்தக் காதலனுக்கு மணமுடிக்கப் பெண்வீட்டார் மறுத்த போது, காதலன் தனது எதிர்ப்பைத் தெரிவிக்க, இலைகளால் ஆன பொய்க்குதிரை ஒன்றைத் தயார் செய்து, அதைக் கட்டிக் கொண்டு தெருவில் நின்று ஆடினான் எனவும் ஒரு செய்தி இருக்கிறது. இது தொல்காப்பியத்தில் வருகிற செய்தியாகும்.

நான் நேரிடையாக சந்தித்த திருமதி சந்திரா சந்திரன் என்பவர், நாகர்கோயிலைப் பிறந்தகமாக கொண்டவர். இவரின் சொந்த ஊரான தாழைக்குடியில் பொங்கல் முடிந்து வரும் திருக்கல்யாணம் எனும் வைபவத்தில், கட்டாயமாக இருக்க வேண்டிய ஒரு விஷயமே இந்தப் பொய்க்கால் குதிரை ஆட்டம்தான் என தகவல் தெரிவித்தார். இன்றுவரை தொடர்கிறதாம் இந்த விழாவும் பொய்க்கால் நடனமும்!

குதிரை வடிவமைப்பு:

மூங்கில் தப்பைகளாலும், காகித அட்டையாலும் வடிவமைக்கப்பட்டு, எடுப்பான வர்ணங்களாலும் பட்டுத் துணிகளாலும் மற்றும் குஞ்சலம் போன்ற அலங்கார பொருட்களாலும் அழகு செய்யப்பட்ட குதிரைக் கூடே பொய்க்கால் நடனத்துக்குப் பிரதானம். இக்கூட்டினை மாட்டிக்கொண்டு ஆடும் இந்நாட்டியத்தின் சிறப்பே, கலைஞர்கள் பொய்கால்களைத் தங்கள் கால்களோடு இணைத்துக் கொண்டு ஆடுவதுதான். உற்றுக் கவனித்தால் அப்பொய்க்கால்கள் குதிரையின் குளம்பினை ஒத்திருப்பதை அறியலாம். இதற்கு அதிக பயிற்சி தேவைப்படுகிறது!

ஆணும் பெண்ணுமாய் ஜோடி சேர்ந்து ராஜா ராணியாய் வேடமிட்டு ஆடும் இவ்வாட்டத்திற்குப், புரவியாட்டம், புரவி நாட்டியம், பொய்க்குதிரை ஆட்டம் எனப் பல பெயர்கள் இருப்பது போல, மற்ற மாநிலங்களில் இடத்திற்குத் தகுந்த பெயராலும் அழைக்கப்படுகிறது. ஒரிசாவில் - சைத்திகோடா அல்லது கெயுதா என்றும் ஆந்திராவில் திலுகுர்ரம என்றும் அழைக்கப்படும் இந்நடனம் ராஜஸ்தானில் கச்சி கொடியெனவும், கேரளத்தில் குதிரைக்களியெனவும் நாமகரணம் பெறுகிறது!

பொதுவாக நடனக் கலைஞர்கள் நடனத்துக்கு முன்பு செய்து கொள்ளும் ஒப்பனை நாட்டார் நடனக் கலையில் வண்ணமயமாக இருக்கும். மஞ்சள், இளஞ்சிவப்பு, நீலம் போன்ற பளபள வர்ண உடையில், ஆண்கள் தலையில் கிரீடம், இடையில் வாள் போன்ற அலங்காரத்துடனும், பெண்கள் ஒரு மகாராணிக்குறிய சகல அம்சத்துடன் கழுத்து, காதுகள் மற்றும் கரங்களில் நீள முத்து மாலை, ஜிமிக்கி, மாட்டல், கண்ணாடி வளையல், நீள ஜடையில் பல வண்ணங்களில் சுற்றிவிடப்பட்டிருக்கும் காகிதப்பூ அலங்காரத்திலும் பார்ப்போரைப் பாதி மயக்கிவிடுவர். போதாக்குறைக்குக் காலில் கொஞ்சும் சலங்கையும் நையாண்டி மேளமுமாக காண்போரின் கண்களைச் சுண்டி இழுப்பதோடு அவர்களையும் தாளத்திற்கேற்ப ஆட வைத்துவிடுகிறது இந்த நாட்டுப்புறக் கலை.

“கொக்கலி ஆட்டமென்ற
உயரக்கால் ஆட்டத்தில்
பொய் கால்களைப் பூட்டி
கொக்கின் கால் போல்
நீண்ட கட்டையோடு
ஆறடி உயரம் வரை
ஆகாயத்தில் நின்றாடும்
ஆட்டமிது தழன் கலை...”

இசைக்கேற்ப ஆண் நடன கலைஞர் பெண் கலைஞரை நோக்கி முன்னேறவும், பெண் கலைஞர் தள்ளித் தள்ளிப் போவதுமாக, பார்ப்போரை மயங்க வைக்கும் அசைவுகளைத் தன்னகத்தே கொண்டிருக்கும் இந்நடனம் கோயில் திருவிழாக்களில் தேருக்கு முன்பு ஆடப்படுவதாலும், பொதுமக்களை மகிழ்விப்பதாலும் இஃது



"பொதுமக்கள் கலை"யெனவும் வழங்கப்படுகிறது.

இந்நடனத்திற்கென்று பிரத்தியேகமாக பாடல்கள் ஏதும் உண்டா எனத் தெரியவில்லை. இணையத்தில் எந்தத் தகவலும் கிடைக்கப்பெறாத நிலையில், சேலம் கலைக் கல்லூரி மாணவி செல்வி அனிதா ராஜேந்திரன் அவர்கள் ஒலி வடிவில் அனுப்பித் தந்த ஒரு பாடலின் சில வரிகள் பின் வருமாறு:

"வெள்ளக் குதிரையிலே ஐயனாரே
வேகமாய் வந்தருளும் ஐயனாரே
எல்லையில் கோயில் கொண்ட ஐயனாரே
எல்லையுண்டோ உந்தனக்கு ஐயனாரே.."

இப்படிக் காலத்தைத் தின்று காற்றில் ஆடிக்கொண்டிருக்கும் இந்த பொய்க்கால் குதிரை நடனம் 'கூட கேப்பாங்' எனும் பெயரில் மலேசியா, மலாயாவாக அறியப்படுவதற்கு முன்பிருந்தே புழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது என்பது செய்தி.

கூட கேப்பாங்:

ஜோகூர் மாநில மக்களின் மனங்கவர் நடனமாக இருக்கும் "கூட கேப்பாங்" (kudakepang) ஜாவாவிலிருந்து இங்கே 15ஆம் நூற்றாண்டில் புலம் பெயர்ந்த நடனமாக அறியப்படுகிறது. காலத்தை விழுங்கிய கலை என்கிறார்கள் இந்த கூட கேப்பாங் பற்றி அறிந்தவர்கள்! இந்த நடனம் முழுமையாக இந்தோனிசியாவின் ஜாவா வழி தோன்றல் எனவும், இசுலாமிய தாக்கம் நிறைந்தது எனவும் வரலாறு சொல்கிறது. நடனமணிகளின் ஆடைகளில் ஜாவாவின் பாரம்பரியமும், கதை நகர்வில் இசுலாமிய தாக்கமும் வெளிப்படுவதை ஆய்வாளர்கள் அடிக்கோடிட்டுக் காட்டுகிறார்கள்.

கூட கேப்பாங் - அறிமுகப் படலம்:

வாலி சோங்கோ என்பவரால் பதினைந்தாம் நூற்றாண்டில் ஜாவாவில் அறிமுகப்படுத்தப்பட்டதாக சொல்லப்படுகிறது இக்கலை. 'வாலி சோங்கோ" இசுலாமிய மதத்தை பரப்பும் முயற்சியில் இருந்தவராதலால், பொதுமக்களை அவ்வளவு எளிதில் நெருங்க முடியவில்லை. அவர்களைக் கவர்வதற்காகவே, நடனமும் குதிரையேற்றமுமாக தன் மேல் கவன ஈர்ப்பு ஏற்படும் வண்ணம் அவர் நடந்து கொள்ள, குதிரை எனும் அவ்வளவு எளிதில் காணக்கிடைக்காத மிருகத்தால் ஈர்க்கப்பட்டு, மக்கள் இவர்பால் தங்கள் கவனத்தைத் திசைத்திருப்பச், சிறிது சிறிதாக தன் முயற்ச்சியில் வெற்றி அடைகிறார். நாளாவட்டத்தில், நிஜ குதிரையின் மறைவிற்குப் பின், மிருகங்களின் தோல், மற்றும் மூக்கில்களால் ஆன குதிரை பொம்மைகளை வடிவமைத்து இக்கலையினைத் தொடர்ந்து நடத்தி வந்துள்ளனர் அக்கால குருமார்கள்.

இந்த கூட கேப்பாங் பற்றிய இன்னொரு மாயா உலகக் கதையும் உண்டு. அதாவது தனது துணையை இழந்த தேவலோக குதிரை ஒன்று, (kudasembrani) துணையைத் தேடி மத்திய ஜாவா பகுதிக்கு வந்ததாகவும், துணையைத் தேடி கண்டடைந்ததும் ஜோடியாக நடனம் புரிந்து மகிழ்ச்சியை வெளிப்படுத்தியதாகவும், அதன் பின்னரே இக்கலை வெளிப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது.

நமது தென்னிந்தியாவில் பல பெயர்களில் அழைக்கப்படுவது போல ஜாவாவிலும் இக்கலை பல பெயர்கள் கொண்டு அழைக்கப்படுகிறது! ஜாரான் கேப்பாங் (jarankepang), Ãì ½ñ¢ð¤é¢ (kuda lumping), ஜாத்திலான் (jathilan), ஈபெக் (ebeg) போன்றவை அவற்றுள் சில. ஜாவா மொழியில் ஜாரான் என்றால் குதிரை என்றும் கேப்பாங் என்றால் முடைதல் (மூங்கிலால் முடைந்த குதிரை பொம்மை) என்று அர்த்தம்.

உருவமைப்பும் ஆடல் கருவும்

ஒரு குதிரை போல மூங்கில் அல்லது மிருகங்களின் தோலால் உருவமைக்கப்பட்டு, வர்ணங்களால் அழகூட்டப்படும் இந்தப் பொம்மைகளுக்குக் கால்கள் கிடையாது. இடுப்பின் பக்கவாட்டில் கட்டிக் கொண்டு, ஒரு கையால் அந்தக் குதிரையைப் பிடித்தபடியே நடனமணிகள் ஆடுவர். ஆரம்ப காலங்களில் நடனத்தை ஆட்டி வைக்கும் குருவானவர், கையில் ஒரு கயிற்றைப் பிடித்துக் கொண்டு, அந்த கயிற்றினை முன்னும் பின்னும் அசைத்து நடனமணிகளுக்கு அசைவுகளைச் சொல்வாராம். அனைத்து நடன அசைவுகளும் அந்த குருவின் கட்டளைபடியே நிறைவேற்றப்படும். நடனத்தின் மூல கரு, இசுலாமிய வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டிருக்கும். உதாரணமாக





நபிகளார் அவர்களும் அவரது உடனுறை பரிவாரங்களும் மேற்கொண்ட போர்களை மையப்படுத்தியே இந்நடனம் வழிநடத்தப்பட்டு வந்திருக்கிறது என்பது வரலாறு.

<u>மாந்திரீக சக்தியும் கூடா கேப்பாங் நடனமும்</u>

ஆதி கால நம்பிக்கையின் படி, இந்த கூட கேப்பாங் நடனத்துக்குப் பயன்படுத்தப்படும் குதிரை பொம்மைகள், ஏதோ ஒரு மந்திர சக்தியால் கட்டுண்டிருக்கின்றன. அதன் தொடர்பில், இந்த நடனம் ஆரம்பிக்கும் முன்பு ஒரு ஆன்மீக சடங்கு செய்யப்படுகிறது. இந்தச் சடங்கு நடைப்பெறவில்லையெனில், நடன கலைஞர்களுக்கும் நடனத்தைக் கண்டு களிக்கும் பார்வையாளர்களுக்கும் தீங்கு விளையும் என்று நம்பப்படுகிறது. அதன் அடிப்படையில், முதலில் "ஆத்மாக்களுக்கு" சாந்தி பூஜை செய்யப்படுகிறது. பின்புதான் 40 அடிக்கு 60 அடி நீள அகலமான நாட்டிய அரங்கு திறக்கப்படுகிறது.

இந்தச் சடங்கை நடத்தி வைக்கும் பாவாங் (Pavang) எனப்படுபவர் மாந்திரீக கலையில் தேர்ச்சி பெற்றவராய் இருப்பார். கூடா கேப்பாங் நடனத்தின் அதிர்வினால் தங்களின் இயல்பு நிலையின் அமைதியை இழந்து விடக்கூடிய ஆத்மாக்கள், எந்த வித தீங்கையும் இழைக்கக் கூடும். ஆகவே அந்த ஆத்மாக்களுக்கு முதலில் படையலிடுவர். படையலில், தேங்காய், அரிசி, பழுத்த வாழைக் கனி, வெள்ளைத் துணி, ஊசி, நூல், சாம்பிராணி, வெள்ளை நிறக் கோழி, நெல், முட்டை, பூக்கள் ஆகியவை வைக்கப்படும். ஆட்ட கலைஞர்கள் குறைந்தது 9லிருந்து அதிகபட்சம் 15 பேர்வரை இருப்பர். இந்நடனத்தை வழங்குபவர்கள் அனைவரும் ஆண் கலைஞர்களே!

இந்த நடனத்தின் உச்சக்கட்டமாக ஆடல் கலைஞர்கள் வினோத உடல் அசைவுகளை வெளிப்படுத்துவது சகஜம். எல்லா கலைஞர்களும் அப்படிச் செய்வதில்லை. ஆனால் ஒரு சிலர் தங்களை மறந்த நிலையில், திடீரென 6அடி உயரத்துக்கு குதித்து மேலெழும்புதல், கயிற்றில் தொங்குதல் போன்ற சராசரி மனிதர்களால் செய்ய முடியாத காரியங்களைச் செய்வர். இவர்கள் உடலில் வேறொரு ஆன்மா புகுந்து இவ்வாறு செய்யத்தூண்டும் என நம்பப்படுகிறது. இவர்களின் அந்தச் செய்கைக்கு ஏற்ப சரணை, கெண்டாங் போன்ற இசைக்கருவிகள் ஓங்கி இசைக்கப்படும். சக கலைஞர்களும் விடாது நடனமாடுவர். இல்லையென்றால், வேறொரு ஆன்மாவால் பீடிக்கப்பட்டவர்களால் சக கலைஞர்கள் தாக்கப்படுதலும் நடக்கும். வெறியாட்டம் தொடர்ந்து கட்டுக்கடங்காமல் போகும் பட்சத்தில், மந்திரவாதிகள் (போமோக்கள்) மந்திர உச்சாடனம் செய்து, அவர்களை ஒரு கட்டுக்குக் கொண்டு வருவர்.

கலா ரசனைக்கு அப்பாற்பட்டு, உடலுக்குள் புகுந்த தீய சக்திகளை விரட்டவும், நாள்பட்ட நோய்களைக் குணபடுத்தவும்கூட இக்கலை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே, நடனத்துக்குப் பயன்படுத்தப்படும் குதிரை பொம்மைகள் பாதுகாப்பாக, தனிப்பட்ட இடங்களில் வைத்திருக்க வேண்டியது அவசியமாகிறது. இல்லாவிட்டால் கோபம் கொள்ளும் "பொம்மை குதிரைகள்" அடுத்தடுத்து வரும் நிகழ்வுகளை நடத்த விடாமல் செய்துவிடும்.

<u>இசைக்கருவிகள்</u>

இந்நடனத்திற்கு பின்னனி இசையாக கெண்டாங் (Gendang) முக்கிய இசைக்கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது. இதனூடே அங்லுங் (angklung,), கோங் (gong), கினோங் (kinong), ஜிடோர் (jidor) ஆகியவை வாசிக்கப்படும் வாத்திய கருவிகளாக இருக்கின்றன. ஆனால் இவையனைத்தும் ஒரே நிகழ்வில் வாசிக்கப்படுவதில்லை. கலையை கற்றுக் கொடுத்த ஆசிரியர் எந்த வகையான இசைக்கருவிகளை பயன்படுத்தினாரோ அவையே மாணவர்களால் தொடர்ந்து பயன்படுத்தப்படும். ஆடை அணிகலன்கள் நடனக் கலைஞர்களின் விருப்பத்தைப் பொருத்தது என்றாலும்கூட அவை சீருடை பாணியில் இருக்க வேண்டியது அவசியம்.

முன்பே பார்த்தது போல, போமோ அல்லது தலைவரால், வேண்டிய பொருட்கள் படைக்கப்பட்டு, அதன் பின் சாம்பிராணி தூபம் காட்டப்பட்டு ஆத்மாக்களைச் சாந்தி படுத்திய பின்பே ஆடுகளம் முறைப்படி திறக்கப்படும். அப்படி திறக்கப்படும் போது சில உச்சரிக்கப்படும்.

இங்கே 'Nini Dayang' மற்றும் 'Kiki Danyang' எனப்படுபவை ஆடுகளத்தின் கண்ணுக்குப் புலப்படாத ஆதி ஆன்மாக்கள் அல்லது ஜின் என்று அறியப்படுகிறது. அந்தப் பகுதி இவற்றின் கட்டுப்பாட்டில் உள்ளவை.



இவற்றைச் சாந்த்திப் படுத்தவே படையல் இடப்படுகிறது. இவற்றின் அனுமதியைப் பெற்ற பின்பே நடனம் அரங்கேற்றப்படுகிறது. பூமியில் இருப்பதாக நம்பப்படும் இவர்களின் அனுமதியோடு வானவீதியில் வாழ்வதாக நம்பப்படும் கண்ணுக்குப் புலப்படாத மெல்லிய ஆத்மாக்களின் அனுமதியையும் வேண்டி, பாவாங் மந்திர உச்சாடணம் செய்வார்.

பாவாங் எனப்படுபவர் மேலுலகத்தில் வாழ்வதாக நம்பப்படும் ஆன்மாக்களை அழைத்து, தங்களின் நிகழ்வில் எந்த விதமான பங்கமும் வராமலிருக்க ஆசி புரியும்படி வேண்டிக்கொள்வார். அத்துடன் நடன கலைஞர்களுக்கும், நடனத்தைக் காண வந்திருக்கும் பொது மக்களுக்கும் எந்த விதமான தீங்கும் நேரா வண்ணம் காத்தருளும்படியும் வேண்டிக் கொள்வார்.

இதன் பின்னரே, கோங் எனப்படும் இசைக்கருவியை மூன்றுமுறை இசைத்து நிகழ்வினை அதிகாரப்பூர்வமாகத் துவங்கி வைப்பர். இப்படி அதிகாரப்பூர்வமாகத் துவக்கி வைக்கப்படும் நிகழ்வின் போது, தன்னை மீறிய சூழலுக்குப் போய்விடும் நடனக்கலைஞரைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர, “பாவாங்” மந்திர உச்சாடனம் செய்வார். ஏனையோர் சம்பந்தப்பட்டவரின் கைகளையும் கால்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொள்வர். இருப்பினும் மொத்த நிகழ்வின் போதும் சிவப்பு வர்ண துணி முற்றாக விலக்கப்படும். கண்ணாடித் துண்டுகள் இல்லாமலும் பார்த்துக் கொள்வர். தன்னை மறந்த நிலையில் உள்ளவர் அவற்றை உட்கொண்டுவிடும் அபாயம் இருப்பதே இதற்குக் காரணம்.

பொதுவில் “கூட கேப்பாங்” என்றே இந்நடனம் வழக்கத்தில் சொல்லப்பட்டாலும், உட்பிரிவுகளாக, தாரியான் சோலோ (tarian solo), தாரியான் செலெண்டாங் (tarianselendang), தாரியான் பூச்சோக் ரெபுங் (tarianpucukrebung), தாரியான் லெங்காங் கிப்ரா (tarianlenggangkiprah), போன்றவை சொல்லப்படுகின்றன. இவை ஆடல் கலையைக் கற்பிக்கும் குருவின் பாடங்களுக்கு ஏற்ப மாறுபடும். (தாரியான் என்றால் நடனம்).

பாவாங் எனப்படும் தலைவரால் அனைத்து முக்கிய நிகழ்வுகளும் நடத்தி வைக்கப்படுவதால் அவருக்கு தட்சணை வழங்குதலும் முக்கிய அங்கமாக கொள்ளப்படுகிறது, சில சாம்பிராணி கட்டிகள், தூபக்கால், கோழி இறைச்சி மற்றும் காய்கறி கலவைகளால் சேர்த்து பிசையப்பட்ட கலவை சோறு, பலகாரங்கள், ஒரு கேட்டில் நீர் மற்றும் ஸிவி2.25 தட்சணை ஆகியவை முக்கியமாக வழங்கப்பட வேண்டிய பொருட்கள். ஒவ்வொரு முறையும் நடன அரங்கேற்றத்துக்கு ஏற்பாடு செய்யும் குடும்பத்தினர்., இந்த ஆட்ட குழுவிற்கு 200 ரிங்கிட் சன்மானம் வழங்குவர்.

தற்சமயம், கூடா கேப்பாங் கலை அவ்வளவு சிறப்பான இடத்தில் இல்லை என்பதைச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. இதற்கு ஒலி/ஒளி ஊடகங்களின் தாக்கமும், சமூக வலைத்தலங்களுக்கு வழங்கப்படும் முக்கியத்துவமும் மூல காரணங்கள் எனினும், ஆதி காலத்தின் வழிமுறையானது இசுலாமிய நம்பிக்கைக்குப் புறம்பானது எனும் பட்சத்தில், அந்நடனம் இப்பொழுது அதே பாரம்பரியத்துடன் வழங்கப்படுவதும் இல்லை. சாதாரணமாகவே மேடையில் தோன்றி, அங்க அசைவுகளுடன் அரங்கேற்றி வருகிறார்கள். இதுவும் இக்கலையின் சரிவுக்கு ஒரு காரணமாக இருக்கக்கூடும் என நம்பப்படுகிறது. மேலும் இக்கலையை முறைப்படுத்தவும் நெறிப்படுத்தவும் அனுபவம் வாய்ந்த ஆசிரியர்களும் தற்போது இல்லை என்பதும் ஒரு காரணியே.

# தேங்காய் சுடும் பண்டிகை

## - க.கோமகள் அனுபமா





ஆடி மாதத்தின் முதல் நாளையொட்டி சேலத்தில் தேங்காய் சுடும் பண்டிகை !!!

சேலம், ஈரோடு, தர்மபுரி, நாமக்கல் ஆகிய மாவட்டங்களில் ஆண்டுதோறும், ஆடி மாதம் முதல் நாளையொட்டி, தேங்காய் சுடும் பண்டிகை கொண்டாடப்படுவது வழக்கம்.
இந்தப் பண்டிகை கொண்டாடப்படும் நிகழ்ச்சி மகாபாரதக் கதையுடன் தொடர்புடையதாகக் கூறப்படுகிறது.அதருமத்துக்கும், தருமத்துக்கும் இடையிலான மகாபாரத யுத்தம் ஆடி மாதம் 1-ந் தேதி தொடங்கி 18 நாட்கள் நடைபெற்று “ஆடி-18” அன்று முடிவுக்கு வரும். இந்தப் போரில் தருமம் வெல்ல வேண்டும் என்று யுத்தம் தொடங்கும் நாளான ஆடி 1-ந் தேதி மக்கள் அனைவரும் வேண்டி அதற்காக விநாயகர் மற்றும் அவரவர் இஷ்ட தெய்வங்களுக்குப் பூஜை செய்கிறார்கள்.

இந்தப் பூஜையின்போது படைக்கும் வகையில் இதுபோல் தேங்காய் சுட்டு அதனைப் பிரசாதமாகப் படைத்து வழிபட்டதாக ஒரு ஐதீகம் உள்ளது. ஆண்டாண்டு காலமாக,அந்த ஐதீகத்தைக் கடைபிடிக்கும் வகையில் இந்த மாவட்டங்களில் ஆடி மாதப் பிறப்பன்று தேங்காய் சுடும் பண்டிகை கொண்டாடப்பட்டு வருகிறது. அதன்படி ஆடி ஒன்று தேங்காய் சுடும் பண்டிகை சிறுவர், சிறுமிகளின் உற்சாகத்துடன் வீடுகள் தோறும் கொண்டாடப்படுகிறது.

புதிய தேங்காயை எடுத்து, அதன் மேல் உள்ள நார்களை அகற்றிவிட்டு ஓடு மெலிதாகும் அளவுக்கு அதைத் தரையில் தேய்ப்பார்கள். ஒரு குறிப்பிட்ட அளவுக்குத் தேய்க்கப்பட்டதும், அதன் ஒரு கண்ணில் துளையிட்டு உள்ளே இருக்கும் தேங்காய்த் தண்ணீர் வெளியேற்றப்படும். பின்னர் துளையிட்ட கண்ணின் வழியாகத் தேங்காய்க்குள் பச்சரிசி, பாசிபருப்பு, வெல்லம், அவல், எள், ஏலக்காய், நெய் ஆகியவை கலந்த கலவையை இட்டு, நீண்ட ஒரு முனை கூராகச் சீவப்பட்ட அழிஞ்சிமர குச்சியில் அந்தத் தேங்காயைச் சொருகுவார்கள். பின்னர் அந்தக் குச்சியைச் சுற்றி மஞ்சளைப் பூசித் துளையை மூடுவர். அதைத் தொடர்ந்து வீட்டு வாசலில் ஒரு இடத்தில் நெருப்பு மூட்டி அல்லது புதிய மண் அடுப்பில் நெருப்பு மூட்டி, அந்த நெருப்பில் குச்சியில் சொருகப்பட்ட தேங்காயைக் காட்டிச் சுடுவர்.

ஒரு குறிப்பிட்ட பக்குவத்தில் தேங்காய் சுடப்பட்டபின் அதை அருகில் உள்ள பிள்ளையார் கோவில்களுக்கு எடுத்துச்சென்று வழிபடுவதும், பின்னர் தேங்காயை வீட்டிற்கு எடுத்துவந்து, அதை உடைத்து உள்ளே இருந்த கலவை உணவை உற்றார், உறவினர்களுடன் உண்டு மகிழ்வது வழக்கம். சிலர் வீட்டில் உள்ள சாமி படங்களுக்கு முன்பு படைத்து, பூஜைகள் செய்துவிட்டுச் சாப்பிடுவார்கள்.

இப்படி நெருப்பில் பக்குவப்பட்ட தேங்காயும் அதனுள்ளே இருக்கும் பூரணமும் மிகவும் சுவையாக இருக்கும். சுவை பார்த்தவர்கள் இதனை உணர்வார்கள்.

முக்கியமான குறிப்பு:

இந்த ஆடி மாத முதல் நாள் தேங்காய் சுடும் பண்டிகையின் போது வீட்டில் கருவுற்ற பெண்டிர் யாரேனும் இருந்தால் ,தேங்காய் சுடும் நிகழ்வை அந்த வீட்டில் உள்ளோர் செய்ய மாட்டார்கள்.



# இருளுக்குள் பாயும் கீழடி வெளிச்சம்

## - சிராப்பள்ளி மாதேவன்



இலக்கியத் தேடல்கள் வரலாற்றை நோக்கியும், வரலாற்றுத் தேடல்கள் இலக்கியங்களை நோக்கியும் திருப்பும் இயல்பு கொண்டவை. அந்த இயல்பை மறுதலித்தே இங்கு நீண்ட காலமாக பல ஆய்வுகள் மேற்கொள்ளப் பட்டிருக்கிறதோ என்று தோன்றுகிறது. இரண்டையும் இணைத்துக் கொண்டவை மிகச்சிலவே. இந்த இரண்டுக்குமான இடைவெளியை அகழ்வாய்விலும் தொல்பொருள் ஆய்விலும் கிடைக்கும் தரவுகளின் துணைகொண்டு சரிசெய்து கொண்டே வரவேண்டும். இதன் மூலமாகத்தான் இரண்டிலும் இருக்கும் குறைகளைக் களையமுடியும்.

நான் தமிழாசிரியராக, வரலாற்று ஆசிரியராக, தொல்பொருள் ஆய்வாளராகப் பணியாற்றுவதற்கான படிப்பெதுவும் படித்தவனில்லை. ஆனாலும் தேடல்கள் இருந்துகொண்டேயிருக்கின்றன. அந்தத் தேடலின் போது கீழடி அகழ்வாய்வு வரலாற்றின் மீதும் இலக்கியங்களின் மீதும் புத்தொளி பாய்ச்சியிருப்பதை உணரமுடிகிறது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் கீழடி சென்றுவந்தவுடன் அதன் பண்டைய பெயர் மற்றும் இருப்பிடம் பற்றித் தேடத் தொடங்கியபோது "1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்" என்ற நூலில் க. அப்பாத்துரையார் "பழமதுரை" என்றும் "திருமுருகாற்றுப்படை" பற்றியும் சொல்லியிருந்த செய்தி நினைவுக்கு வந்தது. அதில் "பண்டை மதுரை" அல்லது "கூடல்" இருந்த இடம் தற்கால மதுரை நகரத்துக்குத் தென்கிழக்கே ஆறுகல் தொலைவில் இருக்கும் பாழடைந்து கிடக்கும் பழமதுரையாகவே இருத்தல் கூடும். இந்தப் பாழ்நகர் வையையின்(வைகையின்) வடகரையில் இருக்கிறது. ஆனால், பழமதுரை வையையின் தென்கரையில் இருந்ததாகவே அறிகிறோம். ஆயினும் நகரின் அழிவுக்குப் பிற்பட்டு ஆறே போக்குமாறித் திசைமாற்றம் உண்டு பண்ணியிருக்கலாமென்று எண்ண இடமுண்டு என்று குறிப்பிடுகிறார். பாண்டியர் பழைய மதுரை பற்றிய ஒரு தகவல் அது. வையையின் தென்கரையில் இருந்திருக்கவேண்டும் என்ற அவரது கருத்தை உறுதி செய்திருக்கிறது கீழடி அகழ்வாய்வு.(படம் 1).

திருமுருகாற்றுப்படை நோக்கிய தேடலில் ம.ராசமாணிக்கனாரின் "பத்துப்பாட்டு

ஆரய்ச்சி” நூல் அகப்பட்டது. அதில் அகநானூறு, திருமுருகாற்றுப்படை இரண்டும் பரங்குன்றின் (திருப்பரங்குன்றம்) அமைவிடம் பற்றிக் கூறும் செய்திகள் இருந்தன. இந்த ஆய்வுநூல் 1964 ம் ஆண்டே எழுதிமுடிக்கப்பட்டுவிட்டது என்பதை நினைவில் கொள்க. அவர் எடுத்தாண்ட அகப்பாடல் வரிகள் கீழே

கொடிநுடங்கு மறுகின் கூடற் குடாஅது,
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய,
ஒடியா விழவின், நெடியோன் குன்றத்து,

- எருக்காட்டூர் தாயங்கண்ணனார் (அகம்-149)

“ கூடற் குடாஅது................. நெடியோன் குன்றத்து”, அதாவது கூடல் நகரின் மேற்கே தொலைவில் இருக்கும் பரங்குன்றம் என்று பொருள். அற்றை நாளில் பரங்குன்று கூடல் நகருக்கு மேற்கே தொலைவில் இருந்திருக்கிறது.

அந்நூலில் எடுத்தாளப்பட்ட திருமுருகாற்றுப்படை வரிகள் கீழே

பொருநர்த் தேய்த்த போரறு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகின் கூடற் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதலும் உரியன் ; அதாஅன்று,

திருமுருகாற்றுப்படை(70-77)

- மதுரை கணக்காயனார் மகன் நக்கீரர்

“மாடமலி மறுகின் கூடற் குடவயின்” மாடங்கள் நிறைந்த கூடல் நகரின் மேற்கே என்று பரங்குன்றின் அமைவிடம் சொல்லப்பட்டுள்ளது. குணாஅது, குடாஅது என்பனவற்றிற்கு விளக்கம் தந்த பேராசிரியர் க.நெடுஞ்செழியன் ஐயாவுக்கு நன்றி.

தற்காலத்திற்கு வருவோம். அகழப்பட்டிருக்கிற கீழடியில் நின்று பார்த்தோமானால் பரங்குன்று (திருப்பரங்குன்றம்) குடாஅது (நேர் மேற்கே) தான் தெரிகிறது.

இங்கே பெருநகரொன்றின் நாகரிக அடையாளங்கள் கண்டெடுக்கப் பட்டுள்ளன. வீடுகள், தொழில் நடைபெற்ற இடங்கள், நன்றாகப் பாவப்பட்ட செங்கற்தளம், கிணறு, கருவிகள், பெரிய மற்றும் சிறிய பானைகள் போன்றவை ஏராளமாகக் கிடைத்துள்ளன. சீரான கழிவுநீர் வடிகால் வசதிகள் கண்டறியப் பட்டுள்ளன. எனவே இந்த ஆய்வு மதுரை கணக்காயனார் மகன் நக்கீரர் மற்றும் எருக்காட்டூர் தாயங்கண்ணனார் ஆகிய இருவரின் பாடல் குறிப்புகளை வலுவாக உறுதி செய்கிறது. எனவே அவர்களின் பாடல்களில் சொல்லப்படுகிற பிற செய்திகளின் உண்மைத்தன்மையும் வலுப்பெறுகிறது.

திருமுருகாற்றுப்படை ஆற்றுப்படை இலக்கிய வகையைச் சார்ந்தது. தொல்காப்பிய விதியின் படி இவை கூத்தர், பாணர், பொருநர், விறலியர் பொருளுதவிபுரியும் வள்ளல்பால் ஆற்றுப்படுத்துவதையே கூறும். ஆனால் திருமுருகாற்றுப்படையோ முருகன்பால் புலவரை ஆற்றுப்படுத்துவதாய்ப் பாடப்பட்டுள்ளது. இது தொல்காப்பியம் சொல்லாத செய்தி.

“ தாவின் நல் இசை கருதிய கிடந்தோர்க்கு” எனத் தொடங்கும் தொல்காப்பிய புறத்திணை நூற்பா, ஆற்றுப்படை இலக்கியங்களின் விதிகளைக் கூறுகிறது. ஆற்றுப்படை இலக்கியங்கள் எதிரிருப்பவர் செல்லவேண்டிய இடம், அதைச் சென்றுசேர்வதற்கான வழி, எதிர்படும் நிலங்கள், மனிதர்கள், பழக்கவழக்கங்கள் போன்றவற்றைப் பற்றி விரிவாகப் பேசும். அந்தவகையில் நக்கீரரும் ஏராளமான செய்திகளைச் சொல்லிச் செல்கிறார். முக்கியமானதொன்றைப் பார்ப்போம்.

முருகன் உறையும் இடங்கள்

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்,

“ஆர்வலர் ஏத்த மேவரும் நிலையினும்,
வேலன் தைஇய வெறியயர் களனும்,
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்,
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்,
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்,
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்
தினையை மலர்களுடன் விரவி,
ஆட்டுக்கிடாயறுத்து கோழிக்கொடி நாட்டி
ஊரார் நடத்தும் சீர்மிகு விழாக்களிலும்
முருகன் உறைகிறான்” என்று தொடங்குகிறது பழமுதிற்சோலை பற்றிய ஆற்றுப்படை.

முருகன் வழிபாடு

மாண்டலைக் கொடியடு மண்ணி அமைவர
நெய்யடு ஐயவி அப்பி ஐதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்

செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇச்
சிறுபசு மஞ்சளடு நறுவிரை தெளித்துப்



பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசை அருவியடு இன்னியம் கறங்க . . .

உருவப் பல்பூதத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியல்நகர்
ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தனர் வழிபட
ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே
ஆண்டாண்டு ஆயினும் ஆக; காண்தக . . .

குறமகள் ஒருத்தி முருகனை வழிபடும் இடத்தைத் தூய்மையாக்கி கோழிக்கொடியை நாட்டினாள். அதன்மீது நெய்யோடு வெண்சிறுகடுகை அப்பினாள். அழகிய மலர்களை அக்கொடிமீது தூவினாள் .இரண்டு ஆடைகளை உள்ளொன்றும் புறமொன்றுமாக உடுத்தாள். சிவந்த நூலைக் கையில் காப்பாகக் கட்டினாள். வெள்ளிய பொரியைத் தூவினாள். ஆட்டுக்கிடாயின் குருதியொடு பிசைந்த தூய வெள்ளரிசியை சிறுபலியாக இட்டாள்.மஞ்சள், சந்தனம் தெளித்தாள். மாலைகள் இட்டாள். மலைநகர் வாழ்கவென்றாள். தூபம் காட்டிக் குறிஞ்சிப்பண் பாடினாள். பல்லியங்கள் ஒலித்தன. பல வண்ண மலர்களைத் தூவி குருதியளைந்த சிவந்த தினையைப் பரப்பினாள். வெறியாடுகளம் ஆராவாரிக்க அங்கிருந்தவர் பாடினர். கொம்பு ஊதி மணி ஒலித்து முருகனின் ஊர்தியான “பிணிமுகம்” என்னும் யானையை வழிபட்டனர். (சென்னை வடபழனி ஆண்டவர் கோயிலில் முருகனுக்கு முன் மயிலுக்குப் பதில் யானை இருக்கக் காணலாம்) .

இவ்வாறு பெருஞ்செய்திகளைச் சுமந்து நிற்கிறது திருமுருகாற்றுப் படை. முருக வணக்கம் சார்ந்த, பேசப்பட்ட நிலம், மக்கள் பற்றியச் செய்திகள் நிறைய மறைக்கப்பட்ட உண்மைகளை நமக்கு இயம்புகின்றன அதன் வரிகள். கீழடி திருமுருகாற்றுப்படையை உறுதி செய்திருக்கிறது.

இதே உறுதிப்படுத்தலோடு எருக்காட்டூர் தாயங்கண்ணனாரிடம் போவோம். மூன்று வரிகள் மட்டும் இராசமாணிக்கனார் நூலில் பார்த்துவிட்டு முழுப்பாடலுக்குப் போனேன். கீழடி இந்தப் பாடலுக்குமான உறுதியொன்றையும் தந்திருக்கிறதே. செய்தி கண்டு பெருவியப்பெய்தினேன். இதோ பாடல்

“சிறுபுன் சிதலை சேண்முயன்று எடுத்த;
நெடுஞ்செம் புற்றத்து ஒடுங்கிரை முனையின்,
புல்லரை இருப்பைத் தொள்ளை வான்பூப்,
பெருங்கை எண்கின் இருங்கிளை கவரும்
அத்த நீள்இடைப் போகி, நன்றும்
அரிதுசெய் விழுப்பொருள் எளிதினிற் பெறினும்
வாரேன்- வாழி, என் நெஞ்சே!- சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை கலங்க,
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளம்கெழு முசிறி ஆர்ப்பெழ வளஇ,
அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய
நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்
கொடிநுடங்கு மறுகின் கூடற் குடாஅது,
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய,
ஒடியா விழவின், நெடியோன் குன்றத்து,
வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்து
எதிர்மலர்ப் பிணையல் அன்ன இவள்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.

-

எருக்காட்டூர் தாயங்கண்ணனார் (அகம்-149)

“வளம்கெழு முசிறி ஆர்ப்பெழ வளை, முதல் ஒடியா விழவின், நெடியோன் குன்றத்து,” வரையிலான வரிகள் வரலாற்றின் முகடுகளை நோக்கி என்னை நகர்த்தின. “வளம் நிறைந்த சேரலரின் பேரியாற்றங்கரை முசிறியை ஆர்த்தெழுந்து வளைத்து சமர் கடந்து படிமம் (சிலை) கவர்ந்து வந்த அடுபோர்ச் செழியனின் கொடி அசைவது போல கூடலின் மேற்கே மயிற்கொடி அசையும் விழாக்கள் முடிவுறா நெடியோன் குன்றம்” என்று பரங்குன்றைக் குறிக்கிறார் தாயங்கண்ணனார். பெரும் போர் இல்லை அது. சட்டென்று நுழைந்து அடுத்தவர் எதிர்பாராத நிலையில் சேரலரின் முசிறி வழியாக பேரியாற்றில் நுழைந்து சிலை கவர்ந்த “அடுபோர்ச் செழியன்” யார்? கவர்ந்து வந்த சிலை யாருடையது? அன்றிருந்த சேரல மன்னன் யார்? அடுக்கடுக்காய்க் கேள்விகள் எழுந்தன.

“தென்புலங் காவல் என்முதல் பிழைத்தது “ என்று வீழ்ந்த பாண்டிய மன்னன் கண்முன்

வந்துபோனான். பெருந்தொலைவு நடந்துபோன கண்ணகி வந்தாள். சிலையெடுத்த சேர மன்னன் வந்தான். கண்ணகிக்குச் சிலையெடுத்தது உலகிற்கு நற்செயலே. ஆனால், பாண்டியர்களைப் பொறுத்தமட்டில், அவர்களின் முன்னோன் செய்த பெரும்பிழை ஒன்றின் குறியீட்டுப் படிமம் அது. அது இருக்குந்தோறும் அவர்களின் பெருமைக்குக் களங்கம் என அடுத்த தலைமுறை எண்ணியிருக்கலாம். அதனால் பின்னால் வந்த அடுபோர்ச் செழியன் முன்னவர் பிழை படிமமாய் நின்றதைக் களைய நினைத்தானோ? அந்தச் சிலை முசிறியில் எங்கே இருந்திருக்கும்?

இந்தக் கேள்விக்குத் தொடர்புடைய செய்தி ஒன்று, பலா மரத்தால் செய்யப்பட்ட சேரலரின் கொடுங்கல்லூர் பகவதி கோயிலின் உள்ளே எப்பொழுதுமே மூடியே வைக்கப்பட்டிருக்கிற அறை. கொடுங்கல்லூர் கோயிலில் மூடியே கிடக்கும் அந்த அறை பற்றி பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதனுள் சிறீ சக்கரம் இருக்கிறது, திறந்தால் அவள் கொடுமை தாங்க முடியாது என்ற கதைகளைக் கேட்டிருக்கிறேன். கீழடி அந்தக் கதைகளை உடைத்து ஒரு ஐயத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

கொடுங்கல்லூர் கோயில்



அடுபோர்ச்செழியனிடம் கடற்படை இருந்திருக்கும். அதை அனுப்பி திடீரென மேலைக்கடலிலிருந்து கழிமுகம் வழியாக பேரியாற்றில் நுழைந்து, முசிறி வழியாக அந்தச் சிலையை எடுத்து வந்திருக்கலாம். “படிமம் வவ்விய” என்ற பாடல் வரிகள் இதை உறுதிப் படுத்துகின்றன.

மதுரையின் அமைவிடம், மற்றும் பேரியாற்றின் உள்ளே கடலிலிருந்து சிறு தொலைவில் முசிறி இருந்தமை போன்ற செய்திகள் உறுதிப்படுத்தப் படும்போது சிலை கவர்ந்ததையும் ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. பாண்டியர்களுக்கு இருந்த அதே பெருமை சேரருக்கும் இருந்திருக்கும். அதன் காரணமாகவே தம் முன்னோர் செய்துவைத்த படிமம் கவரப்பட்டதைக் களங்கம் என்று எண்ணியிருக்கலாம். அதனாலேயே அந்தப் படிமம் மீட்டுக் கொண்டுவரப்படும் வரை அந்த அறையைப் பூட்டி வைத்திருந்திருக்கலாம். ஆனால் காலங்கள் ஓடிவிட்டன. அரசுகள் மாறிப்போயின. அந்த அறை இன்னும் பூட்டியே கிடக்கிறது. அதற்கு வேறு கதைகள் உருவாகி உலாவருகின்றன.

கீழடியின் பழம்பெயர் தேடலில் தொடங்கிய என் பயணம் சேரல நாட்டின் முசிறியில் நின்றுகொண்டிருக்கிறது. காரணம் கீழடி மேற்குறிப்பிட்ட இரண்டு பாடல்களின் உண்மைத் தன்மையை உறுதி செய்திருக்கிறது. பேரறிஞர்கள் பலர் இலக்கியத்தின் வழி வரலாற்றை அறிய முற்பட்டு ஆய்வுநூற்கள் பல செய்திருக்கிறார்கள். அவற்றை உறுதிசெய்ய நாம் அகழ்வாய்வுகளை, தொல்லியல் சான்றுகளைப் பயன்படுத்த வேண்டும். அந்த ஆய்வு நூல்கள் எழுதப்பட்டக் காலத்தில் அவர்களுக்கு இத்தனை அகழ்வாய்வு மற்றும் தொல்லியல் சான்றுகள் கிடைத்திருக்கவில்லை. அதைச் செய்யவேண்டியது நம்முடைய கடமை என நான் கருதுகிறேன். வரலாற்றுத் தேடல் என்பது குமரியில் மாலைத் தொடர்வண்டியிலேறி மறுநாள் காலை சென்னையில் இறங்குவது போலன்று. இன்னும் நெடுந்தொலைவு பயணிக்க வேண்டியிருக்கிறது.

இந்த ஆய்வு ஒரு தொடக்கநிலை ஆய்வே. தமிழ்ப் பேராசிரியர்களே, வரலாற்றுப் பேராசிரியர்களே இதுவரை வெளிவந்திருக்கிற அகழ்வுகளின் வழி இலக்கியத்தை உறுதி செய்யுங்கள். அதன் வழி எம் வரலாற்றை மீட்டுத்தாருங்கள். அறிவியலும் பண்பாடும் புதைந்து கிடக்கிற அந்த வரலாற்றுப் பேழைகளைத் திறந்து எமக்குப் பரிமாறுங்கள்.



தாமிரபரணி ஆற்றுப் பாலம்
ஆட்சியர் அலுவலகம் தாண்டி
பசுமை நிற வயல் வெளிகளைப்
பிரித்தாற்போலச்
செல்கிறது எங்கள் ஊர்
செல்லும் தார்ச்சாலை !
அனைத்து வயல்வெளிகளுக்கும்
நீர்ப்பாய்ச்ச ஒரு வாய்க்காலும்
செல்கிறது
எங்கள் ஊரின் வழியாக..!

வருடத்தில்
குறைந்தது எட்டு மாதங்களாவது
தண்ணீர் ஓடிக் கொண்டே
இருக்கும்
நான் சிறுவனாக இருக்கும்போது..!

ஒவ்வொரு தெருவைத் தாண்டிச்
செல்லும் போது பிறக்கும்
புதிய பெயர்களால்
அவ்வாய்க்காலின்
பெயரே மறந்தாயிற்று..!!

மாட்டு வாய்க்கால்
அணைக்கட்டு
பஜனை மட வாய்க்கால்
கீழத்தெரு வாய்க்கால்
இப்படியாக பல பெயர்கள்..!!

எங்கள் விருப்பமோ
அணைக்கட்டு வாய்க்காலில்
குளிக்கத்தான்..!!
இருந்தாலும்
எல்லா அம்மாக்களுக்கும்
உள்ளூற பயம்
பையன் அணைக்கட்டில் குளிக்கப்
போகிறான் என்றால்..!!

காரணம் அதன் நேர் எதிரே
சற்று தொலைவில் வயக்காட்டில்
அமைந்த சுடலைமாடன் சாமி
கோவில்..!!
வயக்காட்டுச் சுடலை
என்று பெயர் அதற்கு!
போகும் வழி முச்சந்தி
அதுவும் வெள்ளிக் கிழமை
என்றால்
உடைத்த முட்டைகளும் எலுமிச்சை
பழமும் அந்த முச்சந்தியில்.!!
இதுவே காரணமாகிவிட்டது
தாய்மார்களின் பயத்திற்கு.. !!

பள்ளி நாள்களில் மதிய
சத்துணவு இடைவெளியில்
வீட்டிற்கும் வாத்தியாருக்கும்
தெரியாது நண்பர்களுடன்
குளித்தது!
முதன்முதலாக நீச்சல் கற்றது!
நீச்சல் கற்கும் போது தண்ணீரில்
தெவிங்கியது!

பல அண்ணன்கள் என்னைக்
காப்பாற்றியது!
முதன்முதலாக சூரிய வணக்கம்
செய்தது!
முதன்முதலாக என் ஆடையைத்
துவைத்தது!

# எங்கள் ஊர் வாய்க்கால்..!!

மகேஷ் சேந்தலிங்கம்..



வாய்க்கால் பாலம்முதல்
அணைக்கட்டுவரை நீச்சல்
அடித்தது!
எறிபந்து விளையாடியது!
மீன் பிடித்தது!
மீனை வைத்துப் பாம்பு பிடித்தது!
பாம்பிற்குப் பதில்
தவளை சிக்கியது!
கரையில் இருந்த
சாரைப் பாம்பை மிதித்தது..!!

குளிக்கும் போது
எங்கள் வயதுள்ள பிள்ளைகள்
குளிக்க வந்தால் அவர்களைக்
கவர,
பாலத்தில் இருந்து 'டைவ்' அடிப்பது!
முங்கு நீச்சல் போடுவது!
தண்ணீருக்குள் மூச்சு பிடித்து அதிக
நிமிடம் இருப்பது..!!

இப்படியாக இருந்த வாய்க்காலில்
இப்போது தண்ணீர் வரத்து
எப்போதாவதுதான்..!!
பாதாளச் சாக்கடைத் திட்டம்
வந்ததுமுதல்
அனைத்து கழிவுகளும் சங்கமிக்கும்
இடமும் எங்கள் வாய்க்கால்தான்.!
அமலைச் செடிகளும்
குடும்பம் குடும்பமாய்
ஆக்கிரமித்துக் கொண்டன!
வாய்க்காலில் தண்ணீர்
இல்லையென்றால்
வயல்கள் மட்டும்
எப்படிப் பச்சை பசேலாக..?
வாய்க்காலைப் போல்
அதுவும் வறண்டுவிட்டது!
நெல் முளைத்த வயலில்
மதுபானக் கடைகள் கூட
முளைத்துவிட்டன !!

வறண்டு தண்ணீர்
இல்லையென்றாலும்
சிறு வயது நினைவுகளால்
என்னை மூழ்கடித்து
மூச்சடைக்க வைக்கிறது
கடக்கும் ஒவ்வொரு முறையும்
நாங்கள் விளையாடி
மகிழ்ந்த எங்கள் ஊர் வாய்க்கால்..!!!

# கல்லூரி மாணவர்களுடன் மரபு உலா

## - சிராப்பள்ளி மாதேவன்



'கிறுக்கலாம் வாங்க' நிகழ்வின் மூலம் தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கத்தின் நோக்கம் அனைத்து தரப்பினரிடமும் சென்றடைந்தது என்பதில் ஐயம் இல்லை. நிகழ்வு நடந்து சில வாரங்கள் கழித்து அரசு கலைக்கல்லூரி வரலாற்றுத் துறை பேராசிரியை ஜூலியானாவிடமிருந்து அழைப்பு வந்தது. வரலாற்றுத் துறை மாணவர்களின் ஆர்வத்தைத் தூண்டும் விதமாகவும், அவர்களது பாடம் சம்பந்தமாகவும் ஏதேனும் ஒரு நிகழ்ச்சியைக் கல்லூரி மாணவர்கள் பயன்பெறும் வகையில் ஒரு நிகழ்வினை நடத்த முடிவுசெய்தோம். குழுவினருடன் கலந்தாலோசித்த பிறகு மாணவர்களுக்கு இயக்குனர் ரமேஷ் யந்த்ரா அவர்களின் குடியம் குகைகள் பற்றிய ஆவணப்படம் திரையிட முடிவு செய்தோம்.

குடியம் குகைகள் - ஆவணப்படம்:

குடியம் குகைகள் திருவள்ளுவர் மாவட்டம், பூண்டி நீர்தேக்கத்திற்கு அருகில் அமைந்துள்ள வரலாற்றிற்கு முற்பட்ட மனிதர்களின் வாழ்விடமாகத் திகழ்கின்றது. இதற்கு அருகில் நமக்குக் கற்காலத்தைச் சேர்ந்த கருவிகள் கிடைக்கின்றன. மேலும் இது பண்டைய மக்களின் வாழ்விடமாகவும் , கற்காலக் கருவிகள் மற்றும் அதற்கான மூலப்பொருள்கள் கிடைக்குமிடமாகவும் திகழ்வதால் இது கருவிகள் தயாரிக்கும் இடமாகவும் திகழ்ந்திருக்கலாம். மேலும் இந்தக் குகைகள் பல லட்சம் வருடங்களுக்கு முன் காட்டாற்று வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட கற்பாறைகள் மற்றும் இதர கருப்பொருள்களால் உருவானதாக உள்ளது. வயது கணக்கீட்டின் படி இவை பத்து மில்லியன் ஆண்டுகள் பழமையானது என அறியப்படுகிறன. இராபர்ட் புருஷ்புட் அவர்களால் இந்தப் பண்டைய வாழ்விடம் உலகிற்கு வெளிக்கொணரப்பட்டது. அதன் பிறகு சிலமுறை இந்திய அகழ்வாய்வு துறையினரால் இவ்விடம் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளது. பூண்டி நீர்தேக்கத்திற்கு அருகில் இங்குக் கிடைத்த ஆயுதங்கள் அருங்காட்சியகம் அமைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. மிகவும் பழமையான இவ்வாழ்விடத்தைப் பாதுகாக்கும் நோக்கிலும், ஆவணப்படுத்தும் நோக்கிலும் ரமேஷ் யந்த்ரா அவர்கள் ஆவணப்படங்கள் தயாரித்து வெளியுலகிற்குக் காட்சிப்படுத்தி வருகிறார். குடியம் குறித்து அவரது முதல் படமான குடியம் குகைகள் கேன்ஸ் திரைப்பட விழா போன்ற பல திரைப்பட விழாக்களில் திரையிடப்பட்டு வருகிறது.



ஆவணப்படம் - திரையிடல்:

வரலாற்றுத்துறை மாணவர்கள் துறை பேராசிரியரால் அரங்கிற்கு வரவழைக்கப்பட்டனர். தொடக்க உரை திருமதி ஜூலியானா அவர்களால் நிகழ்த்தப்பட்டது. பிறகு தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம் மற்றும் இதன் செயல்பாடுகள், நோக்கம் போன்றவை பெருவாகை கொண்டான் மற்றும் எஸ் ஆனந்தகுமார் ஆகியோரால் மாணவர்கட்கு எடுத்துக் கூறப்பட்டன. அதன் தொடர்ச்சியாக மாணவர்கள் மிகவும் எதிர்பார்த்த குடியம் குகைகள் ஆவணப்படம் திரைப்பட ஒளிவீச்சி (PROJECTOR) மூலமாகத் திரையிடப்பட்டது. மாணவர்கள் ஆர்வமாக ஆவணப்படத்தைப் பார்த்தனர். அவர்களுக்கு எழுந்த சந்தேகங்களுக்குப் படம் முடிந்த பிறகு விளக்கம் அளிக்கப்பட்டது. துறைத் தலைவர் அவர்கள் முடிவுரையாற்றினார். நிகழ்ச்சி நிறைவு பெற்ற பின் நமது குழுவினருடன் கலந்துரையாடிய துறைத்தலைவர் மாணவர்களுக்குக் கள அனுபவம் கிடைக்கும் வகையில் ஒரு கல்விச்சுற்றுலா ஏற்பாடு செய்யுமாறு வலியுறுத்தினார். சுற்றுலாவிற்கான கலந்துரையாடல்கள் , ஏற்பாடுகள் தொடங்கின.

வரலாற்று சுற்றுலா - திட்டமிடல்

சுற்றுலா குறித்த ஏற்பாடுகள் கல்லூரி தரப்பிலும், நமது குழு தரப்பிலும் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டன. சுற்றுலாவிற்கான இடங்களாக உக்கடம் வாலாங்குளம் கரையிலுள்ள புலிக்குத்திக்கல், ஒத்தக்கால்மண்டபம் பகுதியில் அமைந்துள்ள பெருமாள் கோவில் மற்றும் அதன் சுற்றுசுவர், புலிக்குத்திக்கல் , குமிட்டிபதி ஈமக்காடுகள், பாறை ஓவியங்கள், கோளராம்பதி குளத்தில் அமைந்துள்ள ஈமக்காடு, பேரூர் கோவிலில் அமைந்துள்ள கல்வெட்டுகள் போன்றவை பட்டியலிடப்பட்டன. கல்லூரியில் முதல்வரிடம் அனுமதி, போக்குவரத்து , உணவு போன்ற ஏற்பாடுகள் துறை பேராசிரியர் அவர்களால் மேற்கொள்ளப்பட்டன.

பயணம் தொடங்கியது

அரசு கலைக்கல்லூரியிலிருந்து இருபது மாணவர்கள் , வரலாற்றுத் துறை ஆசிரியர் , கல்வெட்டு ஆய்வாளர் சுந்தரம் அவர்களுடன் சிற்றுந்து வாலாங்குளம் நோக்கிப் பயணப்பட்டது. வாலாங்குளத்தில் அமைந்துள்ள, அருகில் வசிக்கும் மக்களால் சம்புகன் என அழைக்கப்படும், ஒரு வீரனின் இருநிலை நடுகல் மாணவர்களுக்குக் காண்பிக்கப்பட்டு விளக்கம் அளிக்கப்பட்டது. சங்ககாலத்தில் முல்லை நிலத்தில் ஒரு ஊராக விளங்கிய கோவன்புத்தூரில் அமைந்துள்ள ஒரு இடமாகும் . முல்லை நில மக்கள் பெரும்பாலும் மேய்ச்சல் நிலத்தில் மேய்ச்சல் தொழிலை மேற்கொண்டவர்கள். மேலும் பல காட்டாறுகள் இந்நிலம் வழியே ஓடின. மழைக்காலங்களில் காவலர்கள் காட்டாற்று வெள்ளம் வரும் போது அதனை மக்களுக்கு ஒலி எழுப்புதல் மூலம் எச்சரிக்கை விடுத்து மக்களைக் காக்கும் அரும்பணியைச் செய்தனர். இது போன்றே ஊர்கள் உருவான பொழுது கால்நடைகள் மற்றும் மக்களைப் புலி, காட்டுபன்றி, யானை போன்றவற்றிடமிருந்து காக்க வீரர்கள் பணியமர்த்தப்பட்டனர். காவலின் போது மிருகங்களால் கொல்லப்பட்டாலோ அல்லது மிருகங்களை எதிர்த்து போராடி விழுபுண் பட்டாலோ அந்த வீரனுக்கு நடுகல் எடுப்பது தமிழ் மாந்தர்களின் வழக்கம். அதன்படி எடுப்பிக்கப்பட்ட இந்த நடுகல் இருநிலைகளை உடையது. முதல் நிலையில் வீரன் புலியை ஈட்டியைக் கொண்டு தாக்குகிறான் . இரண்டாம் நிலையில் அவனும் அவனது துணைவியும் கைலாசத்தை அடைந்து சிவனருள் பெற வேண்டி நிற்பதாக அமைந்துள்ளது. இதில் அந்த வீரனது உடையமைப்பு , அவன் பயன்படுத்திய ஆயுதங்கள் போன்றவை குறித்து விளக்கப்பட்டது. மேலும் அந்த வீரன் புலியுடன் நடைபெற்ற சண்டையில் இறக்கவில்லை என்பதும் விளக்கப்பட்டது. மேலும் வீரனின் அமைப்பைக் கொண்டு இது விஜயநகர நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது எனவும் மக்களுக்கு தெரிவிக்கப்பட்டது. பின் பழமைகளின் இருப்பிடமான ஒத்தகால்மண்டபம் நோக்கிப் பயணப்பட்டோம்.

ஒத்தக்கால் மண்டபம்

இந்த ஊர் விஜயநகர நாயக்க மன்னர்கள் காலத்தில் மிகவும் புகழ்பெற்ற ஊராக விளங்கியது. இங்குச் சிவன் கோவில் மற்றும் பெருமாள் கோவில் அருகருகே அமைந்திருப்பது சிறப்பு. இங்கு அமைந்துள்ள பெருமாள் கோவிலில் திறை வசூல் சம்பந்தப்பட்ட பலகைக் கல்வெட்டுகள் அமைந்துள்ளன. இவற்றில் பாக்கு, மிளகு , வெல்லம் , சந்தனம் போன்றவை கொடைப்பொருட்களாக வழங்கப்பட்டுள்ள





செய்தி இடம் பெற்றுள்ளது. .மேலும் இந்த இடம் பெருங்கற்காலத்தைச் சேர்ந்ததாகும். இதை நமக்கு உணர்த்தும் விதமாக இந்தக் கோவிலைச் சுற்றி அமைந்துள்ள பழமையான சுவர் பானை ஓடுகள், பொருட்கள் என அனைத்தையும் கலந்து அவசர கதியில் போரின்போது ஏற்படுத்தப்பட்ட சுவராக அமைக்கப்பட்டுள்ளது. இந்தக் கோவிலுக்கு அருகில் அமைந்துள்ள அம்மன் கோவிலில் 19 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரு நடுகற்கள் வழிபாட்டில் உள்ளன. இந்தக் கோவிலுக்குப் பின்னால் இருக்கும் ஒருநிலை புலிக்குத்திக்கல் குறித்தும் மாணவர்களுக்கு விளக்கப்பட்டது. பிறகு அங்கிருந்து குமிட்டிபதியை நோக்கிப் புறப்பட்டோம். குமிட்டிபதி சாலையில் இரண்டு மைல் தொலைவு கடந்தவுடன் மாணவர்களுக்குச் சாலை அருகே அமைந்திருந்த கல்வெட்டு ஒன்று கண்ணில் பட்டது. சிற்றுந்தை நிறுத்தி அந்தக் கல்வெட்டை வாசிக்க முயற்சித்தோம் ஆனால் கல்வெட்டு சிதைந்திருந்ததால் வாசிக்க இயலவில்லை. பிறகு அங்கிருந்து புறப்பட்டோம்.

குமிட்டிபதி

இவ்வூர் கேரளா - தமிழ்நாடு எல்லையில் அமைந்துள்ளது. ஒரு காலத்தில் சேரநாட்டின் முக்கியமான யானைச் சந்தையாகக் கருதப்பட்ட இவ்வூருக்கு அருகில் அமைந்துள்ளது. இங்குப் பழங்கால ஈமச்சின்னங்கள் காணபடுகின்றன. முக்கியமாக இங்கு அமைந்துள்ள பதிமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள குகைகளில் 3000 ஆண்டுகளுக்கும் மேல் பழமையான வெண்ணிறப் பாறை ஓவியங்கள் (கீபிமிஜிணி ளிசிபிஸிணி) காணப்படுகின்றன. சூரியன் உச்சியை அடைந்த நேரத்தில் மலை அடிவாரத்தை அடைந்தோம். மாணவர்கள் சிறுசெடிகள் அடர்ந்த குன்றின் அடிவாரத்தை அடைந்ததும் துள்ளிக்குதித்தனர். உணவு மற்றும் இதர பொருட்களுடன் அங்கு ஆலமரத்தடியை அடைந்தோம்.

குகையை நோக்கி நடக்கலானோம். குகையை அடைந்ததும் அங்குள்ள ஓவியத்தை மாணவர்கள் ஆர்வத்துடன் கண்டனர். ஓவியத்தில் உள்ள தேர் அதை வடம்பிடித்து இழுக்கும் வீரர்கள் , அவர்களது உறைவாள் போன்றவை குறித்து மாணவர்களுக்கு விளக்கப்பட்டது. மேலும் அதற்கு அருகில் அமைந்திருந்த சிறிய ஆட்கள் உருவங்கள் குறித்த ஓவியமும் காண்பிக்கப்பட்டது. மேலும் இங்கு வரும் அயலவர்களால் ஓவியம் சிதைக்கப்படுவது குறித்தும், அவர்கள் மேற்கொள்ளும் தீய செயல்கள் குறித்தும், ஓவியத்தைப் பாதுகாத்தலின் முக்கியத்துவம் குறித்த விழிப்புணர்வும் கொடுக்கப்பட்டது. பிறகு மதிய உணவு எடுத்துக்கொண்டோம். மதிய உணவிற்குப் பிறகு கோளராம்பதி குளம் நோக்கிப் பயணப்பட்டோம்.

நாயக்கர் கால வாவி மற்றும் கோளராம்பதி குளம்

பேரூர் செல்லும் வழியில் கோவைப்புதூரில் பிளேக் மாரியம்மன் கோவிலுக்குப் பின்னால் அமைந்துள்ள, நமது வேண்டுகோளுக்கிணங்க கோவை குளங்கள் பாதுகாப்பு அமைப்பினரால்



அழிவிலிருந்து மீட்கப்பட்ட பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த கிணறு குறித்து மாணவர்களுக்கு விளக்கப்பட்டது. இந்தக் கிணற்றில் அதிகமான அளவில் புடைப்புச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இந்தப் புடைப்புச் சிற்பங்கள் நாயகர் காலத்தைச் சேர்ந்ததாக இருக்கலாம். படிக்கட்டுகள் “ட” வடிவில் அமைந்துள்ளன. மேலும் சந்திர சூரிய கிரகணத்தைக் குறிக்கும் புடைப்பு சிற்பங்கள், குறவன் முகம், வளமைச் சின்னங்கள் போன்றவை அமைக்கப்பட்டுள்ளன. இந்த வளமைச் சின்னங்கள் பாலியல் ரீதியான புரிதலை ஏற்படுத்துகின்றன.

பின் கோளராம்பதி குளத்தை அடைந்தோம். இக்குளம் பேரூர் நகரின் வடக்குபுறமாக வேடப்பட்டி செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இங்குக் குளத்தின் உட்பகுதியில் சமீபத்தில் தூர்வாரிய போது வெளிப்பட்ட ஈமக்காட்டையும் அங்கு உடல்கள் எவ்வாறு புதைக்கப்பட்டன என்றும் விளக்கப்பட்டது. பின்னர் மாணவர்கள் இந்தச் சுற்றுலா குறித்த தங்களது கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டனர். இந்தச் சுற்றுலா புத்தகத்தைத் தாண்டிய விடயங்களைத் தெரிந்துகொள்ளவும் , தினசரி நாம் கவனிக்காமல் கடந்துபோகும் மரபுசின்னங்களைப் பற்றிய விழிப்புணர்வை பெறவும் உதவியதாக மகிழ்வுடன் பகிர்ந்துகொண்டனர். தொடர்ந்து கல்வெட்டு ஆய்வாளர் சுந்தரம் , பேராசிரியை ஜூலியானா போன்றோர் அவர்களது அனுபவத்தைப் பகிர்ந்துகொண்டனர்.

மேலும் இக்குளத்தின் இன்னொரு பகுதியில் அமைந்த பத்து அல்லது பதிமூன்றாம் நூற்றாண்டை சேர்ந்த மதகு காணப்படுகிறது. இதில் காணப்படும் ஒட்டகம், ஆண்டனா கத்தி, பாண்டியர்களது இலட்சினை போன்றவை நமக்கு மற்ற மதகுகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன.

மேலும் இதில் காணப்படும் ஆண்டனா கத்தி பத்தாம் நூற்றாண்டில் வெளிநாட்டு வணிக குழுக்களின் பாதுகாப்பு படையின் சின்னமாக இருக்கலாம் என வரலாற்று அறிஞர்களால் கருதப்படுகிறது. பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதியில் வணிகம் செய்த குழுவினரால் இந்த மதகு விவசாயிகளுக்காக அமைத்துக் கொடுத்ததாகத் தெரிகிறது. இதன் மகத்துவம் குறித்து மாணவர்களுக்கு எடுத்துரைத்துவிட்டு நம் குழுவினர் விடைபெற்றோம்.





# சிலை பேசுகிறேன்!

- Heritager. ஆனந்தகுமார்

நான் கடவுள் அல்ல,
சிலை பேசுகிறேன்!

எங்கோ மலையில் மழையிலும் வெயிலிலும் கிடந்திருக்கவேண்டிய என்னை எவனோ ஓர் அரசனோ, ஆண்டியோ தான் செய்த பாவத்திற்குப் பரிகாரமாகவோ அல்லது தன் குலம் காக்கவோ ,நாட்டு மக்கள் நலம் பெறவோ வேண்டி ஆலயம் அமைக்க தீர்மானித்துச் சிற்பியிடம் சென்று தாம்பூலம் வழங்கிச் சிலையாக்கித் தரச் சம்மதம் வாங்கிச் சிலையாகும்வரை எனக்காகக் காத்திருந்தான்.

தாம்பூலம் வாங்கிய சிற்பியோ நோன்பிருந்து எனக்கு முன் எத்தனையோ பாறைகளைச் சோதித்துத் தட்டிப்பார்த்துத் தடவிப் பார்த்துப் பல பாறைகளை நிராகரித்து என்னைத் தேர்ந்தெடுத்து அவன் கற்ற சிற்பசாத்திரத்தை முழுவதும் உளியின் முனையில் வைத்து எனக்கு வலிக்காமல் கண் மூக்கு காது என அனைத்தையும் அமைத்து உயிராக்கிஞ் அத்தோடு விட்டானா? ஆடை என்ன, அணிகலன்கள் என்ன, அனைத்தையும் அணிவித்தான்! இத்தனையும் செய்யும் வரையில் அவனது மூச்சு காற்றின் சத்தம் கூட கேட்கவில்லை. இப்பொழுதுதான் கேட்கிறது ஏனெனில் நான் நிறைவுற்றேன்.

ஆனாலும் இடையிடையே என் காதில் உளியும் சுத்தியும் செய்த டங் டொங் சப்தம் கேட்டுக்கொண்டே இருக்கிறது. சிற்பி எனக்கு முன்னே அமர்ந்து என்னையே பார்த்துக்கொண்டு இருக்கிறான். தாம்பூலம் பெற்றவன் பணி முடிந்தது.

ஆலயம் அமைக்கத் தீர்மானித்தவன் மங்கல வாத்தியங்கள் முழங்க ஊர்கூடிச் சீர்தட்டோடு சிற்பக் காணிக்கையோடு வந்து சிற்பியிடம் கொடுத்து என்னை ஊர்வலமாக எடுத்துச்செல்கிறான், சிற்பிக்கும் எனக்குமான பந்தம் முடிந்ததா? இல்லை! 'முடிந்தது' என்று யார் சொன்னாலும் நான் சொல்லமாட்டேன்! ஊர்வலமாக வரும் எனக்காக காத்திருக்கும் ஆகமம் பயின்றவர்கள் ஒருபுறம் மக்கள் ஒருபுறம். “என்றும் ஆலயம் சென்று காணமுடியாது” என்ற ஏக்கத்தில் மரத்தின் மீதும் புதர்களுக்கு மறைவிலிருந்தும் என்னையே பார்த்துக்கொண்டிருக்கும் மக்கள் ஒருபுறம்.

ஆலயம் வந்துவிட்டேன் ஆகம முறைப்படி என்னைப் பிரதிஷ்டை செய்துவிட்டனர். அன்றுமுதல் எனக்கு அபிசேக ஆராதனைக்குக் குறைவே இல்லை. என்னை யார் யாரோ வந்து பார்த்துக்கொண்டே இருந்தனர் தினமும். இந்த மரத்தின் மீதும், புதர்களுக்குப் பின்னுமிருந்து என்னைப் பார்த்தவர்களுக்கு மட்டும் என்னைப் பிடிக்கவில்லை போலும் என்னை அதற்குப் பின் பார்க்க வரவேயில்லை. இப்படியே ஆண்டுகள் பல சென்றன .

ஓர் நாள் வழக்கத்திற்கு மாறாக என்னைப் பிடிக்கவில்லை என்று நான் நினைத்துக்கொண்டு இருந்த அந்த முகங்களை ஒத்திருந்த முகங்கள் என்னை நோக்கி விரைவாக மிக விரைவாக வருகிறார்கள் கையில் வேல்கம்புடன் வந்தவர்களில் நால்வர் என்னைத் தூக்குகிறார்கள் தூக்கியவர்கள் ஓடுகிறார்கள் அதில் ஒருவன் சொல்கிறான் நம் உயிர் போனாலும் நமது தெய்வ விக்ரகத்தைப் பாதுகாக்கவேண்டும் என்று.

ஓடியவர்கள் மூச்சுக்காற்று என் காதில் விழுகிறது சிற்பியின் மூச்சுக்காற்றைவிட நூறு மடங்கு அதிகமாக என்மீது ஏதோ படுகிறது திரும்பி பார்த்தால் பின்னால் ஓடி வருபவர்கள் மீது எங்கிருந்தோ வந்த அம்பு ஒன்று முதுகில் குத்தி மார்பில் வெளிவந்து விழுகிறார்கள். ஓட்டம் இன்னும் வேகமாக என்னை ஓர் புதர் நடுவில் வைத்து என்மீது எதையோ போட்டு மூடிவிட்டனர். பின் என்ன நடந்தது என்று தெரியவில்லை. நான் காத்திருந்தேன் காத்திருந்தேன் வருடங்கள் 500 அல்லது 1000 எனத் தெரியவில்லை.

பின் ஒருநாள் யாரோ என்னைப் புதரிலிருந்து எடுத்து கழுவி ஏதோ கருவி அதை அவன் கண்களுக்கு அருகில் வைத்து மின்னிவிட்டு சென்றான். பின் யார் யாரோ மறுபடியும் வருகிறார்கள் மின்னுகிறார்கள். என்னைப் பார்த்து ஏதோ பிண்ணம்பட்டுவிட்டது என்கிறார்கள். சென்றுவிடுகிறார்கள். பிண்ணம் என்றால் ஆம் எனது உடலில் ஒரு பகுதி இல்லை அன்று என்னை தூக்கிக்கொண்டு ஓடும்போது என்மீது பட்ட ஆயுதம் என்னைப் பிண்ணப்படுத்திவிட்டது. அதனால் என்ன முன்பிருந்த இடத்தில் தினமும் என்னைப் பலபேர் வந்து பார்ப்பார்கள். ஆனால் இப்பொழுது எப்போதாவது ஓரிருவர் வருகிறார்கள் அவ்வளவே.

நான் என்றும் சிலையே !!!!!!

சிலை பேசும் .

# வேலூரின் காதல் சின்னம்!

## - சரவணன்இராஜா


இராஜாதேசிங்கு, இராணிபாய் நினைவிடம்- ராணிப்பேட்டை.

வேலூர் மாவட்டம் முழுவதும் வரலாற்று சின்னங்கள் பரவிகிடைக்கின்றன, அதில் ஒரு காலத்தில் தலைநகராக இருந்த ஊர் ஆற்காடு. கி.பி.1692ல் மொகலாய பேரரசர் அவுரங்கசீப் தென்னிந்தியாவில் தனது ஆட்சியை விரிவுபடுத்ததன் சிறந்த தளபதிகளை தேர்வுசெய்து, வரிவவல் செய்யும் அதிகாரம்மிக்க படைதலைவர்களாக அனுப்பபட்டவர்களே நவாப்புகள், அவ்வாறு முதலாவதாக வந்த சுல்பிக்கார் அலி என்பவர் விஜயநகர் மற்றும் மராட்டிய அரசுகளை முறியடித்து கர்நாடக முதல் ஆந்திர, மற்றும் தென்தமிழகம் வடஆற்காடு முழுவதும்

ஆட்சியை விரிவுபடுத்தினார், ஆற்காட்டை தலைமையிடமாக கொண்டு செயல்பட்டதால் பின்னர் வந்த நவாப்புகள், ஆற்காடு நவாப்புகள் என்றே அழைக்கப்பட்டனர்.

வேலூர் மாநகரத்தில் இருந்து 25 கி.மி.தென்திசையில் பாலற்றங்கரையில் இருபுறமும் அமைந்த இரண்டுஊர்கள் ஆற்காடு மற்றும் ராணிப்பேட்டை. இந்த இரண்டு ஊர்களுக்கும் செஞ்சிகோட்டைக்கும் ஒரு நெருங்கிய தொடர்புடைய சரித்திரம் வரலாற்று பக்கங்களில் மறைந்துள்ளன.

பிரதானமாக மூன்று மலைகளின் மேல் இருக்கும் கோட்டையை தவிர பல கோயில்கள், சிற்பங்கள், கல்வெட்டுகள், மண்டபங்கள் என கலைச்சுவடுகள் அழியாமல் பல சரித்திர மாறுதல்கள் கண்டது செஞ்சி, சமணர்கள் வாழ்விடமாக ஆறாம் நூற்றாண்டு வரை இருந்திருக்கின்றது.,அதன் பின்னர் பல்லவர், சோழர், இராஷ்டிரகூட மன்னர்கள் ஆட்சிக்கு பின்னர், 1330 வரை கோனார்கள் ஆட்சியிலும், பதினான்காம் நூற்றாண்டில் விஜயநகர மன்னர்கள் செஞ்சியை கைப்பற்றினார்கள்.அதன் பின்னர் 150 ஆண்டுகள் நாயக்கர்கள் ஆண்டனர். பின்னர் பிஜப்பூர் சுல்தான் வசம் வீழ்ந்தது செஞ்சி .பின்னர் சிவாஜி கி□.பி.1677 செஞ்சிகோட்டைகளை கைப்பற்றினார்.

சகோதரர் சாந்தாஜி கி.பி.1683ல். செஞ்சி அரசனார், அதன் பின்பு அவர் தம்பிராஜாராம் செஞ்சியை ஆள தொடங்கினர்.
தென் இந்தியாவிலும் மொகலாய சாம்ராஜியத்துக்கு பெரும் தலைவலியாக உள்ள மாராட்டியர்களை வென்று வர அவுரங்கசீப் ஒரு பெரும்படையை தன்னுடையபிரதானதளபதிகளை அனுப்பிவைத்தார்

தரைப் போரில் மராட்டியர்களை வென்ற மொகலாயபடைகளால் கோட்டையில் பதுங்கிய ராஜாராமை பிடிக்க முடியவில்லை, எந்ததிசையிலும் அணுக முடியாதபலமான கோட்டை பதினோறுமாத முற்றுக்கைக்கு பின் வீழ்ந்தது ,சரியாக கி.பி.7-02-1698 தேதியில் மிகுந்த போரட்டத்தின் பின்னர் கைப்பற்றப்பட்டது.

அந்த போரில் சொருப் சிங் என்ற

ராஜாபுத்திரதளபதியின் வீரம் மற்றும் போர்தந்திரங்கள் பெரியதாக அறியப்பட்டு, அவுரங்கசீப் கி.பி.1700 ,செஞ்சியை ஆளும் பொறுப்பை அளித்து, அவர் அப்போதைய ஆற்காடு நவாப்பாக இருந்த சதத்துல்லாகானின் கீழ் வரிவசூல் செய்து ஆட்சி புரியும்படி நியமிக்கப்பட்டார். (1711-1714 ஆண்டுகளில் இங்கிலாந்து கம்பெனி அனுப்பிய கடிதங்களில் சொருப்சிங், ஒரு ராஜபுத்திர இளவரசர்என்றும், முகலாயர்களின் குடும்பதிற்கு உறவினரென்றும் தெரிவிக்கின்றன), இவரது மூத்தமகன் தேஜஸ் சிங் எனப்படும், இராஜாதேசிங்கு செஞ்சிக்கு புகழ் வர காரணமாக இருந்தவர் .இவரை பற்றிய எண்ணற்ற நாட்டுபுறபாடல்களும் கதைகளும் உண்டு. இளம்வயதிலேயே மிகுந்த வீரமும் எளிமையாகவும் இருந்த தேசிங்கு மக்களால் மதிக்கபட்டார்.

அடிக்கடி நிகழும் நவாப்களின் மாறுதல்களையும், மாகாணம் முழுவதும் நிலவும் நிர்வாக சீர்கேட்டையும் தனக்கு அனுகூலமாக எடுத்து கொண்ட சொருப்சிங் திறை செலுத்துவதை தவிர்த்து வந்தார், நவாப் பல முறை கேட்டும் தராமல் அலட்சியபடுத்தி வந்தார் இந்நிலையில் 1714,சொருப்சிங். மறைந்தார். அவரது மூத்த மகன் தேசிங்கு ஜனவரி 1714, டெல்லி அரசை அலட்சியம் செய்துதானே அரசரானார் .அப்போது அவர் வயது 18 தான்.,

தேசிங்கு கப்பம் கட்ட மறுத்ததாலும் ,அடிமைதனத்தை எதிர்த்தாலும் டெல்லி பேரரசு, ஆற்காடு நவாப் சதத்துல்லா கானை செஞ்சி மீது போர் தொடுக்க ஏவியது. ஆற்காட்டுக்கும் செஞ்சிக்கும் போர்மூண்டது. தன்னுடைய வீரத்தால் ஆற்காடு படைகளை திணறடித்தது செஞ்சி படையணி. பல சிற்றரசர்கள் நவாபுக்கு உதவியதால், அப்பெரும்படையிடம் தோற்றது செஞ்சி. கி.பி.1714 அக்டோபரில் செஞ்சியில் இருந்து வேலூர் செல்லும் சாலையில் கடலி என்னும் இடத்தில் தேசிங்கு போரில் இறந்தார்.ராஜபுத்திர மரபுபடி அவர் மனைவி இராணிபாய் தன் கணவர் உடல் தகனம் நடந்த இடத்திலேயே உடன்கட்டை ஏறி தீக்கிரையனாள்.

மக்களால் பெரிதும் நேசிக்கபட்ட தேசிங்கும், ராணி உடன்கட்டை ஏறிய காட்சியும் போர்குணம் கொண்ட சதத்துல்லாகானை அதிர்ச்சி அடையசெய்தது. மக்கள் அவர்மேல் கொண்ட அபிமானம் அச்சம் கொள்ளவைத்தது .செஞ்சி ஆட்சியை சத்தியர்கான் என்பரிடம் அளித்துவிட்டு ஆற்காடு திரும்பினர் நவாப்.

அவர்கள் நினைவாக ஆற்காடு மறுகரையில் இரு நினைவுமண்டபம் அமைத்தார் இராணியின் நினைவாக இந்த இடம் ராணிப்பேட்டை என்ற பெயரே நிலைத்துவிட்டது. கடினமான மனதிலும் ஈரம் உண்டு என்று நிருபித்த சதத்துல்லாகான் அமைத்த இராஜதேசிங்கு, இராணிபாய் நினைவிடம் இன்றைய நிலையில், அதன் மேடைகள் தகர்ந்து மண்ணில் புதைந்துள்ளன. ஆமை வடிவிலான பீடம் மேல் அமையபெற்றகலைநயத்துடன்உள்ளபச்சைவ ண்ணகற்கள்உடைக்கபட்டுசிதறிகிடக்கின்றன.

சரித்திரபுகழ்கொண்டநினைவிடம்முட்களும்,புதர்களும், வழ்ந்தவண்ணம் தன் அடையாளம் தொலைத்து கேட்பாரற்று கிடக்கின்றது.

இத்தகைய சரித்திர பிண்ணனிகொண்டு ராணிப்பேட்டை நகர் உருவாக காரணமான இந்த நினைவிடம் காப்பாற்ற பட காத்திருக்கிறது.





# உலகப் பழங்குடிகள் தினம்

## - தமிழகன்




உலகம் முழுவதிலும் சுமார் 37 கோடி பழங்குடி மக்கள் இருப்பதாக ஐநா சபை அறிக்கைக் குறிப்பிடுகிறது.

உலக மக்கள் தொகையில் சுமார் 5 விழுக்காடு இருக்கும் இம்மக்கள் 7000 மொழிகளைப் பேசுபவர்களாகவும், 5000 விதமானப் பண்பாட்டை சேர்ந்தவர்களாகவும் உள்ளனர்.

ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்டு 9, ஆம் தேதி உலக அளவில் பூர்வீகக் குடிகளின் நாளாக கொண்டாப்படுகிறது. 1982 ஆம் ஆண்டு ஐநா சபையில் உலக முழுவதிலும் இயங்கும் செயல்பாட்டாளர்கள் இணைந்து பூர்வீக குடிகளின் பிரச்சனைகளைவிவாதிக்கும் ஒரு துறை உருவாக்கி, அதன் முதல் சந்திப்பை ஜெனிவாவில் நடத்தினர்.

அதில் பூர்வீகக் குடி (அ) பழங்குடி மக்கள் சந்தித்து வரும் பிரச்சனைகளான, கல்வி, உணவு, பொருளாதாரம், பழங்குடிகளின் குடிகளின் இடப்பெயர்வு, எல்லைப்புற அல்லது நகர்புறங்களில் உள்ள பழங்குடிகளின் துயரங்கள், பழங்குடி கலாச்சாரம் மற்றும் பண்பாடு மீட்டுருவாக்கம் பற்றி உலகளவில் முதன்முதலில் விவாதிக்கப்பட்டது.

அந்நாளை நினைவுக்கூறும் விதமாக ஒவ்வொரு ஆண்டும், உலக பூர்வீகக் குடிகளின் நாளாகக் கொண்டாடவேண்டும் என்று 1993 ஆம் ஆண்டு ஐநா சபை தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது.

இதனைத் தொடர்ந்து பல நாடுகள் மற்றும் அமைப்புகளுடன் ஐநா சபை இணைந்து பழங்குடிகளின் வாழ்க்கைத் தர முன்னேற்றதிற்காக பல நாடுகளில் ஆய்வுகளையும், செயல் திட்டங்களையும் வகுத்து வந்துள்ளது.

இதன் வரைவானது பல நாடுகளில் இருந்து தொகுக்கப்பட்டு, 2007 ஆம் ஆண்டு நடைபெற்ற உலகப் பழங்குடிகள் மாநாட்டில் Declaration on the Rights of Indigenous Peoples, எனும் தலைப்பில் பழங்குடிகளின் அடிப்படை உரிமைகள் என 46 அம்ச வரையறையை ஐநா சபை வெளியிட்டது.

உலகம் முழுவதிலும் உள்ள பழங்குடி மொழிகளில் 2680 மொழிகள் அழியும் தருவாயில் உள்ள நிலையில் வருகின்ற 2019 ஆண்டானது பழங்குடி மொழிகளின் ஆண்டாக அறிவிக்கப்பட்டுள்ளது.



# திருவள்ளூர் மாவட்டக் கோயில்கள் - 2

- பெ. தாமரை



எங்களது திருக்கோயில்கள் உலாவின் இரண்டாவது தவனையில் நாங்கள் மேலும் சில திருவள்ளூர் மாவட்டக் கோயில்களைத் தரிசித்தோம்.

ஞாயிறு கோயில்:

பொன்னேரி வட்டம், 'ஞாயிறு' என்னும் இடத்தில் அமைந்துள்ளது புஷ்பரதேஸ்வரர் கோயில் (ஞாயிறு கோயில்). செங்குன்றத்திலிருந்து 20 கி.மீ. தொலைவிலும், பொன்னேரியிலிருந்து 19 கி.மீ. தொலைவிலும் உள்ளது இது. கோயிலுக்குச் செல்லப் பேருந்து வசதி உள்ளது. நாங்கள் பொன்னேரியிலிருந்து இருசக்கரவாகனத்தில் தச்சூர் கூட்டுச்சாலை, காரனோடை செல்லும் சாலையில் சென்றோம். நாங்கள் பெரும்பாலும் கூகுள் வரைபடத்தை நம்பியே பயணிப்போம். காரனோடை மேம்பாலம் அருகில் உள்ள கிளை வழிச்சாலையில் இருந்து 10 கி.மீ எனக் காட்டவும், 'இன்னும் இவ்வளவு தூரமா!' என்றே இருந்தது. ஆனால் செல்லச் செல்ல 'இன்னும் தொலைவு நீளாதா' என்று ஏங்கும் அளவிற்குக் கண்களுக்குக் குளுமையாகவும், மனத்திற்கு அலுக்காத பயணமாகவும் சுற்றிலும் பசுமை... பசுமை... பசுமைதான்!

கோயிலை நெருங்குகையில் முதலில் நம்மை வரவேற்பது குளம்தான், அதையடுத்துதான் கோயில்! கோயில் கோபுரம் ஐந்து நிலைகளைக் கொண்டது. கோயிலினுள் நுழைந்ததும் கோயில் பல புணரமைப்புக்குட்பட்டது என அறிந்துக்கொள்ள இயல்கிறது. இருந்தும் உள்ளேயும் பசுமை நிறைந்து அழகாக நம்மை ஈர்க்கிறது. கருவறை கீழ்பகுதி கற்றளியாகவும் விமானம் சுதையாகவும் உள்ளது.

மூலவர்: புஷ்பரதீஸ்வரர்
அம்மன்: சொர்ணாம்பிகை
தலமரம்: நாகலிங்கம், திருவோடு, செந்தாமரை

கருவறை வெளிச்சுற்று சுவர்களில் மிகவும் சிதிலமடைந்த கல்வெட்டுகள் காணக் கிடைக்கின்றன. இங்குள்ள கல்வெட்டுகள் பாண்டிய மன்னன் சடையவர்மன் சுந்தரப்பாண்டியன் மற்றும் விஜயநகர மன்னர் காலத்தன. தலவிருச்சங்களில் ஒன்றான திருவோடு மரத்தையும் இங்கு பார்க்கமுடிகிறது.

இங்குதான் சுந்தரரின் இரண்டாவது மனைவி சங்கிலி நாச்சியார் அவதரித்ததாக கூறப்படுகிறது. அவருக்குத் தனி சன்னிதியும் இங்கு உள்ளது. கருவறை, முகப்பு மண்டபம் தவிர்த்து பிற சன்னிதிகள் சமீபத்தியனவாக உள்ளன.

இது சூரியனுக்கானப் பரிகாரத்தலமாக உள்ளது. கருவறையின் உட்சுவரில் உள்ள சூரியக் கடவுளிற்குச் சிறப்பு வழிபாடு நடைப்பெற்று வருகிறது.
இந்த அழகிய கோயிலில் ஒரு மணிநேரத்துக்கும் மேல் சுற்றினோம். கல்வெட்டுகளில் எதையாவது படிக்க முடிகிறதா என்று பார்த்து (மிகவும் சிதைந்துள்ளது, கல்வெட்டு எழுத்துக்களைத் தேடி உற்றுப் பார்த்தால் மட்டுமே கண்ணுக்குக் கிடைக்கும், அவ்வளவு மங்கியுள்ளது!), திருவோட்டு மரத்தை வியந்து, மிகப்பெரிய நாகலிங்க மரத்தை நாலைந்துமுறை வெவ்வேறு கோணங்களில் புகைப்படம் எடுத்து மகிழ்ச்சியான மனநிலையுடன் திரும்பினோம்.

திருவலிதாயம்:
பாடி அருகில் உள்ள சிவாலயம், பாடல் பெற்ற




தலம். 'பாடி சிவன் கோயில்' என்றே பெரும்பாலும் அறியப்படுகிறது. கோயில் கோபுரம் மூன்று நிலைகளைக் கொண்டது. கோயிலின் வெளிப்புறம் புதுப்பிக்கப்பட்டிருந்தாலும், கருவறையும் அதன் வெளிப்புறச்சுவரும் பழைமையைக் காட்டுகின்றன. கல்வெட்டுகள் சில இடங்களில் மங்கியிருந்தாலும், பெரும்பாலும் படிக்கக்கூடியதாகவே உள்ளன. மூன்றாம் ராஜராஜனின் கல்வெட்டுகள் மற்றும் விஜயநரக மன்னர்களின் கல்வெட்டுகளும் உள்ளன. புதிதாக கல்வெட்டுகள் படிக்கப் பயில்வோரைக் கண்டிப்பாக ஈர்க்கக்கூடிய கோயில்.

இறைவன்: வலிதாயநாதர்
இறைவி: தாயம்மை
கருவறை தூங்கானை மாட வகையைச் சார்ந்தது. கோயிலினுள் நுழைந்ததும் வலப்பக்கத்தில் குருவிற்குத் தனி சன்னிதி உள்ளது. இக்கோயில் குருவிற்குப் பரிகாரத்தலமாக உள்ளது. திருஞானசம்பந்தர், அருணகிரிநாதர் (இக்கோயிலில் முருகனுக்குத் தனி சன்னிதி உள்ளது), இராமலிங்க அடிகளார் ஆகியோரால் பாடப்பெற்றத் தலமாகும்.

வடதிருமுல்லைவாயில்:
பாடியிலிருந்து பத்து கி.மீ தொலைவில் சென்னை-ஆவடி செல்லும் நெடுஞ்சாலையிலிருந்து உள்ளடைந்து திருமுல்லைவாயில் என்னுமிடத்தில் மாசிலாமணீஸ்வரர் கோயில் உள்ளது. நெடுஞ்சாலையிலிருந்து ஒரு கி.மீ தொலைவில் இக்கோயில் உள்ளது, நடந்தே சென்றுவிடலாம்! கோயிலினுள் நுழைவதற்கு முன் மிகப்பெரிய மதிற்சுவரும் அழகிய குளமும் கண்கவர் சிற்பங்களைக் கொண்ட பதினாறுகால் மண்டபமும் நம்மைக் கவர்ந்திழுக்கின்றன. வருத்தமான விஷயம் என்னவென்றால் நாங்கள் சென்றிருந்தபோது கோயில் சீரமைப்பு பணியில் இருந்ததினால் கோயில் கோபுரம், விமானங்கள் மூடப்பட்டும், சாரங்கள் நிறைந்தும் அவற்றின் அழகை முழுக்க இரசிக்க முடியாத நிலையில் இருந்தன. இக்கோயில் கோபுரம் ஐந்து நிலைகளைக்



கொண்டது. நுழையும் போதுள்ள விநாயகருக்குப் பின்னால் சுதையாலான தலவரலாற்றுச் சிற்பம் உள்ளது. இக்கோயிலின் கருவறை விமானமும் தூங்கானை விமான வகையைச் சேர்ந்தது. இக்கோயில் மூன்றாம் இராஜராஜன் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாமென்றும், அவன் காலத்தில் இக்கோயில் கற்றளியாக்கப்பட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகிறது. மிக அழகிய அர்த்தமண்டபமும், கருவறைச் சுற்றுச்சுவர் பட்டிகளில் கல்வெட்டுகள் நிறைந்தும் காணப்படுகின்றன.

இறைவன்: மாசிலாமணீஸ்வரர்
இறைவி: கொடியிடையம்மன்
கருவறைக்கு முன் இரு எருக்கத்தூண்கள் பூணிடப்பட்டு உள்ளன.
தலமரம்: முல்லை
சுந்தரர், அருணகிரிநாதர், இராமலிங்க அடிகளாரால் பாடப்பெற்றத் தலம்.

மண்ணாரீஸ்வரர் பச்சையம்மன் கோயில்:

மீஞ்சூர் திருவுடையம்மன் கோயில் அருகே உள்ளது போன்றே, இங்கேயும் கொடியிடையம்மன் கோயிலிற்கு முன்பே இந்தக் கோயில் உள்ளது. இக்கோயிலிலும் மிகப்பெரிய அய்யனார், குதிரை சிலைகள் உள்ளன. இந்தக் கோயில் குலதெய்வ வழிபாட்டில் உள்ளக் கோயில். இங்குள்ள அம்மனுடைய உற்சவ சிலை மிகமிக அழகானது. சிலையைப் பார்த்த பின் அதிலிருந்து பார்வையைத் திருப்புவது மிக சிரமமானது. அத்தனை அழகு.

தொடர்புடையதாகக் கருதப்படும் கொடியிடை, வடிவுடை, திருவுடை ஆகிய மூன்று அம்மன் கோயில்களில் இரண்டு கோயில்களுக்கு அருகில் மண்ணாரீஸ்வரர் - பச்சையம்மன் கோயில் அமைந்திருப்பதைப் பார்த்ததும் மூன்றாவதான திருவொற்றியூர் கோயிலின் அருகிலும் மண்ணாரீஸ்வரர் கோயில் உள்ளதா என்று அறியவும், அவ்வாறு இருப்பின் இதன் பொருள் என்னவாக இருக்கும் என்று அறியவும் ஆவல் தோன்றியது.

திருவள்ளூர் மாவட்டம் பொன்னேரி வட்டம் மற்றும் சென்னைக்கு அருகில் அமைந்துள்ள, நாங்கள் கண்டு இரசித்த இக்கோயில்களை நீங்களும் காண விழைவீர்கள் என்றே நம்புகிறோம். பழைமைக்கும் புதுமைக்கும் இடையில் காலவெள்ளத்தின் ஓட்டத்தில் பட்டும்படாமலும் இருக்கும் இவ்வரலாற்று ஆன்மிகச் சின்னங்களைக் காண யாருக்குத்தான் ஆவல் எழாது? கண்டு வந்தால் உங்கள் அனுபவங்களையும் பகிருங்கள். நன்றி!

# தேயிலை உற்பத்தியும் தெய்வ உருவாக்கமும்

- எம்.எம். ஜெயசீலன், விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, பேராதனைப் பல்கலைக்கழகம்



அறிமுகம்

நாட்டார் தெய்வங்கள் மக்கள் வாழ்வுடன் இரண்டறக் கலந்தவையாகும். அத்தெய்வங்களின் தோற்றமும் வடிவமும் குணமும் அவை தோன்றிய சமூகம் சார்ந்தவையாகவே விளங்குகின்றன. தெய்வங்களின் தோற்றம் குறித்து ஆராய்ந்த பலரும் அச்சமும் உணவுத்தேவையுமே ஆதி மனிதனின் கடவுள் உருவாக்கத்துக்கு அடிப்படையாக அமைந்தன என்று கூறுகின்றனர். அதனால் மனிதனின் உற்பத்திமுறைக்கும் கடவுளருக்கும் இடையே நெருக்கமான உறவு காணப்படுவதுடன் ஒவ்வொரு சமூகத்தினரின் உற்பத்திமுறைக்கு ஏற்ப கடவுளர்களின் தோற்றமும் வடிவும் குணமும் உருப்பெறுகின்றன. தமிழ்ச் சமூக வரலாற்றில் உற்பத்திமுறைகளுக்கு ஏற்ப கடவுளின் உருவாக்கம் இடம்பெற்றுள்ளமைக்குப் பல சான்றுகளைக் கூறலாம்.

எடுத்துக்காட்டாக, முல்லைநிலத் தெய்வமாக மாயோனையும் மருதநிலத் தெய்வமாக இந்திரனையும் வழிபட்டதற்கு அந்நிலத்து உற்பத்திமுறை, வாழ்வியலே அடிப்படையாக அமைகின்றன. மந்தைமேய்ப்புச் சமூகத்தேவைக்கு ஏற்ப கையில் புல்லாங்குழலுடன் கன்றுகள் சூழ்ந்தவாறு மாயோனின் வடிவமும் ஆயர்குலத்தோடு இணைந்த வகையில் அவனின் தோற்ற வரலாறும் கட்டமைக்கப்பட்டுள்ளன. அவ்வாறே மருதநிலத்து உழவர்கள் வேளாண்மைக்கான நீரைத் தருகின்ற கடவுளாகக் கருதப்படுகின்ற இந்திரனை வழிபடுகின்றனர். இவை மட்டுமன்றிக் காலத்துக்குக் காலம் தமிழ்ச் சமூக குழுக்களுக்குள் உற்பத்திமுறையில் ஏற்பட்டுவந்துள்ள மாற்றங்களுக்கு ஏற்ப கடவுள் உருவாக்கத்திலும் வழிபாட்டு முறையிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டு வந்துள்ளன. அம்மாற்றங்களுள் ஒன்றாக பிரித்தானியக் காலனியக் காலத்தில் உருப்பெற்ற பெருந்தோட்ட உற்பத்திமுறைக்கு ஏற்ப புதிய கடவுளர்கள் உருவாக்கம் பெற்றமை அமைகின்றது. அவ்வகையில் பெருந்தோட்டப் பயிர்ச்செய்கையின் பிரதான பயிராக விளங்கும் தேயிலை உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டு தோற்றம்பெற்ற கடவுளர்களையும் வழிபாட்டு முறைகளையும் சுட்டிக்காட்டுவதாக இக்கட்டுரை அமைகின்றது. கட்டுரைக்கான தகவல்கள் இலங்கை மலையகத் தேயிலைத் தோட்டங்களில் திரட்டப்பட்டவையாகும்.

தென்னிந்தியாவின் திருச்சி, சேலம், மதுரை, வேலூர் போன்ற பகுதிகளின் கிராமப்புறங்களிலிருந்து இலங்கையின் மத்திய பகுதிகளில் குடியேறிய தமிழர்கள், அங்குத் தாம் பின்பற்றிய தமது பூர்வீக பண்பாட்டுப் பாரம்பரியங்களையே இங்கும் தொடர்ந்து பின்பற்றலாயினர். அப்பண்பாட்டுப் பாரம்பரியங்களைத் தொடர்ந்து பேணுவதற்குரிய சாதகமான சூழ்நிலை மலையகப் பெருந்தோட்டங்களில் நிலவின. குறிப்பாக, தமிழ் நாட்டிலிருந்து கூலி உழைப்பிற்காக அவர்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டமுறை, பெருந்தோட்டங்களுக்கு உள்ளேயே தனிமைப்படுத்தப்பட்ட வாழ்க்கைமுறை, குடியிருப்புக்களின் அமைவு, அமைப்பு, பிறந்த இடத்திலிருந்து பெற்றுக்கொண்ட சாதித் தொடர்ச்சி, இறுக்கமான கட்டுப்பாடுகளுடன் கூடிய பெருந்தோட்ட நிர்வாக அமைப்பு,

தொழில், தொழிற்சங்கம் தொடர்பான தொழில் ஒழுங்கமைப்பு, அரசியல் தனிமைப்பாடு, மக்களின் சமூக பொருளாதார நிலைப்பாடு, அடிக்கடி இந்தியா சென்று வரச் சாதகமாக அமைந்த புவியமைவு போன்றன மலையகத் தமிழரின் பூர்வீகப் பண்பாட்டின் தொடர்ச்சியான நிலைப்புக்குக் காரணங்களாக அமைந்தன (சிவத்தம்பி, கா (க.ஆ) : 1985, வேல்முருகு, ந : 1993).

இவ்வாறு குடியேறியவர்கள் பெரிதும் இந்துக்களாகவே இருந்த காரணத்தால் இந்துப்பண்பாட்டுப் பாரம்பரியங்களே இங்கும் பின்பற்றப்பட்டன. தென்னிந்திய பூர்வீகத் தொடர்ச்சியும் இலங்கையில் நிர்ப்பந்திக்கப்பட்ட வாழ்க்கை முறையும் அம்மக்களிடையே மதநம்பிக்கையை மேலும் வளர்க்கலாயின. குறிப்பாக, பாதுகாப்பற்ற கடல் பயணம், நீண்ட தூர நடைப்பயணம், வறட்சி, வெப்பம், மழை, குளிர் போன்றவற்றால் பரவிய தொற்றுநோய்கள், காடு வெட்டி பெருந்தோட்டங்கள் அமைத்தபோதும் ரயில் பாதைகள் அமைத்தபோதும் ஏற்பட்ட அனர்த்தங்கள், பெருந்தோட்டங்களுக்குள்ளேயே முடக்கப்பட்ட வாழ்க்கைமுறை போன்ற காரணங்களால் பூர்வீக மதநம்பிக்கைகள் அம்மக்களிடையே கூடுதல் அழுத்தம் பெற்றன. இதனால் 'அவர்கள் வந்திறங்கிய துறைமுகங்களிலும், பிரயாணம் செய்யும்போது ஓய்வெடுத்த இடங்களிலும், நிரந்தரமாகத் தங்கிக் குடியிருப்புக்கள் ஏற்படுத்திய இடங்களிலும் இந்து வழிபாட்டிடங்கள் நிறுவப்பட்டதுடன், பல்வேறு சமூக நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன' (சிவத்தம்பி, கா (ப.ஆ), 1993 : 08).

தமதுபூர்வீகவழிபாடுகளைஇங்கும்பின்பற்றிய அவர்கள், புதிதாகத் தோன்றிய பெருந்தோட்ட உற்பத்திமுறைக்கு ஏற்ப தமது கடவுள் வழிபாட்டில் சில மாற்றங்களை ஏற்படுத்திக்கொண்டுள்ளனர். அதனால் புதிய கடவுளர் பலர் தோற்றம் பெற்றதோடு அவர்களுக்கான பிரத்தியேக வழிபாட்டு முறைகளும் மேற்கிளம்பின. அவ்வழிபாடுகள் தென்னிந்திய பூர்வீக வழிபாட்டு மரபுகளைப் புதிதாகத் தோற்றம்பெற்ற தொழில்நிலைமைகளுடன் இணைவுபடுத்தியதால் தோன்றியவை எனலாம். அவ்வகையில் தேயிலை உற்பத்தியுடன் இணைந்த வகையில் மேற்கொள்ளப்படுகின்ற வழிபாடுகளைப் பின்வருமாறு நோக்கலாம்.

01. தவறணைமுனி

தவறணைமுனி வழிபாடானது தேயிலைக்கன்றுகள் உற்பத்தி செய்யப்படும் இடத்தில் மேற்கொள்ளப்படுகின்றது. தேயிலைக் கன்றுகள் நாற்றுமேடையிட்டு வளர்க்கப்படும் இடமே தவறணை எனப்படுகின்றது. அத்தவறனையில் பணியாற்றுவோரின் பாதுகாப்பு மற்றும் வளத்தினைப் பெருக்குதல் ஆகிய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு இவ்வழிபாடு மேற்கொள்ளப்படுகின்றது. இவ்வழிபாடானது குறிப்பிட்ட தவறணையில் தொழில்புரியும் ஆண் தொழிலாளர்களின் தலைமையில் அவர் தெரிவுசெய்யும் காலப்பகுதியில் மேற்கொள்ளப்படுகின்றது. பெரும்பாலும் உயிர்பலி இட்டு (சேவல்) கள்ளு, சாராயம், சுருட்டு போன்றன படைக்கபடும். இன்று சிலர் பொங்கல் வைத்தும் வழிபாட்டினை மேற்கொள்கின்றனர்.

02. கொழுந்துசாமி

தேயிலைக் கொழுந்து செழித்து வளர வேண்டும் என்ற நோக்கில் வளம் வேண்டிக் கொழுந்துசாமி வழிபடப்படுகின்றது. இவ்வழிபாடு வருட ஆரம்பத்திலும் வறட்சிக் காலங்களிலும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. இவ்வழிபாடு பெண்களின் தலைமையில் நடைபெறுவதோடு தேயிலைச் செடி ஒன்றுக்கு மாலையிட்டு அதனைக் கடவுளாக உருவகித்து வழிபாடியற்றுகின்றனர். இவ்வழிபாட்டில் பலியிடல் வழக்கில் இல்லை. பொங்கல், வெற்றிலை, பாக்கு, பழம், பால், பச்சை அரிசி, துள்ளுமா (நீரில் ஊற வைத்த சிவப்பு பச்சை அரிசியில் சீனி, தேங்காய் ஆகியவற்றைக் கலந்த உணவு பச்சை அரிசி. நீரில் ஊற வைத்த சிவப்பு பச்சை அரிசியை உரலில் இட்டு இரண்டொன்றாக குற்றி, சீனி, தேங்காய் ஆகியவற்றைக் கலந்த உணவு துள்ளுமா) போன்றனவே படைக்கப்படுகின்றன.

03. கவ்வாத்துசாமி

கவ்வாத்துசாமி அல்லது கவ்வாத்துமுனி வழிபாடானது ஆண்டுதோறுமன்றி காலத் தேவைக்கேற்ப ஆண்களால் மேற்கொள்ளப்படுகின்றது. (கவ்வாத்து வெட்டும் காலப்பகுதியில்மட்டும்மேற்கொள்ளப்படும்.ஆனால், ஆண்டுக்கு ஒரு தடவைக்கு மேல் வழிபாட்டினை நிகழ்த்துதல் வழக்கில் இல்லை). கவ்வாத்து வெட்டுதல் என்பது ஒரு தொழில்நிகழ்வாகும். தேயிலையின் விளைச்சலைப் பெருக்கவும், கொழுந்து பறித்தலை இலகுபடுத்தவும் தேயிலைச் செடிகளின் நுனி (உச்சி ஆட்சி) ஆண்களைக் கொண்டு வெட்டுவிக்கப்படும். இந்நிகழ்வு தொடங்கும் காலங்களிலேயே இவ்வழிபாட்டுக்கான ஆரம்ப நிகழ்வு இடம்பெறுகின்றது.

கவ்வாத்து வெட்டும்போது தொழிலாளர்களுக்கு எவ்வித அனர்த்தங்களும் ஏற்படக்கூடாது என கவ்வாத்துசாமிக்கு நேர்த்தி வைத்து, கவ்வாத்து வெட்டி முடிந்ததும் அத்தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றிணைந்து ஆடு (சில வேளைகளில் ஆட்டுடன் சேவல்) பலியிட்டு,

சாராயம், கள், சுருட்டு போன்றவற்றைப் படைத்து நேர்த்திக்கடனைக் கழிக்கின்றனர். நேர்த்திக்காக பலியிடப்பட்டவை யாவும் அவ்விடத்திலேயே சமைத்து உண்ணப்படுவதோடு அவற்றை வீடுகளுக்கு எடுத்துச்செல்வதோ பெண்களுக்கு வழங்குவதோ இல்லை. கவ்வாத்துசாமிக்கெனத் தனித்த வழிபாட்டுத் தலங்கள் எங்கும் இல்லை. தேயிலைச் செடிகளுக்கு இடையிலோ மலையடிவாரங்களிலோ நீரூற்று இருக்கும் இடத்திற்கு அருகில் உள்ள ஆல், அரசு அல்லது சவுக்கு போன்ற மரங்களுக்கடியில் முக்கோண வடிவிலான கல்லினை வைத்து வழிபடுவதே மரபாக உள்ளது.

04. மட்டத்துச்சாமி

கவ்வாத்து வெட்டுதல் என்பது போலவே மட்டம் வெட்டுதல் என்பதும் ஒரு தொழில் நிகழ்வாகும். தேயிலைச் செடிகளைக் கவ்வாத்து வெட்டியபின் புதிதாக துளிர்விடும் தளிர்கள் ஒரே சீராக வளர்வதற்காகப் பெண்களைக் கொண்டு வெட்டுவிக்கப்படும். இதனைத் தொழிலாளர்களின் வழக்கில் மட்டம் வெட்டுதல் என்பர். மட்டம் என்பது மேடுபள்ளம் இன்றி சீராக அமையும் நிலையைக் குறிக்கின்றது. அத்தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்கள் ஆயுதங்களால் தமக்கு எவ்வித ஆபத்தும் நேரிடாதவாறு தமக்குப் பாதுகாப்பு வேண்டி இவ்வழிபாட்டினை மேற்கொள்கின்றனர்.

இவ்வழிபாடானது ஆண்டுதோறுமன்றிக் காலத்தேவையின் பொருட்டே செய்யப்படுகின்றது. கவ்வாத்துமுனியைப் போல இவ்வழிபாடும் வருடத்திற்கு ஒருதடவைக்கு மேல் நிகழ்த்துதல் வழக்கில் இல்லை. இவ்வழிபாட்டிலும் தேயிலைச் செடியொன்றுக்கு மாலையிட்டு அதனைத் தெய்வமாக உருவகித்துக்கொள்வதோடு பலியிடல் ஏதும் இன்றிப் பொங்கல், வெற்றிலை, பாக்கு, பால், பழம், பச்சை அரிசி போன்றனவே படைக்கப்படுகின்றன.

05. கம்பிமுனி

முன்னைய காலத்தில் கம்பிமுனி எனும் வழிபாடும் மலையகப் பெருந்தோட்டங்களில் நிகழ்த்தப்பட்டுள்ளது. போக்குவரத்து வசதிகள் விருத்தியடையாத முன்னைய காலங்களில் பறிக்கப்பட்ட கொழுந்தினை மூட்டைகளில் கட்டி, மலையுச்சிகளில் இருந்து பாதை இருக்கின்ற இடத்துக்கு அல்லது தேயிலைத் தொழிற்சாலைக்குக் கம்பிகள் மூலம் அனுப்பினர். மலையுச்சியில் இருந்து கொழுந்து சென்றடைய வேண்டிய இடத்துக்குத் தொடுக்கப்பட்ட கம்பிகளில் கொழுந்து மூட்டைகள் அனுப்பப்பட்டன. இவ்வாறு பயன்படுத்தப்பட்ட தொடுக்கபட்ட கம்பிகள் பயன்பாடற்ற நிலையில் இன்றும் பல தோட்டங்களில் காணப்படுகின்றன. இந்தக் கொழுந்துமூட்டைகளை அனுப்பும் தொழிலில் ஈடுபட்ட ஆண்களால் அக்கம்பி தெய்வமாகக் கருதப்பட்டு, பாதுகாப்பு கருதிக் கம்பிமுனி வழிபாடு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இங்கும் இரத்தப்பலி கொடுத்து வழிபாடியற்றப்பட்டுள்ளது. இன்று இக்கம்பிகளின் தேவை அற்றுப்போனதால் இவ்வழிபாடும் வழக்கிறந்துபோய்விட்டது.

06. றோதைமுனி

பெருந்தோட்டத் தொழிற்துறைக்கே உரிய வழிபாடுகளில் றோதைமுனி வழிபாடு மிகவும் பிரசித்தமானதாகும். தேயிலைத் தொழிற்சாலையுடன் இணைந்ததாக விளங்குகின்ற இவ்வழிபாடானது, தொழிற்சாலைகளில் இயந்திரங்களுடன் தொழில்புரியும்போது இயந்திரங்களினால் எவ்வித அனர்த்தங்களும் ஏற்படாதிருப்பதற்காக வருடத்திற்கு ஒருமுறை நிகழ்த்தப்படுகின்றது. இவ்வழிபாட்டினை முறையாக நிகழ்த்தாவிடின் றோதைமுனி இரத்தப் பலி, உயிர்ப்பலி எடுத்துவிடுவான் என்ற நம்பிக்கை அத்தொழிலாளர்களிடையே வழக்கில் உண்டு.

ஒவ்வொரு தேயிலைத் தொழிற்சாலைக்கு அருகிலும் றோதைமுனிக்கென வழிபாட்டுத் தலங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அத்தலங்கள் பெரியளவிலான கட்டடங்கள் ஏதுமின்றிச் சிறிய பீடமொன்றும் அதில் சூலம் அல்லது வேல் நடப்பட்டிருக்கும். சில இடங்களிலேயே பீடத்திற்கு மேலே கூரை அமைக்கப்பட்டுள்ளது. வழிபாட்டின்போது அத்தொழிற்சாலையில் தொழில் புரியும் அனைத்து ஆண்கள் (சாதாரண தொழிலாளிமுதல் தோட்டத்தின் பெரிய துரைவரை) உட்பட அத்தொழிற்சாலையுடன் இணைந்த தோட்டங்களில் தொழில்புரியும் ஆண்களும் வழிபாட்டில் கலந்து கொள்வர். பெரும்பாலும் ஆடு (சில இடங்களில் ஆட்டுடன் சேவலும்) பலியிடப்படுகின்றன. பலியிடப்பட்டவையாவும் அவ்விடத்திலே சமைத்து உண்ணப்படுவதோடு அவ்வுணவைப் பெண்களுக்கு வழங்குவதோ வீடுகளுக்கு எடுத்துச் செல்வதோ இல்லை.

றோதைமுனி வழிபாட்டின் தோற்றம் பற்றி மலையகத் தமிழரிடையே வாய்மொழிவழக்காக ஒரு கதை கூறப்படுவதுண்டு. அதாவது, தேயிலைத் தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டபொழுது, கொழுந்தினை (தேயிலையை) அரைப்பதற்காகச் சில்லுடன் கூடிய இயந்திரம் பயன்படுத்தப்பட்டது. சில்லினையே மலையகத் தமிழ் வழக்கில் றோதை என்கின்றனர். இச்சொல் சிங்களமொழியில் சில்லினைக் குறிக்கப் பயன்படுத்துகின்ற 'றோதய' என்ற சொல்லிலிருந்து தோன்றியதாகும். மின்சாரத்தினால் இயந்திரம் (றோதை) இயங்குவதை அறியாத தொழிலாளிகள் அதனை ஒரு பிசாசு அல்லது

ஒரு பெரும் சக்தி இயக்குவதாக நம்பினர். அதனால் றோதையை இயக்குகின்ற சக்தியை றோதைமுனி என வழிபடத்தொடங்கினர் என்ற வாய்மொழி வழக்குப் பெரும்பாலான தோட்டங்களில் வழக்கில் உண்டு.

றோதைமுனி என்ற பெயருக்கான காரணத்தை அடியொட்டியதாக அமைந்துள்ள இவ்வழக்கானது இயந்திரத்தின் அமைப்பையும் அதன் இயக்கத்தினையும் அடிப்படையாகக் கொண்டு தோற்றம் பெற்றுள்ளதைக் காணலாம். இவ்வாறு இயந்திரத்திலிருந்து பாதுகாப்பு என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தோற்றம் பெற்ற இவ்வழிபாடானது பின்னர் அந்நிலையிலிருந்து மேலும் விரிவடைந்து முழுத் தேயிலைத் தொழிற்சாலையின் காவல் தெய்வ வழிபாடாக நிலைபெற்றுவிட்டது.

முடிவுரை

இவ்வழிபாடுகள் யாவும் தொழிலின்போது நிகழும் அபாயங்கள், அனர்த்தங்களில் இருந்து தம்மைப் பாதுகாத்தல் மற்றும் வளத்தினைப் பெருக்குதல் ஆகிய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அவையாவும் தேயிலை உற்பத்தி முறையோடு இணைந்தவகையில் அமைந்துள்ளதைக் காணலாம். அதாவது நாற்று நடுதல், கொழுந்து பறித்தல், கவ்வாத்து வெட்டுதல், மட்டம் வெட்டுதல், கொழுந்தினைத் தொழிற்சாலைக்குக் கொண்டு செல்லுதல், தொழிற்சாலையில் கொழுந்தினைத் தேயிலைத் தூளாக்குதல் எனும் செயற்பாடுகளை மையமிட்டதாக அமைந்துள்ளன.

அத்துடன் அத்தொழிலில் ஈடுபடுபவர்களின் பால்நிலைக்கு ஏற்ப வழிபாட்டு முறைகள் மாறுபட்டு அமைந்துள்ளமையைக் காணலாம். குறிப்பாக தவறணைமுனி, கவ்வாத்துமுனி, கம்பிமுனி, றோதைமுனி ஆகிய வழிபாடுகள் ஆண்களால் மட்டும் நிகழ்த்தப்படுகின்றன. கொழுந்துசாமி, மட்டத்துசாமி ஆகியன பெண்களின் தலைமையில் இடம்பெறுகின்றன.

பெண்களின் தலைமையில் இடம்பெறும் வழிபாட்டில் ஆண்கள் சிலர் இணைந்து கொள்வது வழமை. இவ்வேறுபாடு தொழில் பகுப்போடு தொடர்புடையதாகும். தொழிற்சாலை வேலைகள், கவ்வாத்து வெட்டுதல், தவறணைத் தொழில்கள் போன்றன ஆண்களினாலும் சில இடங்களில் ஆண்களின் தலைமையில் சில பெண்களும் இணைந்தும் தொழில்புரிகின்றனர்.

இதனால் அத்தொழில்களோடு இணைந்த வழிபாடுகள் ஆண்களால் முன்னெடுக்கப்படுகின்றன. அவ்வாறே கொழுந்து பறித்தல், மட்டம் வெட்டுதல் என்பன பெண்களால் முன்னெடுக்கப்படுவதால் அத்தொழிலோடுஇணைந்தவழிபாடுகள்பெண்களின் தலைமையில் மேற்கொள்ளப்படுகின்றன.

ஆண் - பெண் இயல்புகள், அவர்களின் வாழ்வியல் முறை என்பனவற்றுக்கேற்ப அத்தெய்வங்களின் வழிபாட்டு முறைகளும் வடிவம் பெற்றுள்ளன. பெண்களால் முன்னெடுக்கப்படும் வழிபாடுகள் ஆண்கள் தமது தொழிலின் நிமித்தம் நிகழ்த்தும் வழிபாடுகளிலிருந்து பல்வேறு வகைகளில் வேறுபட்டுள்ளன. குறிப்பாக, கொழுந்துசாமி, மட்டத்துசாமி வழிபாடுகளில் பலியிடலோ மது, சுருட்டு முதலியன படைக்கப்படுவதோ இல்லை.

பதிலாக பொங்கல், கடலை, பச்சரிசி அல்லது துள்ளுமா, பால், பழங்கள், வெற்றிலை, பாக்கு முதலியனவே படைக்கப்படுகின்றன. அத்தோடு அவற்றினை ஆண், பெண் இருபாலாரும் உண்பதோடு வீடுகளுக்கும் எடுத்துச் செல்வர். ஆண்களின் வழிபாட்டில் படைக்கப்படும் உணவு வீடுகளுக்கு எடுத்துச் செல்வதோ பெண்களுக்கு வழங்குவதோ இல்லை.

இதன்படி தென்னிந்தியாவிலிருந்து இலங்கை வந்த தமிழர்கள் தமது பூர்வீக வழிபாட்டு மரபுகளைப் புதிதாகத் தோன்றிய பெருந்தோட்டத் தொழில்முறைகளோடு இணைவுபடுத்தியதால் மேற்கூறிய புதிய கடவுளர்களும் அவர்களுக்கான வழிபாட்டு முறைகளும் தோற்றம்பெற்றுள்ளன.

தேயிலை உற்பத்தியில் நாற்று நடுதல்முதல் தேயிலைத் தூள் உருவாக்குதல்வரை ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு கடவுளர்கள் உருவாக்கம் பெற்றுள்ளதோடு அக்கடவுளர்களுக்கான பிரத்தியேக வழிபாட்டு முறைகளும் ஏற்பட்டுள்ளன. எனவே, ஒரு சமூகம் எவ்வகையான உற்பத்திமுறையினைச் சார்ந்திருக்கிறதோ அதற்கேற்ப அச்சமூகத்தின் கடவுளர்களும் அக்கடவுளர்களின் வடிவமும் குணமும் மாறுபட்டு அமையும் எனலாம்.




அட்டைப்படம்: மேற்கூரை ஓவியம், உமாமகேஸ்வரர் திருக்கோவில், திருநல்லம் (கோனேரி ராஜபுரம்), நாகப்பட்டினம் DT.

புகைப்படக்காரர்: பா. இராஜசேகர்

# வில்லுப்பாட்டும் விழிப்புணர்வும்

## - L. சொக்கலிங்கம் (தலைமை ஆசிரியர்), தேவகோட்டை.




தேவகோட்டையில் கீழக்குடியிருப்பு பகுதியில் பொது மக்களிடம் பிளாஸ்டிக் ஒழிப்பு விழிப்புணர்வினை வில்லுப்பாட்டு, நாடகங்கள் வழியாக பள்ளி மாணவர்கள் நடத்தினார்கள். நிகழ்வுக்கு வந்தவர்களை ஆசிரியை முத்து மீனாள் வரவேற்றார். தலைமை ஆசிரியர் லெ .சொக்கலிங்கம் தலைமை தாங்கினார். வீதிகளில் கூடியிருந்த மக்களிடம் பிளாஸ்டிக்கால் ஏற்படும் தீமைகள் குறித்தும், அதனைத் தவிர்க்கும்பொருட்டு மாற்று ஏற்பாடுகள் குறித்தும் விளக்கப்பட்டது.

அம்முஸ்ரீ, ஜெயஸ்ரீ, சந்தோஷ், ஐயப்பன், சபரி, சக்திவேல் உட்பட பல மாணவர்கள் பங்கேற்றனர். நிறைவாக ஆசிரியர் கருப்பையா நன்றி கூறினார். இதற்கான ஏற்பாடுகளை ஆசிரியை செல்வமீனாள் செய்து இருந்தார்.

இந்நிகழ்வு குறித்து பள்ளியின் தலைமையாசிரியர் கூறுகையில் நெகிழி (பிளாஸ்டிக்) பொருள்கள் பயன்பாட்டிற்குப் பிறகு முறையற்றுத் தூக்கி எறியப்படுவதால் நிலத்திற்கும் நீருக்கும் காற்றுக்கும் ஏற்படும் பல்வேறு மாசுகளும் அவற்றால் மனிதருக்கும் விலங்குகளுக்கும் ஏற்படும் இன்னல்களும் வில்லுப்பாட்டு, வீதி நாடகம், பாடல்கள் ஆகியவை மூலம் மாணவர்களால் பொதுமக்களுக்குத் தெளிவாக விளக்கப்பட்டன என்றார்.

வில்லுப்பாட்டு விழிப்புணர்வு:

ஒருமுறை பயன்படுத்தித் தூக்கி எறியக்கூடிய மக்காத பிளாஸ்டிக் பொருட்களான பிளாஸ்டிக் தாள்கள், பிளாஸ்டிக் தட்டுகள், பிளாஸ்டிக் குவளைகள் போன்ற பொருட்களைத் தடைசெய்யவும், பாரம்பரியமாகப் பயன்படுத்தப்படும் வாழை இலைகள், பாக்குமட்டைத் தட்டுகள், தாமரை இலைகள் போன்றவற்றின் பயன்பாட்டினை ஊக்குவிக்கவும் வில்லுப்பாட்டு வழியாக விளக்கப்பட்டது.

ஒருமுறை பயன்படுத்தி தூக்கி எறியப்படும் பிளாஸ்டிக் பொருட்கள், நிலங்களில் தேங்கிவிடும் போது, நீர்நிலைகளை நோக்கிச் செல்லும் நீரின் போக்கு மாறி, நீர் தேங்கி விடும் நிலை உருவாகிறது.

மேலும், கழிவுநீர் செல்லும் பாதைகளிலும் இதன் பாதிப்புகள் அதிக அளவில் உள்ளது. இதனால் தண்ணீர் மாசடைகிறது. மேலும் மழைநீர் பூமியில் கசிந்து நிலத்தடியினை அடையாமல் போவதால் நிலத்தடி நீர் மட்டம் உயர்வதும் பாதிக்கப்படுகிறது.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக, தேங்கி இருக்கும் பிளாஸ்டிக் கழிவுகளில் மழைநீர் தேங்கும் போது, கொசு உற்பத்தியாகி, அதன் மூலம் மலேரியா, டெங்கு போன்ற நோய்கள் பரவுகின்றன. மேலும், மழைநீர் கால்வாய்களில் அடைப்புகள் ஏற்பட்டு, வெள்ளப்பெருக்கு ஏற்படவும் காரணமாகிவிடுகிறது. மண் வளமும் பாதிக்கப்படுகிறது. மாணவர்கள் இவற்றை வில்லுப்பாட்டு வழியாக மக்களிடம் தெளிவாக விளக்கினர்.

வீதி நாடகம்:

தூக்கி எறியப்படும் பிளாஸ்டிக் கழிவுகள் எரிக்கப்படும்போது, அதன் மூலம் வெளியாகும் நச்சு வாயுவின் மூலமாக மனிதன் மற்றும் உயிரினங்கள் சுவாசிக்கும் காற்றும் மாசடைகிறது. உணவு பொருட்களுடன் தூக்கி எறியப்படும் பிளாஸ்டிக் கழிவுகளை ஆடு, மாடுகள் உள்ளிட்ட கால்நடைகள் பிற உணவுகளுடன் சேர்ந்து உண்ணும் நிலை ஏற்படுவதனால், கால்நடைகள் மற்றும் வன விலங்குகளின் உயிரிழப்புக்கும் பிளாஸ்டிக் பொருட்கள் காரணமாகி விடுகிறன.

மேலும், பிளாஸ்டிக் பொருட்கள் பல ஆண்டுகள் ஆனாலும் மக்காத தன்மை உடையதால் அவற்றை அழிப்பதோ, ஒழிப்பதோ இயலாத காரியம். இவ்வாறு நிலம், நீர், காற்று போன்ற பல்வேறு நிலையில் மாசு ஏற்பட்டு, மனித உயிருக்கும், சுகாதாரத்திற்கும் பிளாஸ்டிக் பொருள்கள் பெரும் தீங்கு விளைவிக்கக் காரணமாகி விடுகிறன. எனவே இவற்றை அறவே தவிர்ப்பது இன்றைய சூழ்நிலையில் கட்டாயமாகிறது.

மேற்படி பாதிப்புகளைக் கருத்தில் கொண்டும், இந்தத் தீங்கினை நம் எதிர்கால சந்ததியினருக்கு நாம் விட்டுச்செல்லக்கூடாது என்ற உயரிய நோக்கத்திலும், தமிழ்நாட்டில் 2019-ம் ஆண்டு, ஜனவரி 1 முதல் பால், தயிர், எண்ணெய், மருத்துவ பொருட்களுக்கான உறைகள் தவிர, தடிமன் வேறுபாடின்றி, இதர மக்காத பிளாஸ்டிக் பொருட்களான பிளாஸ்டிக் தாள்கள், பிளாஸ்டிக் தட்டுகள், பிளாஸ்டிக் தேநீர், தண்ணீர்க் குவளைகள், தண்ணீர் பாக்கெட்டுகள், பிளாஸ்டிக் உறிஞ்சு குழல் மற்றும் பிளாஸ்டிக் கைப்பைகள், பிளாஸ்டிக் கொடிகள் உள்ளிட்ட பொருட்களைத் தமிழக அரசு தடை செய்துள்ளது என்கிற தகவல்கள் வீதி நாடகம் வழியாக விளக்கிச் சொல்லப்பட்டன.

பிளாஸ்டிக் ஒழிப்பு விழிப்புணர்வு பாடல்கள்:

தூக்குச் சட்டி தூக்கினால் கேவலமா?

ஒரு காலத்தில் கடைகளுக்குச் செல்வோர் கையில் துணிப்பை அல்லது பாத்திரங்கள் இருக்கும். பலசரக்குப் பொருட்களைக் காகிதத்தில் கட்டிக் கடைக்காரர்கள் கொடுப்பர். பாலிதீன் பை பயன்பாடு அரிதிலும் அரிது. மழைக்குத் தலை நனையாமல் காப்பதற்காக 'மழைக் காகிதம்' என்ற அளவில்தான் அதைப் பயன்படுத்தினோம். ஆனால் இன்றோ... பிறப்புமுதல் இறப்புவரை பாலிதீன், பிளாஸ்டிக் பொருள்கள் ஆக்கிரமித்துவிட்டன. கடைகளுக்கு வெறுங்கையுடன் சென்றால் போதும் ஏழெட்டு பாலிதீன் பைகளில் வீட்டுக்குத் தேவையான பொருட்களை அள்ளி வந்து



விடலாம். இது உணர்த்துவது 'யாருக்கும் பொறுப்பு இல்லை' என்பதைத்தான். பாலிதீன், பிளாஸ்டிக் பொருட்களால் தற்போதே பல கொடுமைகளை நாம் அனுபவிக்கிறோம். 'அடுத்த தலைமுறை என்ன செய்யும்?' என்ற பொறுப்புணர்வு புதைந்து போய்விட்டது. கடைக்குச் செல்லும்போது துணிப்பை, 'தூக்குச் சட்டி' எடுத்து செல்வோரைக் கேலி பேசும் 'கலி காலம்' இது. பாலிதீன், பிளாஸ்டிக் ஆக்கிரமிப்புக்கு எப்படி விடிவுகாலம் வரவைக்கலாம் என்பதை ஆடல் பாடல் வழியாக வீதிகளில் சென்று மக்களிடம் எடுத்துச் சொல்லினர் மாணவர்கள்.

பிளாஸ்டிக் ஷீட், டைனிங் டேபிளில் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் ஷீட், பிளாஸ்டிக் பேப்பர் பிளேட், கப், டம்ளர், தெர்மோகூல் கப், ஸ்டிரா, கேரி பேக், கொடி, பாலிபுரோபிலின் பேக் உட்பட 14 வகையான பிளாஸ்டிக் பொருட்கள் தடை செய்யப்ப.ட்டுள்ளன . மக்களுக்கு இதுகுறித்து பாடல்கள் வழியாக வீதிகளில் சென்று விழிப்புணர்வு ஏற்படுத்தபட்டது. சுற்றுச்சூழலுக்குக் கேடு ஏற்படுத்தாத துணிப்பைகள், மூங்கில் கூடைகளை மக்கள் பயன்படுத்த வேண்டும் என்று விழிப்புணர்வு நாடகங்கள் வாயிலாக விளக்கப்பட்டது.



# ஜம்முவில் தேடல்

- Ar. ரா. வித்யாலட்சுமி



இந்தியாவின் ஒவ்வொரு மாநிலத்திலும், வெவ்வேறு விதமான கட்டிடக்கலையிலை நம்மால் பார்க்க முடிகிறது. அந்தந்த ஊரின் தட்பவெப்ப அமைப்பும், புவியியல் அமைப்பும், கிடைக்கும் பொருட்களும், வந்து செல்லும் வணிகர்களும், உள்ளூர் கலைஞர்களும், பொருளாதார நிலையும், அரசர்களின் ஆர்வமும் கட்டிடகலையின் வளர்ச்சிக்கு பெரும் பங்கு வகிக்கிறது. தமிழகத்தில் ஒரு வகையில் கட்டப்படும் கோவிலோ, வீடோ, கேரளத்தில் வேறு விதத்திலும், மகாராட்டிரத்தில் வேறு வகையிலும், காஷ்மீரத்தில் வேறு விதத்திலும் அமைகிறது.

இதுவரை நாம் அதிகம் அறிந்திடாத ஆனால் பல அரிய வரலாற்று தரவுகளையும், கட்டிக்கலையின் கோணங்களையும் அறிந்துக்கொண்டோம் ஒரு பயணத்தில். ஜம்முவின் பயணமே மிக நீண்டு இருந்தது. கிட்டத்தட்ட இரண்டு, இரண்டரை நாட்கள் பயணம். புதிய ஊர்களில் எப்போதும் நம்மை பயமுறுத்துபவை மொழியும், உணவுமே. மற்றபடி பயணங்கள் இனிமையானவை.

ஜம்மு அந்த மலை முகட்டின் இந்த பக்கம் உள்ளது. அந்தப்பக்கம் காஷ்மீர். ஒரு மலை அந்த இரண்டு ஊர்களையும் பிரிக்கிறது, உணவு,தட்பவெப்ப சூழல், அமைப்பு, கட்டிடக்கலை எல்லாவற்றையும் மாற்றி உள்ளது.

ஜம்முவின் கட்டிடக்கலை பல வித கோவில்களையும், மசூதிகளையும், கோட்டைகளையும், அரண்மனைகளையும், பயண சத்திரங்களையும் கொண்டுள்ளது. வரலாற்று சிறப்பு மிக்க இவ்வூர் இந்தியாவின் பல பகுதிகளில் உள்ள ஊர்களின் கட்டிடக்கலை சிறப்பம்சங்களை தன்னகத்தே கொண்டுள்ளது. ஆரம்பம் முதலே இவ்வூர் இந்தியாவில் இருந்து பிற நாடுகளுக்கும், காஷ்மீரில் இருந்து இந்தியாவின் பிற மாநிலங்களுக்கும் செல்லும் வழி தடத்தில் அமைந்துள்ளதால் பல்வேறு வணிகர்கள் வந்து செல்லும் தலமாக இருந்துள்ளது. அதன் காரணமாக இது ஒரு மலை பிரதேசமாக இருந்தாலும் தனித்த ஊராக இயங்காமல், உலகின் பல்வேறு கலைகளை தன்னகத்தே கொண்டு வளர்ந்துள்ளது.

ஜம்முவின் கோவில்கள் கட்டிடக்கலை அமைப்பில் ஒரிசா, ஹிமாசலம், காஷ்மீரம், இந்திய-இஸ்லாமிய பாணியை ஒத்திருக்கிறது. இங்கு கோவில்களை கற்கள், செங்கற்கள், மரம் போன்ற பொருட்களை கொண்டு கட்டப்பட்டுள்ளன. அதே சமயத்தில் அரண்மனைகள், கோட்டைகள், பயணியர் தங்கும் மண்டபங்கள் போன்றவை கிரேக்க-ரோமானிய பாணி , இந்திய-இஸ்லாமிய பாணி மற்றும் ஐரோப்பிய பாணிய கொண்டுள்ளன.

ஜம்முவின் வரலாற்றை பார்க்கும் போது அது சிந்து சமவெளி நாகரிகத்தோடு, அதாவது 2500 -1750 பொது யுகத்திற்கு முந்தைய காலமாக உள்ளது. ஆனால் இதுவரை சிந்து சமவெளி காலத்தின் சின்னமாய் எந்த கட்டிடமும் ஜம்முவில் இந்திய தொல்லியல் துறையினரால் கண்டறியப்படவில்லை. ஆனாலும் சிந்துசமவெளிகே உண்டான சிகப்பு - கருப்பு பானை ஓடுகள், பாத்திரங்கள் , கோப்பைகள் , செம்மண் பொருட்கள், அன்புகள் மாண்டா , அக்னூர் போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. செனாப் ஆறு , ஹிமாச்சல பிரதேசத்தில்

இமயமலையின் பள்ளதாக்குகளில் ஆரம்பித்தாலும் அக்னூரில் மட்டுமே ஆறு சற்று சாந்தம் அடைந்து கடக்க ஏதுவாக உள்ளது.

இதன் காரணமாக இவ்வூரும், அதனை சுற்றி உள்ள இடங்களும் மர வாணிகத்தில் சிறந்து விளங்கியது. ஒரு படகுத்துறை அக்னூரில் இருந்திருக்கலாம் என்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். இந்த துறை மூலமாக மரப்பலகைகள் பிற இடங்களுக்கு கொண்டு செல்லப்பட்டுள்ளன. மேலும் ஹரப்பா நாகரீக மக்கள், சுட்ட செங்கற்களை கொண்டு தங்கள் வீட்டை கட்டியும், முகப்புகளை மரங்கள் கொண்டும் அலங்கரித்துள்ளனர். மரங்கள் மட்டுமல்லாது அக்னூரின் மண், செங்கற்கள் செய்யவும் ஏதுவாக உள்ளன.

ஆரியர்களின் படையெடுப்புக்கு பின்பு இந்திய துணைக்கண்டத்தின் வரலாற்றில் தொடர்ச்சியாக வடகிழக்கு பகுதி மக்களிடம் இருந்து, அலெக்சாண்டர், குசானர்கள் ஹூன் ,



முகலாயர்கள் என்று பல்வேறு படையெடுப்புகள் நிகழ்ந்தவண்ணம் இருந்தன.

இதன் காரணமாக அக்னூர் பலதரப்பட்ட கலாச்சாரங்களை கொண்ட கூட்டமைப்புகளால் ஒரு சிறந்த வளர்ச்சியடைந்த நகரமாக உருபெற்றது. இதுவரை குசானர்களின் நகர எச்சங்களாக நூறு தளங்களுக்கு மேல ஜம்முவில், தொல்லியல் துறையினரால் கண்டறியப்பட்டுள்ளன. செனாப் ஆற்றங்கரை ஓரமாக அதிக தடயங்கள் உள்ளன. கனிஷ்காபுரம்,ஹூஸ்காபுரம், ஜஸ்காபுரம் போன்ற ஊர்களும் குசான அரசர்களின் பெயர்களை தழுவியே இடப்பட்டுள்ளன. இங்கு செய்யப்பட்டுள்ள அகழ்வாய்வுகளும் குசானர் காலத்தில் காஷ்மீரத்தில் நடைபெற்ற புத்த சங்கங்களின் தடயங்களை தருகின்றன.

க்ரிமாச்சி பகுதியில் குசானர்களின் குடியிருப்புகளின் மிச்சங்கள் உள்ளன. எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டு கோவில்களும் , குடியுருப்புகளின் மிச்சங்களும் சமீபத்தில் நடந்த



அகழ்வாய்வில் கண்டுபிடித்துள்ளனர்.

ஜம்மு மற்றும் அதன் சுற்று புறங்களில் புத்த மதம் தழைத்ததற்கான தடயங்களை இந்திய தொல்லியல் துறை 2002-2005 ஆண்டுகளில் மேற்கொண்ட அகழ்வாய்வில் கண்டுபிடித்துள்ளது. மேலும் இவ்வாய்வில் அக்னூர் பொது யுகம் ஏழாம் நூற்றாண்டு வரையில் வாணிகத்தில் சிறந்து விளங்கியதையும் கண்டறிந்தனர்.

ஜம்முவின் கலாச்சார அட்டவணையை இவ்வகழ்வாய்வின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

குசானர்களுக்கு முந்திய காலம் (2nd -1st Century BC)
குசானர்களின் காலம் (1st -3rd Century AD)
குசானர்களுக்கு பிந்தைய குப்தர்களின் காலம் (4th -5th Century AD)
குப்தர்களுக்கு பிந்தைய காலம் (6th -7th Century AD)

குசானர்களின் காலத்தில் செங்கற்கள் கொண்டு ஸ்தூபிக்கள் கட்டப்பட்டுள்ளன. ஸ்தூபியின் உள்ளே கூழாங்கற்கள் நிரப்பப் பட்டுள்ளன. சுடுமண் பொம்மைகளின் தலைகள் பல இடங்களில் கிடைத்துள்ளன.

நான்காம் நூற்றைண்டை சேர்ந்தவையாக இவை இருக்கலாம் என்று கருதப்படுகிறது. அடுத்த இதழில் காந்தார கலைப்பள்ளியின் கட்டிடக்கலையை பற்றி பார்ப்போம். (தொடரும்...)

# சதீ

- பிரதிக் முரளி (ஆய்வு மாணவர்)

பொய்கையும் தீயும் ஓரற்றே !

“பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே !
போற்றுவோம் இஃதை எமக்கில்லை ஈடே”

என்று போற்றி பாட்டிசைத்த பாரதியின் பாரதம் கடந்து வந்த பல கோடி ஆண்டு வரலாறு வியக்கத்தக்கது. பற்பல பொற்காலம் கடந்தும், சமூக அவலங்கள் களைந்தும், தன் மக்களை பேணி அரவணைக்கிறாள் பாரத அன்னை.

“களையப்பட்டுவிட்டனவே” என்ற ஒரே வார்த்தையோடு பல பழைய பழக்கங்கள் மூடிவிடப்படுகின்றன. அப்படி அடிக்கடி பேச்சடிப்படாத பழக்கம்தான் உடன்கட்டை ஏறுதல் எனப்படும் “சதீ”.

சாத்திரக்கூற்றென்பர் சிலர், பேயர் செயல் என்பர் சிலர், பெண்டிரின் மாண்பென்பர் சிலர். எதுவாயினும், மங்கைக்கும் மரவிறகிற்கும் பேதமறிய பல நூறாண்டாயின நமக்கு.

சமூகத்தின் கண்ணாடி- இலக்கியம். இப்படிப்பட்ட பழக்கத்தை தீந்தமிழ் புறநானூறு எங்கனம் கையாளுகிறது என்பது இக்கட்டுரையின் ஆய்வு நோக்கம்.

புறநானூற்று பெதும்பை முத்துதிர்த்த செய்யுள் இது:

“பல் சான்றீரே பல் சான்றீரே
செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல் சான்றீரே
அணில் வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட
காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது
அடை இடைக் கிடந்த கை பிழி பிண்டம்
வெள் எள் சாந்தொடு புளிப் பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சி ஆகப்
பரல் பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்கு அரிது ஆகுக தில்ல எமக்கு எம்
பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்பு அற
வள் இதழ் அவிழ்ந்த தாமரை
நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே” -

(246- பாடியவர்: பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு)

விருப்பும் வெறுப்பும் கலந்த இந்த பாடல்வரிகள் ஒரு




படம் - கன்னட நாட்டில் ஒரு ‘சதீ-கல்’. உடன்கட்டை சென்ற ஒரு பெண்ணை தெய்வமாக ஒரு கல்லில் வழிபடுதல். அவளது தலையில் மலர்க்கிரீடம் தந்து, அவளை தெய்வமாக காட்டுகிறது. மேலும், கையை அவள் மேலே காட்டுகிறாள், சுவர்க்கத்தை நோக்கி. கையில் ஒரு எலுமிச்சம்பழம், தெய்வீகத்தை உணர்த்த.

(படம் நன்றி - திரு.தாமஸ் அலக்சாண்டர்)

பேதையின் கடைசி வாயுதிர்வுகள். தன்னைத்தானே மாய்த்துக்கொள்ளும் முன் தமிழ் பாடியவள் என்ற நினைவு உள்ளத்தை உருக்குகிறது .

அவள் தீயேகியதைப்பாடும் மதுரை பேராலவாயர், “நீர் வார் கூந்தல் இரும் புறம் தாழப் பேர் அஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித் தெருமரும் அம்ம” என்று வியக்கிறார் ! தனது கூந்தலில் நீர் சொட்டச்சொட்ட, கண்கள் துயரெய்தி, தனது கணவனின் பூதவுடல் எரியுமிடம் சென்றாள் அம்ம!

இப்படிப்பட்ட துயர் ஒரு நொடியில் வரவிருக்க, தென்னவன் தன்னகத்தாள் தமிழ்ப்பாடினாள் என்பது நெகிழ வைக்கிறது.

பாண்டியப்பெண்டு, தன்னை அரசாளச்சொல்லும் நபர்களை “சான்றீர்” என்று விளிக்கும் தொனியே மிடுக்காய் அமைகிறது. “நீர் சான்றோரா? என்னை செல் எனச்சொல்லாது, வாழச்சொல்லும் நீரா?” என்ற விளி வேற்றுமை கர்ஜ்ஜிக்கிறது. வெளிப்படையாக அடுத்த வரியில், “பொல்லாச்சூழ்ச்சி பல்சான்றீர்” என்று சாடியே விட்டாள். தொண்டையை அடைத்த துக்கத்தைப் பிளந்து வந்த தமிழ் வரி அது. அதன் ஆழம் ஆரறிவர் ?

“வெள்ளரி விதையை பிழிந்திட்டாற்போல், நெய்யில்லாத, பழைய சோற்றை பிழிந்த பிண்டமும், புளியிட்ட வேலைக்கீரையும், உப்பில்லாத எள் துவையலும் உண்டு, பாயின்றி கல்மேல் உறக்கம் பேண நான் வாழவும் வேணுமோ?” என்கிற ஏக்கத்தின் ஒலி “சான்றோர்” செவி கேட்டிலது போலும்.

இப்படிப்பட்ட வாழ்விற்கு அஞ்சிய மனமும், அரசபோக விருப்பும் தான் பாண்டியப்பெண் வீரசுவர்க்கம் ஏக காரணம் என்று வரலாறு நினைக்கும் என்று அஞ்சினளோ? அறியேன்! சாதுர்யமாய் அடுத்த வரி சமைக்கிறாள்,

“நன்குலர்ந்த கட்டைகளைக்கொண்டு எரியும் சிதையானது, எனது பெருந்தோள் கணவனோடு எரிகிறது. அது எனக்கு தாமரைப்பூத்த தடாகமாக காட்சியளிக்கிறது” என்று அழகாய் செந்தமிழ் மரபு வழுவா பாட்டிசைத்துப்போனதோர் தமிழை. அவளுக்கு அரசபோகமே தந்து, ஓலையும் தந்திருந்தால், அகமும் புறமும் பிரவகித்திருக்குமோ? தமிழ் கூறும் நல்லுலகம், பைந்தமிழ்ப்பாடிய கவிமணியாயினும் பிண்டமிட்டு, அஞ்சவைத்து, அஞ்சுவர்க்கம் ஏற்றுமோ ?

## வாசகர் விமர்சனம்




ஜூலை இதழ்

**வணக்கம்!!!!**

**முதலில் இச்செம்மையான பணி சிறக்க வாழ்த்துகள்...**

**பக்கம் எண் 10 வரும் போது சற்றே சிந்தித்தேன் என்னுடா இது இன்றும் விருத்தமெல்லாம் வைத்து பாட்டெழுதியுள்ளார்கள் யாருக்கு புரியும் என்று ஆனால் அதை தவிடுபொடியாக்கிய பக்கம் எண் 19ன் பணி வாழி! கவிஞர் வெண்கொற்றனிடம் கற்க ஆவலோடுள்ளோம்.**

**பக்கம் எண் 22 ஆகா கிராதகன் கதை செப்பும் தமிழகனின் பெருநிலத்தின் சட்டென முடிந்தது கவலையும் ஆர்வத்தூண்டலும்... காத்திருக்கிறேன் மேலும் பல இதழ்களுக்கு....**

**குறிப்பு. குறிப்பிடப்படும் இடங்களை சாமானியர் அடைவதற்கான வழியினை சிறு குறிப்பாகக் கொடுத்தால் பயணப்பாடு எளிதாகும்.**

**என்றும் அன்புடன்...**
**அன்பன். கோமதி சங்கர் சுந்தரம்**
**திருநெல்வேலி.**

# கவிதை இலக்கணம் கற்போம் -
## பாடம் 2 - அசை
**கவிஞர். வெண்கொற்றன்**

குற்றியலுகரம் புரிந்ததா? (முதல் பாடத்தை நன்றாகப் புரிந்துகொண்ட பின்பே இதற்கு வரவும். இதே விதியை அனைத்துப் பாடங்களுக்கும் பின்பற்றுதல் பொதுவாக நலம்!)

எழுத்தில் மீதம் இருப்பது ஒன்றுதான் - குற்றியலிகரம்.

இது எளிமையானது: குற்றியலுகரம் வந்து அதற்குப் பிறகு 'யகர'த்தில் தொடங்கும் சொல் வந்தால் குற்றியலுகரத்தின் 'உகரம்' 'இகர'மாக மாறிவிடும், அப்படி மாறிய இகரமே குற்றியலிகரம் (இதுவும் அரைமாத்திரை அளவே ஒலிக்கும்!)

நாடு - குற்றியலுகர இறுதி,
யாது - யகரமெய் தொடக்கம், இரண்டும் புணர்ந்தால்?

நாடு + யாது = நாடியாது (உ->இ ஆனதைக் கவனிக்க)

இந்த 'டி'-இல் உள்ள 'இ'-தான் குற்றியலிகரம் (எல்லா 'டீ'யில் விழும் எல்லா ஈ-யும் குற்றியலிகரம் அல்ல!)

கவனிக்க: தமிழின் அரிதான சில சொற்களில் புணர்ச்சி இல்லாமலே வரும் குற்றியலிகரமும் உண்டு: 'மியா' என்ற சொல்லில் ('கேண்மியா', 'சொன்மியா' என்று வரும் வினை வடிவங்கள்!) வரும் 'இ' குற்றியலிகரம். ஆனால் இவை பெரும்பான்மையும் வழக்கற்றுவிட்டதால் நாம் இவற்றைப் பற்றி அவ்வளவாக கவலைப்பட வேண்டாம் (இப்போதைக்கு!)

கு.உ, கு.இ எல்லாம் முடிந்ததா? எதற்காக இதில் தொடங்கினோம்? செய்யுள் (இலக்கணம் அமைந்த கவிதை) என்று வரும்பொழுது அதன் எழுத்துக்களின் எண்ணிக்கையும் அளவும் முக்கிய பங்கு வகிக்கின்றன. எழுத்துக்கள் ஒலிக்கும் கால அளவை (மாத்திரை) முன்பே பார்த்தோம். கு.உ, கு.இ ஆகியவை தமக்கு இயல்பான மாத்திரையிலிருந்து குறைந்து ஒலிப்பவை, எனவே இவற்றைச் செய்யுளில் கையாள்வதில் கவனம் தேவைஞ்

செய்யுளின் ஒவ்வொரு உயிரும் உயிர்மெய்யும் ஒரு எழுத்தாக கொள்ளப்படும், உயிர் இல்லாத மெய்கள் எண்ணப்படா ('உயிர்' 'மெய் [உடம்பு]' என்ற பெயரே எத்தனை ஆழ்ந்த அர்த்தத்தோடு அமைக்கப்பட்டுள்ளது பாருங்கள்!)

அதாவது செய்யுளைப் பொறுத்தவரை 'அம்மா' 2 எழுத்து, 'ஆமா'வும் 2 எழுத்து! அரை மாத்திரை அளவுள்ள மெய்கள் எண்ணப்படாததைப் போல, அரை மாத்திரை அளவுள்ள கு.உ, கு.இ ஆகியனவும் எழுத்தாகக் கொள்ளப்படா. ஆனால் அதற்கு ஒரு சின்ன விதி இருக்கிறதுஞ் என்ன?

குற்றியலுகரத்திற்குப் பிறகு உயிரெழுத்து வந்தால் அந்தக் கு.உ மெய்போல கொள்ளப்படும் (உண்மையில் அது மெய்தான், காரணம் உயிர்வந்தால் உகரம் போய்விடும்ஞ் பொறுமை, கீழே விளக்குகிறேன்ஞ்)

பொட்டு + இட்டான் = பொட்டிட்டான்
>> பொட்டு + இட்டான் => பொட்ட் + இட்டான்
(உயிரெழுத்து வந்தால் குற்றியலுகர 'உ' போய்விடும்!)*
>> பொட்ட் + இட்டான் => பொட்டிட்டான்
(உகரம் போனபின் நிற்கும் வல்லின மெய்யெழுத்தின் மீது வரும் உயிர் ஏறிக்கொள்ளும், இயல்பு புணர்ச்சி!)

*இவ்விதி கொஞ்சம் முக்கியமானது, இதை இன்னும் விளக்கமாக 'தளை'களைப் பற்றிப் பேசுகையில் பார்க்கலாம்!

தாக்கு + அணங்கு = தாக்கணங்கு (4 எழுத்து)
கொக்கு + ஆயிரம் = கொக்காயிரம் (4 எழுத்து)
வந்து + ஈந்தான் = வந்தீந்தான் (3 எழுத்து)
போட்டு + உடைத்தான் = போட்டுடைத்தான் (4 எழுத்து)
உண்டு + என்றான் = உண்டென்றான் (3 எழுத்து)
படகு + ஓட்டி = படகோட்டி (4 எழுத்து)

இதற்கு மாறாய், கு.உ-க்குப் பின் உயிர்மெய் வந்தால் (சொல்லின் முதலில் மெய்யெழுத்து வரவே வராது!) அது அப்படியே புணரும், அப்போது அது எழுத்தாகக் கொள்ளப்படும்ஞ்

போட்டு + கொண்டான் = போட்டுக்கொண்டான் (4 எழுத்து)
உண்டு + சென்றான் = உண்டுசென்றான் (4 எழுத்து)

சரியா?

எழுத்துக்கு அடுத்து அசை. அசைதல் என்றால் இயங்குதல். எழுத்துக்கள் ஒன்றோடு ஒன்று பொருந்தி இயங்குவது அசை. ஆங்கிலக் கவிதை இலக்கணத்தில் 'Syllable' என்பதற்குச் சமானமான ஒரு விஷயம் இந்த 'அசை'. (வடமொழி பண்டைய

கிரேக்க செய்யுளியல்களிலும் இதற்கு நிகரான அமைப்புகள் உண்டு!)

'அசை'யைப் பலவிதமாக விளக்கலாம், நான் என் வழியில் செய்யப் போகிறேன் (என் வழி மொழியியல் வழி! Linguistic approach!)

ஒரு சொல்லை எழுத்து எழுத்தாக எழுதினாலும், அதனை உச்சரிக்கும் போது மொத்தமாகத்தான் உச்சரிக்கின்றோம் (படிப்பதும் அப்படித்தான், எழுத்துக்கூட்டிப் படிப்பதில்லை!)

'அம்மா' என்ற சொல்லை 'அ-ம்-ம்-ஆ' என்று உச்சரிப்பதில்லை நாம், 'அம்மா' என்று ஒரே மூச்சில் சொல்லிவிடுகிறோம், சரியா? இதையே இன்னும் கொஞ்சம் கவனித்துப் பார்த்தால் சிறுசிறு இடைவெளிகள் விடுகிறோம் என்பது தெரியும்ஞ் அதாவது 'அம்-மா' என்று இரண்டு கூறுகளாய் அச்சொல்லை நாம் உச்சரிப்போம்ஞ் இந்த இரண்டு கூறுகளே இரண்டு அசைகள்!

'அம்' ஒரு அசை, 'மா' ஒரு அசை! (எழுத்துக்களின் இந்த உச்சரிப்புக் கூட்டணிதான் 'அசை'! Syllable!)

அசைகளை எப்படி அடையாளம் காண்பது?

ஒரே சிறந்த வழி 'உச்சரித்து'ப் பார்ப்பதுதான்.

வேண்டுமானால் சில குறுக்குவழிகள்^ சொல்லித்தரலாம்:
அ) சொல்லின் இடையில் எங்கெல்லாம் மெய்யெழுத்து வருகிறதோ அங்கெல்லாம் ஒரு அசை முடியும். (அம்மா - 'அம்'-வரை ஒரு அசை!)
ஆ) இரண்டு குறில்கள் அடுத்தடுத்து வந்துவிட்டால் அது ஒரு அசை ('தகடு' - 'தக' ஒரு அசை, மிச்சமிருக்கும் 'டு' ஒரு அசை)
இ) குறில் நெடிலும் ஒரு அசை ('விடாது' - 'விடா' ஒரு அசை!)
ஈ) நெடில் தனியாக வந்தால் ஒரு அசை ('நாடு' - 'நா' ஒரு அசை, மீதி 'டு' ஒரு அசை!)

^'குறுக்குவழி' என்ற சொல்லை நான் 'Short-hand', 'Thumb Rule', 'Short Cut' போன்ற பொருளிலேயே இங்கே கையாள்கிறேன், 'கெட்ட வழி' என்ற பொருளில் அல்ல!

அசைகள் எப்படியெல்லாம் அமையலாம்?

1. குறில் மெய் - 'அம்' (அம்-மா)
2. குறில் குறில் - 'தக' (தக-டு)
3. குறில் குறில் மெய் - 'உனக்' (உனக்-கு)
4. நெடில் - 'நா' (நா-டு)
5. நெடில் மெய் - 'காட்' (காட்-டு)
6. குறில் நெடில் - 'விடா' (விடா-து)
7. குறில் நெடில் மெய் - 'கொடாக்' (கொடாக்-கண்-டன்)

8. குறில் (இது சொல்லின் முதலிலோ இடையிலோ வராது, இறுதியில் ஒரே ஒரு குறில் மட்டும் மிச்சமிருந்தால் அது ஒரு அசையாகிவிடும், மேலே உள்ள எடுத்துக்காட்டுகளில் 'டு', 'கு', 'து' போல!)

ஒரு சொல்லின் அசைகளை அடையாளம் கண்டுகொள்வது செய்யுளை இயற்ற/அலச மிகத் தேவையான திறன். மேலே அ-ஆ-இ-ஈ என்று சொன்ன வரிசையில் பழகுங்கள். அதாவது, முதலில் மெய் வரும் இடமெல்லாம் ஒரு அசை, பின் இரண்டு குறில் வருவது, பின்னர் குறில் நெடில் - இப்படி பழகினால் எளிது:

கேட்டுக்கொண்டிருந்தான் - இதனை அசை பிரிப்போமா?

ட், க், ண், ந், ன் - இவை இருக்கும் இடமெல்லாம் ஒரு கோடு போடுவோம், இதெல்லாம் ஒரு அசை:

கேட்/ டுக்/ கொண்/ டிருந்/ தான் - அவ்வளவுதான்!

இதிலே என்னென்ன அமைப்புகள் எல்லாம் உள்ளன? (மேலே கொடுத்துள்ள எண்முறைப்படி):

/கேட்/ - 5
/டுக்/ - 1
/கொண்/ - 1
/டிருந்/ - 3
/தான்/ - 5

சரியா? இன்னொரு சொல்: நதியோடுநீசெலுத்து

முதலில் 'நதி' என்ற இரண்டு குறில்கள், ஒரு அசை
/நதி/
அடுத்து 'யோ' நெடில், ஒரு அசை
/யோ/
அடுத்து /டுநீ/ குறில் நெடில், ஒரு அசை
/டுநீ/
அடுத்து /செலுத்/ குறில் குறில் மெய், ஒரு அசை
/செலுத்/
மீதி இருக்கும் 'து' ஒரு அசை
/து/
அவ்வளவுதான்!
நதியோடுநீசெலுத்து => நதி/ யோ/ டுநீ/ செலுத்/ து

/நதி/ - 2
/யோ/ - 4
/டுநீ/ - 6
/செலுத்/ - 3

/து/ - 8

புரிந்ததா? (இல்லை என்றால் பொறுமையாக பேப்பர் பேனாவுடன் இன்னும் ஒரு முறை படித்துப் பாருங்கள், அப்படியும் பிடிபடவில்லை என்றால் என்னைத் தொடர்புகொள்க!)

வீட்டுப்பாடம்(? ஹா ஹா!) தருவதற்கு முன் ஒரே ஒரு செய்தி: இந்த அசைகளுக்குப் பெயர் வைத்துள்ளனர் நம் முன்னோர், அட!

‘நேர்’ ‘நிரை’ என்று பெயர். (மெய்யெழுத்தைக் கணக்கிடாமல்) அசையில் ஒரே ஒரு எழுத்து இருந்தால் அது ‘நேர்’, இரண்டு இருந்தால் அது ‘நிரை’ (இந்தப் பெயர்களே அந்தந்த அசைக்கு எடுத்துக்காட்டாய் அமைவதைக் கவனிக்க, இது தற்செயல் அல்ல!)

1, 4, 5, 8 - நான்கும் நேரசைகள் (’உன்’, ‘நீ’, ‘தூள்’, ‘து’)
2, 3, 6, 7 - நான்கும் நிரையசைகள் (’பகு’, ‘சினம்’, ‘நிலா’, ‘பளார்’)

இனி பயிற்சி: (வேறென்ன, கீழ் காணும் சொற்களை அசை பிரிக்கவும்! நேர், நிரை என்று குறிப்பிடவும்)

எ-டு.: திருவள்ளுவர் - திரு/வள்/ளுவர் - நிரை/நேர்/நிரை

நீ
நான்
நிலா
காற்று
ஆழ்ந்த
ஆகாயம்
இடபாரூடர்
சித்தமெலாம்
தேர்ந்தெடுத்த
வண்ணமயம்
எழுத்தெல்லாம்
பகற்றவச்சிறிதே
அக்கினிக்குஞ்சொன்று
கொங்குதேர்வாழ்க்கை
உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்

[விருப்பமும் நேரமும் இருந்தால் ‘திருக்குறள்’ ‘புறநானூறு’ ஆகிய நூல்களில் இருந்து சொற்களைத் தேர்ந்தெடுத்து அசை பிரித்துப் பார்க்கவும்ஞ் நீங்கள் பயின்றதை எனக்கு அனுப்பிவைத்தால் சரியா தவறா என்று சொல்ல நான் தயார்!]

அடுத்த பாடம்: சீர்

அடுத்த பாடத்தின் இறுதியில் நீங்கள் உங்கள் முதல் செய்யுளை இயற்றப் போகிறீர்கள்... ஆயத்தமாகுங்கள்!
(தொடரும்...)

----------

க.இ.க. - அசை - பயிற்சி விடைகள்:

நீ/ - நேர்
நான்/ - நேர்
நிலா/ - நிரை
காற்/ று/ - நேர்/நேர்
ஆழ்ந்/ த/ - நேர்/நேர்
ஆ/ கா/ யம்/ - நேர்/நேர்/நேர்/
இட/ பா/ ரூ/ டர்/ - நிரை/நேர்/நேர்/நேர்
சித்/ தமெ/ லாம்/ - நேர்/நிரை/நேர்
தேர்ந்/ தெடுத்/ த/ - நேர்/நிரை/நேர்
வண்/ ணம/ யம்/ - நேர்/நிரை/நேர்
எழுத்/ தெல்/ லாம்/ - நிரை/நேர்/நேர்
பகற்/ றவச்/ சிறி/ தே/ - நிரை/நிரை/நிரை/நேர்
அக்/ கினிக்/ குஞ்/ சொன்/ று/ - நேர்/ நிரை/நேர்/நேர்/நேர்
கொங்/ குதேர்/ வாழ்க்/ கை/ - நேர்/நிரை/நேர்/நேர்
உல/ கெலா/ முணர்ந்/ தோ/ தற்/ கரி/ யவன்/ - நிரை/நிரை/நிரை/நேர்/நேர்/நிரை/நிரை .

**மின்னிதழ் தொடர்பான உங்கள் கருத்துக்களை எங்களுக்கு கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்**

feedback@heritager.org



# பூரியின் ரதயாத்திரை

- பொற்செல்வி

பல நூற்றாண்டுகளுக்கு முன் ஒருநாள். ஒடிசாவின் கருப்புக் கண்மணி ஜெகந்நாதரின் தேரோட்டத் திருவிழாவிற்காகப் பூரியே அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது.

திருவிழாவைக் காண்பதற்காகப் பூரி மன்னரின் மனங்கவர்ந்த காஞ்சி இளவரசி பத்மாவதியும், மன்னரும் வந்திருக்கிறார்கள். பழங்காலத்திலிருந்தே தமிழ்நாட்டிற்கும், ஒடிசாவிற்கும் இடையே வணிகம், கலை, கலாச்சாரத் தொடர்பு கடல் வழியாக இருந்திருக்கிறது. அடுத்து திருமணமும் நடக்கவிருக்கிறது என்பதால் ஊரே கலகலப்பாக இருந்தது.

காஞ்சி மன்னரும், இளவரசியும் தமிழ் நாட்டுக் கோபுரங்களிலிருந்து மாறுபட்டு, குறுகலாக, கருவறையின் மேல் எழுப்பப் பெற்றிருந்த உயரமான விமானத்தையும், சதுரமாக, பிரமிடு வடிவக் கோபுரங்களுடன் கட்டப் பட்டிருந்த முக மண்டபம், பிரசாதங்கள் சமர்ப்பிக்கப் படும் போக மண்டபம், நடன மண்டபம் ஆகியவற்றைப் பார்த்து வியந்து கொண்டிருந்தார்கள். சற்றே செந்நிற, மெதுவகை மணற் கற்களால் கட்டப் பட்டிருந்த அவற்றின் வடிவமைப்பையும், வெளிப்புறம் ஒரு இடம் கூட விடாமல் செதுக்கப் பட்டிருந்த சிற்பங்களும் கவின்கலை நிறைந்த காஞ்சியிலிருந்து வந்தவர்களையே கிறங்கடித்துக் கொண்டிருந்தன.

கோயிலின் முன்பிருந்த பரந்த வீதியில் புதிதாகச் செய்யப்பட்ட மூன்று பெரிய தேர்கள் நின்று கொண்டிருந்தன. பெரிய மரச்சக்கரங்கள் மேல் சதுரமான மர மேடை. அதன் மேல் ஒடிசாவின் கோபுரங்கள் போலவே, தேரின் மேற் பகுதியும் உயரமாக இருந்தது. கண்ணைப் பறிக்கும் பல வண்ணத் துணிகளால் அலங்காரம்.

திருக்கோயிலின் மூலமூர்த்திகளான வெண்ணிற பலராமர், மஞ்சள் நிற சுபத்திரை, கருநிற ஜெகந்நாதர் ஆகியோர் தேரில் எழுந்தருளி விட்டனர். மரத்தால் உருவாக்கப்பட்டு, உருண்டையான கண்கள், மூக்குடன், அவயவங்கள் இல்லாமல் இருந்த வித்தியாசமான மூர்த்திகளையும், மூலவரே வீதியுலா வரும் அதிசயத்தையும் ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள் இளவரசி.

மக்கள் "தேர் அதன் சக்கரங்கள், வடங்கள், அந்தப் பெரிய வீதி எல்லாம் அந்த நேரத்தில் இறைவனிடம் ஒன்றுபட்டு விடுகின்றன. அப்பொழுது தேர், அதன் வடம் இவற்றைத் தொடுவதே தவம், வேள்வி செய்வதால் வரும் பலனைக் கொடுக்கும் " என்ற பொருளமைந்த பிரபல ஒரிய மொழிப் பாடலைப் பாடியும், ஆடியும் பக்தி வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தனர்.

" கஜபதி ராஜா வருகிறார்" முழக்கங்கள் கேட்டதும், காஞ்சி மன்னரும், இளவரசியும் ஆவலுடன் நோக்கினர். மன்னரும் வந்தார், தெருக்கூட்டும் துப்புரவுப் பணியாளர் போல் உடையணிந்து தங்கப்பூண் பூட்டிய துடைப்பத்தால் தேர், அதன் முன்புறம் இருந்த வீதியைப் பக்தியுடன் சுத்தப் படுத்தி, வாசனைத் திரவியங்கள் கலந்த நீரையும் தெளித்தார்.

மன்னனாக இருந்தாலும் இறைவன் முன் அடித்தொண்டனே. ஆண்டவன் முன் அரசனும் அடிமையும் ஒன்றே என்பதைக் காட்டும்,

காலங்காலமாக நடந்து வரும் “சேர பஹாரா” என்ற சம்பிரதாயச் சடங்கு நிகழ்ச்சியாகும் அது.

ஆனால் காஞ்சி வேந்தரோ கொதித்தெழுந்தார். தெரு கூட்டும் ஒருவனுக்குத் தன் மகளைக் கொடுப்பதா என்று, இளவரசியையும் வலுக்கட்டாயமாக அழைத்துக் கொண்டு காஞ்சிக்குத் திரும்பி விட்டார்.

நிகழ்ந்ததை அறிந்த பூரியின் மன்னனும் வெகுண்டெழுந்தான். காஞ்சியின் மீது படையெடுத்தான். வென்றான். காஞ்சியிலிருந்து விநாயகர் சிலையையும் வெற்றிச் சின்னமாகக் கவர்ந்து சென்றான். தன்னைத் தெரு கூட்டுபவன் என்று இழித்துரைத்த மன்னரின் மகளை ஒரு துப்புரவுத் தொழிலாளிக்கே மணமுடிப்பேன் என்று சூளுரைத்துச் சிறையெடுத்தான். ஆனாலும் காதலர்களால் ஒருவரையொருவர் மறக்க முடியவில்லை.

ஆயிற்று. அதற்குள் அடுத்த ஆண்டு ரத யாத்திரையும் வந்து விட்டது. பூரி அரசனும், இளவரசியும் தங்கள் நேசத்தை மறக்க முடியாமல் தவிப்பதைக் கண்டார் ஒரு நல்ல அமைச்சர்.

அரசர் துப்புரவுத் தொழிலாளியாக ரதத்தையும், வீதியையும் சுத்தம் செய்து கொண்டிருக்கும் போது, இளவரசியை அழைத்து வந்து, “ தற்பொழுது தாங்களும் தெரு கூட்டுபவன் தானே! அதனால் தாங்களே இவளைத் திருமணம் செய்யுங்கள்” என்றார் அமைச்சர். சபதத்திற்கும் பங்கமில்லாமல், பகையும் மறைந்து எல்லாம் மங்கலமாய் முடிந்தது (என்று கதை). திருமணத்தின் போது, இளவரசிக்கு விருப்பமான காஞ்சிபுரத்துப் பிள்ளையாரையும் காஞ்சி மன்னர் பரிசளித்தார் என்றும் கூறப்படுகிறது.

எது எப்படியோ காஞ்சிகணேஷ் பூரி ஜெகந்நாத் கோயிலில் குடியிருக்கிறார். சில மாதங்களுக்கு முன், காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலில் மேற் பூச்சைச் சுத்தப் படுத்திய போது, அரசரும் அரசியும் பூரி ஜெந்நாதரைத் தொழும் பண்டைய ஓவியம் வெளிப்பட்டது என்று நாளிதழ்களில் செய்தி வந்தது.. பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே காஞ்சிக்கும், பூரிக்கும்தொடர்பு இருந்திருக்கிறது; திருமண உறவும் நிகழ்ந்திருக்கிறது.

ரதயாத்திரையுடன் தொடர்புடைய கதையைப் பார்த்தோம். அதைப் பற்றிய செய்திகளையும் பார்ப்போம்.

கடோபநிடதத்தில் உடம்பே தேர்; உயிரே அதில் அமர்ந்திருக்கும் தெய்வம்; புத்தியே மனம், எண்ணங்களைக் கட்டுப்படுத்தும் தேர்ப்பாகன் என்று கூறப்பட்டுள்ளது. இதன் குறியீடாகத் தேர்த்திருவிழா கொண்டாடப் பட்டிருக்கலாம்.

மேலும் தாழ்த்தப் பட்டவர்கள் கோயிலுக்குள் நுழைய முடியாத அக்காலத்தில், அவர்களும் கடவுளைத் தரிசித்து அருள் பெறுவதற்காகவும் ஏற்படுத்தப் பட்டிருக்கலாம்.

ஒடிசாவின் கவிஞரும், மகானுமான சாலபேகா, “கருப்புச் செல்லம் காட்டு யானை போல் ஆடி அசைந்து, பெரிய வீதிக்கு வந்து தேரில் பவனி வருகிறார். அடியார்களின் கொடிய மன்னிக்க முடியாத குற்றங்களையும் மன்னித்து அருள்கிறார்” என்று பாடுகிறார்.

ஸ்கந்த புராணத்தில் ரதயாத்திரை சென்று குண்டிச்சா கோயிலில் இருக்கும் இறைவன் ஆயிரம் அசுவமேத யாகம் செய்த பலனைத் தருகிறார் என்று கூறப் பட்டுள்ளது.

பிரம்ம புராணம், பத்ம புராணம் இவையும் ரதயாத்திரை பற்றி விரிவாகக் கூறுகின்றன. கங்க வம்ச மன்னர்கள் கி பி 1150ம் ஆண்டில் கோயிலைக் கட்டி முடித்த போதே ரத யாத்திரை சிறப்புடன் நடை பெற்றிருக்கிறது.

இந்துக்களின் திருவிழாக்களில் இந்த ரத யாத்திரையே மேற்கத்திய உலகிற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னதாகவே தெரியப்பட்ட ஒன்றாகும்.

Friar Odoric of Porplenone என்பவர் 1316 முதல் 1318 வரை இந்தியாவில் பயணம் செய்திருக்கிறார். அவர் எப்படிச் சிலைகளை ரதத்தில் ஏற்றினார்கள், அரசன், அரசி, மக்கள் அனைவரும் சேர்ந்து ஆடல், பாடலுடன் தேவாலயத்திலிருந்து ( கோயிலைச் சர்ச் என்று குறிப்பிட்டிருக்கிறார்) இழுத்து வந்தார்கள் என்று எழுதியிருக்கிறார்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் பயணம் செய்த சில ஐரோப்பியர்கள், ரதயாத்திரையின் போது மக்கள் கூட்டத்தில் தேரின் பெரிய சக்கரங்களால் எதிர்பாராத வண்ணம் நசுக்கப் பட்டார்கள்; சில தீவிர பக்தர்கள் தேர்ச் சக்கரங்களின் முன் பாய்ந்து உயிரை மாய்த்துக் கொண்டார்கள் என்றெல்லாம் எழுதியிருக்கிறார்கள். மக்களின் பக்திப் பரவச உச்ச நிலை அவர்களை ஆச்சர்யப்பட வைத்திருக்க வேண்டும்.

இவையெல்லாம் சேர்ந்து “தவிர்க்க முடியாத மாபெரும் சக்தி”, “வெறியர்களால் நிகழ்த்தப் பெறும்செயல்” போன்ற பொருள்களைக் குறிப்பிடும்

"juggernaut" என்ற புது ஆங்கில வாரத்தையே உருவானது. பழைய ஓவியங்களில் ஜெகந்நாத் கோயில் "Juggernaut Temple" என்றே ஆங்கிலத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

ஒடிசாவின் மழைக்காலத்தில் ஆஷாடா மாதத்தில் _ ஜுன் அல்லது ஜுலை மாதத்தில் இத்திருவிழா நடைபெறுகிறது. ஒவ்வொரு ஆண்டும் மிகப் பெரிய சக்கரங்களுடன் புதிய ரதங்கள் குறிப்பிட்ட சில மரங்களால் செய்யப் படுகின்றன. மகாநதிக் கரைக் காடுகளிலிருந்து சுமார் 600 மரங்களிலிருந்து 400 சதுர மீட்டர் அளவில் மரங்கள் பயன்படுத்தப் படுகின்றன. செய்யும் தச்சர்கள், வண்ணம் தீட்டுவோர், ஓவியங்களாலும், வண்ணத் துணிகளாலும் அலங்கரிப்போர் _ அனைவரும் பரம்பரை உரிமையுடன், வழிவழியாகச் செய்யப் பட்ட முறையிலேயே, எளிய கருவிகளை வைத்து, பளீரென்ற சிவப்பு, மஞ்சள், பச்சை, கருப்பு வண்ணங்களுடன் செய்கின்றனர்.

இரண்டு மாதங்களுக்கு முன்பு அட்சய திருதியை அன்று தேர் செய்யும் பணி சில சடங்குகளுடன் ஆரம்பமாகிறது.அரசரின் மாளிகைக்குச் சென்று, அனுமதி பெற்று, விரதமிருந்து செய்கின்றனர். கோயில் விமானங்கள் போலவே குறுகலாக, உயரமாகத் தேரின் மேற்பகுதி விமானங்கள் அமைக்கப் படுகின்றன.

நந்தி கோசா என்பது ஜெகந்நாதரின் தேராகும். 45 அடி உயரத்துடன், 7 அடிவிட்டமுடைய 16 சக்கரங்களுடன், 45 அடி அகலத் தேர்த் தட்டுடன் உள்ளது. கிருஷ்ணனாகவே ஜெகந்நாத் பாவிக்கப் படுவதால், அவரது பீதாம்பரத்தின் பொன்னிற மஞ்சள் கோடுகளுடன் சிவப்புத் துணியில் விமானப் பகுதி அலங்கரிக்கப் படுகிறது. இந்த ரதத்தின் கொடியின் பெயர் திரைலோக்ய மோகினி. கருடனால் காக்கப்படும் இத்தேரின் சாரதி தாருகாவின் உருவமும் மரத்தால் செய்யப் பட்டு, பக்கவாட்டில் அமைக்கப் படுகிறது. சங்கா,பாலகா, சுவேதா, ஹர்டஷா என்ற வெண்ணிறக் குதிரைகளும், சங்கசூடா என்ற பெயருடன் தேர் வடமும் அமைக்கப் படுகின்றன.

தலத்வாஜா பலபத்திரரின் ரதமாகும். 44 அடி உயரத்தில், 14 சக்கரங்களுடன் சிவப்பு பச்சை வண்ணத் துணிகளால் அலங்காரம். வாசுதேவரால் காக்கப்படும் இத்தேரின் கொடி யுனானி ஆகும். சாரதி மாதலி. டிப்ரா, கோரா, டிகாஸ்ராமா, சுமானவா என்ற கருப்பு நிறக் குதிரைகளுடன், பாசுகி தேர்வடத்துடன் உள்ளது.

தர்படாலானா என்ற சுபத்ராவின் தேர் 43 அடி உயரத்தில், 12 சக்கரங்களுடன், சக்தி வழிபாட்டுக்கே உரிய கருப்பு, சிவப்பு வண்ணத்தில் செய்யப் படுகிறது. ஜெயதுர்காவால் காக்கப்படும் இத்தேரின் கொடி நடம்பிகா, சரரதி அர்ஜுனா. ரோசிகா, மோசிகா, ஜிலா, அபராஜிதா என்ற சிவப்புக் குதிரைகள், வடம்

ஸ்வர்ணசூடா.

இவைகளுடன் ஒவ்வொரு தேரைச் சுற்றிலும் மரத்தால் செய்யப்பட்டு, வண்ணங்கள் தீட்டப் பட்ட ஒன்பது பார்ஸ்வ தேவதைகள் அமைக்கப் படுகின்றன. ஜெகந்நாத் தேரில் வராகா, கோவர்த்னா, கிருஷ்னா, கோபிகிருஷ்னா, ந்ருசிங்கா, ராமா, நாராயணா, திரிவிக்ரமா, ஹனுமான், ராத்ரா போன்ற தேவதைகளும்,

கணேஷ்,கார்த்திகேயா, சர்வமங்களா, ப்ராலம்பரி,ஹலாயுதா, மிருத்யுன்ஜயா, நடம்வரா, முக்திஸ்வர், சேஷதேவா ஆகியோர் பலதேவரின் தேரிலும்,

சண்டி, சாமுண்டா, உக்ரதாரா, வன்துர்கா, சூலிதுர்கா,வராகி, சியாமாகாளி, மங்களா, விமலா ஆகியோர் சுபத்ராவின் தேரிலும் இடம் பெறுகின்றனர்.

ஒவ்வொரு தேரிலும் இடம் பெறும் பரிவார தேவதைகளின் பெயர்கள் ஜெகந்நாத் திருமால் வடிவமாகவும், பலபத்ரர் சிவ அம்சமாகவும், சுபத்ரை சக்தி அம்சமாகவும் வழிபடப் படுவதைக் காட்டுவதுடன், ஒடிசாவில் பழங்காலத்திலிருந்து வைணவம், சைவம், சாக்தம் மூன்றும் இணைந்து விரவி இருந்த நிலையையும் காட்டுகின்றது.

ரதயாத்திரைக்குப் பலநாட்கள் முன்னதாகவே கோயிலில் திருவிழா ஆரம்பமாகிறது. “சந்தன் யாத்ரா” என்ற சந்தனத் திருவிழாவில் மதன்மோகனா, ராமகிருஷ்னா ஆகிய உற்சவர்களுடன் நரேந்திரா குளத்தில் தெப்போற்சவம் நடைபெறுகின்றது. அவர்களுடன் பஞ்சபாண்டவர் எனப்படும் பூரியின் ஐந்து முக்கிய சிவன் கோயில்களின் மூர்த்திகளும்கலந்து கொள்கின்றனர். குளத்தின் நடுவில் உள்ள மண்டபத்தில், சந்தனம், வாசனைத் திரவியங்கள், மலர்களால் நிரப்பப் பெற்ற கல்தொட்டியில் திருமுழுக்கு நடைபெறுகின்றது.

அத்திருவிழாவின் இறுதியில் 108 முறை தங்க கலச நீரால் “ஸ்நான யாத்ரா” எனப்படும் திருமுழுக்கு செய்யப்படும். அதன் பின் இரண்டு வாரங்கள் மூர்த்திகளுக்கு உடல் நலமில்லை என்று தனியாக வைக்கப் படுகின்றனர். அப்பொழுது ஒடிசாவின் பட்டசித்ராவால் ஆன திரையையே தரிசனம் செய்ய முடியும்.

வேர்கள், இலைகள், பெர்ரி பழங்கள் மட்டுமே நைவேத்தியம் செய்யப் படுகின்றன. “அனாசாரா” என உள்ளூர் மக்கள் கூறும் இந்த நேரத்திலும், ஸ்நான யாத்திரை, ரதயாத்திரையிலும் தைத்யபதிகள் அல்லது தைத்யாக்கள், இறைவனுக்குப் பணி செய்யும் உரிமை உள்ளவர்கள். இவர்கள் நீலமாதவனைக் கானகத்தில் காண உதவிய மலைவாசிகளின் அரசன் விஸ்வாஸுவின் மகள் லலிதா, வித்யாபதி என்ற அந்தணக் குருக்களின் வழி வந்தவர்கள். இப்படி ஜெகந்நாத் வழிபாட்டில் மலைவாழ் மக்களின் வழிபாட்டுக்கூறுகளும் பொதிந்து கிடக்கின்றன.

ரதயாத்திரைக்கு முன்னால் “நவஜாபனா” _ இளமையைப் புதுப்பிக்கும் சடங்கு நடக்கிறது. மூர்த்திகளுக்குப் புது வண்ணம் தீட்டப் படுகின்றது. யாத்திரைக்கு முதல் நாள் கண் திறக்கும் “நேத்ரோத்ஸவா” சடங்கு நடந்து, நடைபெறும் தரிசனத்திற்கு மக்கள் வெள்ளம் அலை மோதும்.

இந்தச் சடங்குகளும், “நவகளேபரா” _ மூர்த்திகளைப் புதுப்பிக்கும் சடங்குகளும், முற்காலத்தில் படையெடுப்பின் போது பின்னப் பட்ட மூர்த்திகளைச் சீர்ப்படுத்தி, புதுப்பித்ததின் தொடர்ச்சியாக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

யாத்திரையின் போது மூல மூர்த்திகளே ரதத்தில் செல்கின்றனர். இதுவும் மற்ற கோயில்களில் இல்லாத சிறப்பம்சமாகும்.

மூவரும் சுதர்சனருடன் கோயிலிலிருந்து தேருக்குச் எழுந்தருளுவதே “பஹண்டி” என்ற விரிவான சடங்காகும். வெள்ளை, சிவப்புத் தாமரை மலர்கள், இலைகளால் செய்த பெரிய, அரை வட்ட வடிவ தலை அலங்காரங்களுடன் கண்டா, ககாலி, டெலிங்கி போன்ற தாள வாத்தியங்கள் முழங்க, யானை போல் அசைந்து அசைந்து செல்கிறார். கோயிலை விட்டு வெளியுலகைப் பார்க்கும், அத்தை வீட்டிற்குச் செல்லும் மகிழ்ச்சியில் ஆடி வருகிறாராம். மக்கள் தங்கள் கருப்புக் கண்மணி ஆடி அசைந்து வருவதைக் கண்டு பக்திப் பரவசத்தின் உச்சிக்கே சென்று விடுகின்றனர்.

கோயிலின் சிம்மத்துவாரா வாயிலின் முன் படாதண்டா _ பெரிய வீதியில் பலபத்திரா, சுபத்ரா, ஜெகந்நாத் ரதங்கள் வரிசையாக நிற்கின்றன. ரதத்தின் தேவதைகளுக்குப் பூஜை முடிந்த பின், மூவரும் தேரில் எழுந்தருளுகின்றனர். பூரியின் கஜபதி ராஜா, ரதங்களைத் தங்கப் பூண் கொண்ட துடைப்பம், வாசனைத் திரவியங்கள் கலந்த நீரால் சுத்தம் செய்யும் “சேரபஹாரா” சடங்கு நடைபெறுகிறது. ரதங்கள் திரும்பி வரும் போதும் இச்சடங்கு மறுபடி செய்யப்படுகிறது.

முதலில் பலபத்திரர், பின் சுபத்ரை, ஜெகந்நாத் ரதங்கள் மக்கள் வெள்ளத்தினூடே பக்திப் பரவசத்துடன் இழுத்துச் செல்லப் படுகின்றன. படாதண்டாவில் சுமார் 3 கி.மீ. தூரம் பவனித்து

குண்டிச்சா மந்தீர், மாஸிமா மந்தீர் என்றெல்லாம் அழைக்கப்படும் கோயிலுக்குச் சென்று 9 நாட்கள் தங்குகின்றனர். இக்கோயில் பூரி ஜெகந்நாத் கோயிலைக் கட்டிய அரசன் இந்திரத்தூய்மனாவின் அரசி குண்டிச்சாவால் கட்டப்பட்டது என்று கூறப் படுகிறது.

பின் திரும்பி வரும் "பகுட யாத்ரா" நடைபெறுகிறது. எளிய மக்களின் இனிப்பு வகையான 'போடபித்தா' வரும் வழியில் கருப்புக் கண்மணிக்குப் படைக்கப் படுகிறது.

திரும்பி வந்து, கோயிலின் முன் ரதத்தில் "சுன பேஷா" எனப்படும், மிக அதிகமான தங்க அணிமணிகளால் ஆன ராஜ அலங்காரத்தில் மூன்று மூர்த்திகளும் காட்சி அளிக்கின்றனர். இத்தரிசனம், தங்களது தீய கர்மாவிலிருந்து விடுவிக்கும் என்று மக்கள் நம்புகினாறனர்

யாத்ரா, சுனபேஷா எல்லாம் முடிந்து, சுதர்சனர், பலபத்ரர், சுபத்ரா உள்ளே செல்கின்றனர். கோயில் வாசல் கோபுரத்தின் மேலிருக்கும் ஸ்ரீமந்தீரின் மகாராணியான மகாலட்சுமி, தன்னை விட்டு, சகோதர, சகோதரியுடன் சென்றதற்காகக் கோபித்து, ஜெகந்நாத் செல்ல அனுமதி மறுக்கிறார். சில சண்டைகளுக்குப் பின், பூரியின் பாரம்பரிய இனிப்பான ரசகுல்லா கொடுத்து, சமாதானம் செய்து, உள்ளே செல்கிறார் சுவாமி.

இந்த ஆண்டு ரதயாத்ராவைத் தொலைக்காட்சியில்பார்த்தபொழுது,வித்தியாசமான வடிவத்தில் இருந்த பெரிய மூர்த்திகள், வரிசையாக நின்ற பிரமாண்டமான தேர்கள், புதிய வண்ணத் துணிகளால் ஆன அழகிய விமானப் பகுதி, ரதங்கள் நின்றிருந்த அகலமான படா தண்டா, முழுவதும் நிறைந்திருந்த மக்கள் வெள்ளம், பக்திப்பரவசத்தில் மக்களது ஆடல் பாடல் _ அனைத்தும் பிரமிக்க வைத்தன. ரதத்தில் எதற்காக இவ்வளவு மக்கள் ஏறியிருந்தார்கள் என்பது புரியவில்லை.

மூர்த்திகளின் மாறுபட்ட வடிவங்கள், பருவ காலங்களுக்கு ஏற்ப செய்யப்படும் விதவிதமான அலங்காரங்கள், பலவகை நைவேத்யங்கள், வித்தியாசமான சடங்குகள் _ எல்லாமே ஒரு தனித்தன்மையுடன் விளங்குவதே பூரி ஜெகந்நாத் கோயிலின் சிறப்பாகும்.

மகான் இராமானுசர் கோயில் நடைமுறைகளைத் திருத்தி அமைக்க முற்பட்ட போது, இறைவனே அவர் கனவில் தோன்றி, " இவர்களும் என் பக்தர்கள் தான்; அவர்கள் விருப்பப் படியே நடக்கட்டும்" என்று கூறி, அவர் படுத்திருந்த கட்டிலுடன் தூக்கிச் சென்று ஊருக்கு வெளியே வைத்து விட்டதாகவும் கர்ண பரம்பரைக் கதைகள் கூறுகின்றன.

வைணவ, சைவ, சாக்த மதக் கூறுகளுடன், மலை வாழ் மக்களின் வழிபாட்டு முறைகளும் விரவப் பெற்று, ஓரளவு சமண, பௌத்த சமயத் தாக்கத்துடனும் விளங்குகிறது இக்கோயில். அன்ன சேத்திரமாகத் திகழும் இத் திருக்கோயில் இந்தியாவின் நான்கு தெய்வீக நகரங்களில் ஒன்றும் ஆகும்.

## வாசகர் கவனத்திற்கு



**வணக்கம்,**

**நமது மின்னிதழ் சார்பாக மூன்று கோரிக்கைகள் உங்களிடம் வைக்கப்படுகிறது.**

**1. இம்மின்னிதழில் உள்ள கட்டுரைகளைப் படித்துவிட்டு எங்களுக்கு உங்களது விமர்சனங்களை அனுப்புங்கள்.**

**2. வரலாறு, தமிழ், மரபு போன்றவற்றில் ஆர்வமுள்ள உங்களது நண்பர்களில் குறைந்தது இரண்டு பேருக்காவது இவ்விதழை பகிர்ந்து உதவுங்கள். அதன் உரிமையை மின்னிதழ் குழு உங்களுக்கு அளிக்கிறது.**

**3. உங்கள் பகுதியில் உள்ள ஒரு மரபுச் சின்னத்தைப் பற்றியாவது ஒரு சிறு கட்டுரையை எழுதி எங்கள் மின்னஞ்சலான news@heritager.org க்கு அனுப்புங்கள்.**

